# BRIEF AND FAMILIAR

# SKETCHES

OF THE

# DIFFERENT COUNTRIES OF THE WORLD.

BOOK 1—EUROPE.

MADRAS:

PRINTED AT THE PUBLIC INSTRUCTION PRESS.

1857.

# பல தேச சரித்திரச்சுருக்கம்.

---

இது

உலகத்திலுள்ள
பல தேசங்களின் சரித்திரத்தைச்
சுருக்கமாகச் சொல்லியது.

---

புஸ்தகம் க—ஐரோப்பா.

---

MADRAS:

PRINTED AT THE PUBLIC INSTRUCTION PRESS.

1857.

# பொருள் அடக்கம்.

---

# முகவுரை.

## சரித்திரம் - காலநிரூபணம் - புராதன சரித்திரச்சுருக்கம்.

சரித்திரமாவது, வெவ்வேறு சாதிகளுக்குள் அந்தந்தக் காலங்களிற் சம்பவித்த முக்கியமான வர்த்தமானங்களை ஒன்றுகச் சேர்த்து எழுதிய வரலாறும். காலநிரூபணமாவது, அந்த வர்த்தமானங்கள் நடந்த காலங்களைத் திட்டமாகத் தெரிவிப்பதாம். சாதாரணமான சாதனங்களிலும், கல்வெட்டுகளிலும், நாணயங்களிலும், வேறு சாதனங்களிலும் கண்டிருக்கிற குறிப்புகளைச் சார்ந்து, அந்தந்தச் சரித்திர நூலாசிரியர்கள் வெவ்வேறு சரித்திரப்புஸ்தகங்களை எழுதிவைத்திருக்கிறுர்கள். உண்டான வரலாறுகள் அந்தப் புஸ்தகங்களின் வழியாக நமக்குத் தெரியப்படும். சொல்லப்பட்ட காரியங்கள் சம்பவித்த காலங்களும் அவ்வண்ணமாகவே நமக்குத் தெரியவரும். பொதுவாக, சரித்திரமும் காலநிரூபணமும் ஒன்றேடொன்று சம்பந்தப்பட்டவைகளாய் இருந்தும், நுட்பமாகப் பார்க்குமிடத்தில், சரித்திரத்தின் பொருள் வேறும், காலநிரூபணத்தின் பொருள் வேறுமாகத் தோன்றும். எப்படியெனில், சரித்திரமானது பூலோகத்தில் அப்போது அப்போது சம்பவித்த காரியங்களில் சம்பந்தப்பட்ட மனுஷருடைய குணுகுணங்களையும், அவர்கள் கொண்ட கருத்துகளையும், நடந்த கா

ரியங்களுக்கு ஏதுவான சங்கதிகளையும், அவைகளுடன் சேர்ந்த சிறுவிஷயங்களையும், அவைகளால் உண்டான நயநஷ்டங்களையும், அவைகளிற் பாத்தியப்பட்டிருந்த தேசத்தார்களுடைய சீரையும், நாகரீகத்திலும் உபயோகமான தொழில்களிலும் அவர்கள் அடைந்த விருத்தியையும், தேசத்துக்குத் தேசம் உண்டான தாரதம்மியத்தையுங்குறித்துச் சொல்லுகின்றது. காலநிரூபணமோ தேசங்கள்தோறும் வழங்கிய வெவ்வேறான காலவகுப்புகளையும், நாழிகை, தினம், வாரம், மாதம், வருஷம் - இவைகளைக் கணக்கிடும் வகையையும், வெவ்வேறு தேசங்களிலும் காலங்களிலும் வழங்கிய காலாப்தங்களையும, யுகங்களையும், வருஷவட்டங்களையும், நாணயங்களிலும் முத்திரைகளிலுமுள்ள குறிப்புகளையும், எழுத்துகளையும், சரித்திரத்திற் சொல்லப்பட்ட அந்தந்தக் கிரகணங்களின் கணிதத்தையும், உலகப்பொருள்களிலாவது, மனிதர் தாங்கள் செய்த, அல்லது கண்ட காரியங்களைக்குறித்து எழுதிவைத்த பத்திரங்களிலாவது கண்டிருக்கிற காலவரையறைகளையும் ஆராய்ந்து அறியும் வகையைத் தெரிவிக்கும்.

ஐரோப்பா தேசத்திலுள்ள சரித்திரநூலாசிரியர்கள் உலகசரித்திரத்தை இரண்டு பெரிய காலவகுப்புகளாகப் பிரித்திருக்கிறார்கள்; முதற் காலவகுப்பு கிறிஸ்துநாதர் பூலோகத்தில் அவதரிக்குமுன்பு சென்றகாலத்தையும், இரண்டாங் காலவகுப்பு அதற்குப்பின்பு சென்ற காலத்தையுங் குறிக்கும்.

பூர்வத்தில் இருந்த பல சாதியாருக்குள் எபிரோயர் மாத்திரமே தங்கள் சரித்திரங்களைக் காலக்கிரமத்தின்படி எழுதிவைத்தவர்கள். ஆதிகாலம்முதல் நடந்த

சங்கதிகள் அனைத்தும் வேதாகமப் புஸ்தகத்திலே ஒழுங்காய் எழுதப்பட்டிருக்கின்றன. அப்புறம் நடந்த காரியங்களை லௌகிக சரித்திரநூலாசிரியர்கள் தொடர்ச்சியாய் எழுதியிருக்கிறார்கள். வேதசரித்திரத்தின் முற்பகுதியில் வமிசவழி தவறாமல் அந்தந்த முதற்குமாரர் பிறந்த காலமும், அவர்கள் பெயரும், அந்தக் காலத்தில் அவர்கள் பிதாக்களைக்குறித்த நடக்கைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. அதின் பிற்பகுதியில் ஒருவர்பின் ஒருவராய் அந்தந்த இராசாக்கள் அரசாண்ட காலங்கள் தொடர்பாய் எழுதப்பட்டிருக்கின்றன. எபிரேயசனங்கள் வாசம்பண்ணின தேசம் பூர்வ காலத்திலே மற்றுண்டான மனுஷசாதியார் குடியேறிய தேசங்களுக்கு நடுவிலும், அப்போது அப்போது முதன்மை பெற்றிருந்த பெரிய இராச்சியங்களுக்குச் சமீபத்திலும் இருந்ததுந்தவிர, அது சில சில காலங்களில் அந்த இராச்சியங்களில் ஏதாவது ஒன்றுடன் சம்பந்தப்பட்ட ஒரு பகுதியாகவும் இருந்தது. ஆனதினால் உலகசரித்திரத்தில் முக்கியமாய் இருக்கிற சகல விஷயங்களிலும், எபிரேயசாதியாருடைய சரித்திரம் சம்பந்தப்பட்டிருக்கின்றது. எப்படியெனில், தீகிரிஸ், ஐபிராத் என்னும் நதிக்கரைகளில் ஏற்படுத்தப்பட்ட வெவ்வேறு அரசாட்சிகளின் வரலாறுகளும், மத்தியதரையானகடலின் கீழ்க்கரையிலே பிரபலப்பட்டிருந்த நாடுகளின் வரலாறுகளும், எகிப்து, எத்தியோப்பியா, சீரியா, பாபிலோன், பார்சியா என்னும் இராச்சியங்களின் வரலாறுகளுமாகிய இவையெல்லாம் எபிரேயருடைய சரித்திரத்திலே தொடர்ச்சியாக வருகின்றன.

இந்தச் சிறு புஸ்தகம் ஐரோப்பாக்கண்டத்தில் உள்ள முக்கியமான தேசங்களின் நூதன சரித்திரத்தைச் சுரு

க்கமாகச் சொல்லுவதற்கு எழுதப்பட்டதேதவிர, சாதாரணசரித்திரச்சுருக்கத்தையாவது, புராதனசரித்திரச்சுருக்கத்தையாவது சொல்லுவதற்காக அல்ல. ஆதலால் இதில் அந்தந்தத் தேசங்கள் இப்போது இருக்கிற நிலைமைகளுக்குக் காரணமாய் முன்பு நடந்த சங்கதிகளை இன்ன இன்னவென்று தெரிவியாமல், இப்பொழுது உண்டான சீரைக்குறித்துச் சுருக்கமாகச் சொல்லப்படும். ஆகிலும், பூர்வ சாதிகளின் நிலைமையைக்குறித்து மாணாக்கருக்கு ஒருவாறு தெரிவிக்கும்பொருட்டாக, இதன் அடியில் வருஞ் சங்கதிகள் சேர்க்கப்பட்டன.

முதல் முதல் மேன்மை பெற்றசாதியார் அசூரியர் என்பவர்கள். சேம் என்னும் ஒருவனுடைய புத்திரனாகிய அசேர் என்பவன் தீகிரிஸ் ஆற்றங்கரையில் ஒரு பட்டணத்தைக் கட்டி அதற்கு நினிவே என்று பெயரிட்டான்.

நினிவே.—நினிவேபட்டணம் வரவர விர்த்தி அடைந்து மிகவும் அலங்காரமாய் இருந்தது. பின்பு அது சுற்றுப்புறங்களில் இருந்த தேசங்களை ஜெயங்கொண்டதுமல்லாமல், அனேக இராசாக்களிடத்திற் பகுதிப் பணம் வாங்கி வளர்ந்து ஓங்கி மகத்துவமான இராச்சியமாயிற்று. அந்த இராச்சியத்துக்கு அசூரியா என்னும் பெயர் உண்டாயிற்று.

அசூரியராச்சியம்.—ஐஸ்வரியமும் பராக்கிரமுமுடைய அனேக இராசாக்கள் அசூரியாதேசத்திலே அரசாண்டார்கள். அது நினிவேபட்டணம் தோன்றிய நாள்முதல், ௧௪00 - வருஷ காலமாய்ப் பிரபலப்பட்டு அப்புறம் கிறிஸ்து அவதரிக்க ௬00 — வருஷத்துக்குமு

ன்பு நிர்த்தூளியாக்கப்பட்டது. நினிவேபட்டணங் கட்டப்பட்ட காலத்தில் காம் என்பவனுடைய பெயரனாகிய நிம்ருட் அரசன் ஐபிருத் ஆற்றங்கரையில் பலமான வேறொரு நகரத்தைக் கட்டி அதற்குப் பாபிலோன் என்று பெயரிட்டான். இந்த இரண்டு பட்டணங்களும் பல நூற்றாண்டுவரையில் ஒன்றையொன்று வெல்லத்தக்கவைகளாக வல்லமையுடைத்தானவைகளாய் இருந்தன. கிறிஸ்து பிறக்க எ00 - வருஷத்துக்குமுன்பு பாபிலோனியர் பெருமையில் அதிகரித்தவர்களாய், தேவ தீர்க்கதரிசிகள் சொல்லியபடியே நினிவேபட்டணத்தைப் பிடித்து, நிர்மூலப்படுத்தி, அசூரிய இராச்சியத்தைத் தமது அரசுக்கு உள்ளாக்கி அதற்குக் கல்தேய இராச்சியமென்று பெயரிட்டார்கள்.

பாபிலோனியராச்சியம்.—பாபிலோனிய இராச்சியமானது வரவரப் பலத்து எங்கும் பரவிற்று. அதை அரசாண்ட இராசாக்களுக்குள் நெபுகாத்நேசார் என்னும் அரசன் மிகவும் பெரியவனாய் இருந்தான். அவன் அக்காலத்தில் உள்ளவர்களுக்கு அறியப்பட்ட இராச்சியங்கள் அனைத்துக்கும் ஏகாதிபதியாகி, எகிப்து என்னுந் தேசத்தையுந் தன் வசப்படுத்தினான்; ஆகிலும் அந்த இராச்சியத்தின் மாட்சிமையும் பிரதாபமும் எ0 - வருஷத்துக்குள்ளாக ஒழிந்துபோயின. கிறிஸ்து அவதரிக்குமுன்பு ருகூஅ - ம் - ஆண்டளவில் "தங்கநகரம்" என்றும், சகல இராச்சியங்களுக்குள்ளும் "மேலான நகரம்" என்றும், "பெரிதும் பலத்ததும் ஆகிய பாபிலோன்" என்றும் சொல்லப்பட்ட அந்த மேன்மையான இராசதானியை, மீதிய - பார்சிய சாதிகளின் அரசனாகிய கோரேஷ் என்பவன் முற்றுகைசெய்து தன் வசப்படுத்தினான். அவனுக்குப்பின் பட்டத்திற்கு வந்த அரசரில்

ஒருவன் அதை முழுவதும் அழித்து, அதின் உயர்ந்த மதில்களை நிர்த்தூளியாக்கி, இராஜகுமாரர் - குமாரத்திகளையும், பிரப்புக்களையும் வதைத்துக் கொலை செய்ததின்மேல், அங்கே இருந்த வெண்கலக்கதவுகளைப் பெயர்த்துக் கொண்டுபோனான். இவையெல்லாம் தெய்வ தீர்க்கதரிசிகளால் அனேக வருஷங்களுக்குமுன் அறிவிக்கப்பட்டிருந்தன. துன்க்கமார்க்கம், விக்கிரகாராதனை என்னும் தோஷங்களுக்குச் சம்பந்தப்பட்டவைகளானாலும், மிகுந்த சிறப்புப்பொருந்தியவைகளாய் இருந்த பாபிலோன் - நினிவே என்னும் பட்டணங்கள் இரண்டும், எவ்விடத்தில் இருந்தவைகளென்றுஞ் சொல்லக்கூடாதபடி குட்டிச்சுவராய் அழிந்து, பாழாகிச் சிறுமேடுகளாய்க் கிடந்தன.

மீதியர் - பார்சியர் என்னும் சாதியார்கள் பார்சியாதேசத்திலே குடியேறியிருந்த மற்றச் சாதிகளைப்பார்க்கிலும் அதிக செல்வாக்குள்ளவர்களாகி, நாளுக்குநாள் விர்த்தியடைந்தார்கள். கிறிஸ்து பிறக்க கூ00 - வருஷத்துக்குமுன்பு, அவர்கள் மாட்சிமைபொருந்திய கோரேஷ் அரசனுடன் சேர்ந்துகொள்ள, அவன் பாபிலோன் இராஜதானியையும், பாபிலோனிய இராச்சியத்தைச் சார்ந்த நாடு - நகரங்கள் அனைத்தையும் ஜெயித்து, வெகுபிரபலத்துடனே ஏகாதிபதியாய் அரசாண்டான்.

பார்சியராச்சியம்.—கோரேஷ் அரசன் மத்தியதரையானகடல்தொடங்கி இந்துநதியளவும் உள்ள விஸ்தாரமான பூமி முழுவதையும் அரசாண்டான். அல்லாமலும் அவன் ஆபிரிக்காக் கண்டத்தில் உள்ள எகிப்து, லீபியா, எதியோப்பியா என்னும் தேசங்களையும் ஜெயி

த்தான். ஒருபொழுதும் முற்றாய அவனுடைய அதிகாரத்துக்கு உட்பட்டிராத இந்தியா, அரபியா முதலிய தேசங்களும் அவனுக்குப் பகுதிகொடுக்கப் பாத்தியப்பட்டிருந்தன. அவனுடைய இராஜதானி சூசாவென்னும் பட்டணம். இந்தப் பிரகாரமாய் அவனால் ஏற்படுத்தப்பட்ட விஸ்தாரமான இராச்சியம் உ௱ - வருஷம் நிலைபெற்றிருந்தது. கோரேஷ் அரசன் இறந்தபின்பு, அவன் குடும்பத்திலே பல இராஜாக்கள் ஒருவர்பின் ஒருவராய் அரசாண்டார்கள். அதன்மேல் அந்த இராச்சியம் கிரேக்கசாதியாரால் ஜெயிக்கப்பட்டு, அவர்களுக்கு ஆதீனமாயிற்று.

கிரேக்கராச்சியம்.—கிரேக்க இராச்சியத்தார் நாளாவர்த்தியில் விர்த்தியடைந்தார்கள். ஆசியாக்கண்டத்தின் மேற்கு எல்லையில் வாசம்பண்ணின சில பராக்கிரமசாலிகள், பூலோகத்திலே ஜெனங்கள் சிதறுண்டு ௧000 - வருஷமளவு சென்றதின்மேல், கிரேக்கதேசத்திலும், அதைச் சார்ந்த தீவுகளிலும் போய், குடியேறினார்கள். முற்காலத்தில் மக்கேதோனியா என்றும், பின்பு துருக்கியா என்றும் பெயர்கொண்ட தேசத்திலே அவர்கள் கிறிஸ்து அவதரிக்க ௬00 - வருஷமளவில் மிகுதியாய்ப் போய், அங்கேயும், ஐரோப்பாவைச் சேர்ந்த இத்தாலியா முதலிய தேசங்களிலும் குடியேறினார்கள். செல்வம், நாகரீகம், கைத்தொழில்முயற்சி, வித்தை முதலிய விஷயங்களில் அவர்கள் மிகவும் தேற்றம் அடைந்திருந்தார்கள். பின்பு பார்சிய சாதியார் பலத்த இராணுவத்துடனே அவர்கள்மேற் படையெடுத்துப் போய், அவர்களை வென்று பயமுறுத்திப் பங்கப்படுத்தினபின்பு, வந்த வழியே திரும்பிப்போகும்படி ஓட்டி

விட்டார்கள். அப்புறம் யுத்தத்தில் மிகுந்த கீர்த்திப்பிரதாபமுடையவனாய் இருந்த கிரேக்க அரசனாகிய அலெக்சாந்தர் என்பவன், கிறிஸ்து பிறக்க ௪00 - வருஷத்திற்கு முன், தன் குடிகளுடனே பார்சிய இராச்சியத்திற்குப் படையெடுத்துப்போய், பார்சிய அரசனை ஜெயித்து, அவனுடைய இராச்சியத்தை முழுமையுந் தன்வசப்படுத்தி, அங்கே கிரேக்க அரசாட்சியை ஏற்படுத்தினான்.

பின்பு அலெக்சாந்தர் அரசன் ஆசியாக்கண்டத்திற் பிரவேசித்து, இந்துநதியைத் தாண்டி, அங்கிருந்த அதிக பலமும் வீரதீரமுமுடைய அரசன் ஒருவனுடன் சம்பந்த உடம்படிக்கைபண்ணிக்கொண்டு திரும்பினான். திரும்பியபொழுது, அவன் அக்காலத்திலே அறியப்பட்டிருந்த இராச்சியங்கள் அனைத்தும் தன் வசப்பட்டிருந்ததினால், இனி யுத்தஞ்செய்து பிடித்துக்கொள்ள வேறு தேசம் இல்லையென்று கண்டு, மிகுந்த விசனம் அடைந்தானாம். அவன் இறந்தபின்பு, அவனுடைய விஸ்தாரமான இராச்சியம், எகிப்து, சீரியா, சின்னாசியா, கிறீஸ் என்னும் நாலு பகுதிகளாகப் பிரிந்துபோயிற்று. பின்பு அவைகள் ௬00 - வருஷத்துக்குள்ளாகக் கீழ்ப்படுத்தி, ஒன்றாகச் சேர்க்கப்பட்டு, முன்னிலும் அதிகவிஸ்தாரமும் திறமையுமுள்ள இராச்சியமாயின. அதற்கு உரோம இராச்சியமென்று பெயர்.

கிறிஸ்து அவதரிக்க எ௫௬ - வருஷத்திற்குமுன்பு, கிரேக்கதேசம் செல்வத்திலும் பராக்கிரமத்திலும் பாலிய பருவமுடையதாகவும்; அசூரிய இராச்சியம் அதிக மாட்சிமைபொருந்தியதாகவும் இருந்தபொழுது, இத்தாலியாதேசத்தில் இருந்த ஏழை இடையன் ஒருவன் திரளான கொள்ளைக்காரரையும் வேடரையும் கூட்டிச் சே

ர்த்து, அவர்களைத் தனது ஆக்கினைக்குள் அடங்கச்செய்து, ஒரு கிராமத்தைக் கட்டி, அதற்கு உரோம் என்று பெயரிட்டான். அதைக் கண்ட துணிவுடையோர் சகலரும் தங்கள் தங்கள் இடத்தை விட்டு, நாளுக்கு நாள் அங்கே போய்க் குடியேறினார்கள். இப்படிக் கொஞ்சக் காலத்துக்குள்ளே அது வீரத்தன்மையுள்ள யுத்த வீரரால் நிறைந்து, வரவர விர்த்தியாகி, ஒப்பற்ற மாட்சிமை பொருந்தி, பலத்தோங்கிப் பெரிய நகரமாயிற்று.

உரோமராச்சியம்.—கிறிஸ்துநாதர் அவதரித்தகாலத்தில், உரோம இராச்சியத்தை மிகவும் மாட்சிமை பொருந்திய சக்கரவர்த்தியாகிய கைசர் அகஸ்து என்பவன் அரசாண்ட நாளில், அது மேற்கே அத்லந்திக்சமுத்திரம், வடக்கே டானியூப் - றைன் என்னும் நதிகள், கிழக்கே ஐபிருத்நதி, தெற்கே ஆபிரிக்கா - அரபியாவின் பாலைவனங்களாகிய இந்த நாலு எல்லைகளுக்கு உட்பட்ட விஸ்தாரமான பூமி முழுவதையும் அடக்கியிருந்தது. மேற்படி எல்லைகளுக்கு உட்பட்ட தேசங்களொழிய, வேறு தேசங்கள் அக்காலத்தில் இருந்தவர்களுக்கு அறியப்படவில்லை; பிறகு இந்துதேசம், சீனதேசம் இரண்டுந்தவிர, ஆசியாவைச் சார்ந்த மற்ற நாடு - நகரங்களெல்லாம் அப்போது அப்போது உரோம இராச்சியத்திற்கே ஆதீனமாயின. பார்சிய இராச்சியமும், அதைச் சுற்றி நாகரீகவிர்த்தியில்லாத ஜனங்கள் வசித்த சில தேசப்பகுதிகளுமோ, அவர்களுடைய அதிகாரத்தை விலக்கி, அப்புறம் சுயாதீனம் அடைந்தன. கிறிஸ்து அவதரித்து ஐந்து நூற்றுண்டளவும் உரோம இராச்சியத்தின் வல்லமையும் மாட்சிமையும் அதிகமாய்க் குறைவுபடவில்லை. ஆகிலும் அப்பொழுது தானியூப்நதிக்கு வடக்கே

ஐரோப்பாவைச் சார்ந்த நாடுகளிற் சஞ்சரித்த மிலேச்சர்கள், அணைகடந்து செல்லும் ஜலப்பிரவாகம்போல, உரோம இராச்சியத்தின் நாடுகளிற் பிரவேசித்து, எதிரிட்ட யாவரையும் ஜெயித்து, அங்கங்கே தங்கள் அரசாட்சியை நிலைப்படுத்தினார்கள். அந்த மிலேச்சர் ஆதியிலே ஆசியாக்கண்டத்தின் நடுவிலிருந்து புறப்பட்டு, வட ஐரோப்பாவில் உள்ள நாடுகளிலே திரளாய்க் குடியேறியிருந்தவர்களாம். கிறிஸ்து அவதரித்த சளஎ - ம் - வருஷமளவில் கடைசியாக அரசாண்ட உரோம சக்கரவர்த்தி இறந்துவிட, உரோம இராச்சியம் ஒழிந்துபோயிற்று.

மேற்சொல்லிய இராச்சியங்கள் பிரபலப்பட்டிருந்த காலத்திலே, வேறு நாலு தேசங்களும் பெருமை அடைந்திருந்தன. அவைகளில் இரண்டு இந்தியாதேசமும் சீனதேசமுமாம். அந்தத் தேசங்கள் மேற்சொல்லிய எவர்களாலாவது ஒருபொழுதும் முழுமையும் ஜெயிக்கப்படவில்லை. மற்ற இரண்டு தேசங்கள் எகிப்து, பலஸ்தீனு என்பவைகளாம். அவைகள் அப்போது அப்போது ஒன்றுக்கொன்று கீழ்ப்பட்டிருந்ததும் சுயாதீனம் அடைந்ததுமுண்டு. பலஸ்தீனுதேசத்திலே முன்கூறிய எபிரோய சாதியார் குடியேறியிருந்தார்கள்.

பூர்வ காலத்தில் இருந்த இராச்சியங்களுக்குள் எகிப்து இராசியமானது அதிக பல்முடையதாய் இருந்தது. அங்கே யுத்தவித்தையிற் சமர்த்துள்ள திரளான சேனைகளும், குதிரை இராணுவங்களும், போரிரதங்களும் இருந்தன. அத்தேசத்தில் நெடுங்காலந்தொடங்கி இருக்கிற "பிரமிட்ஸ்," என்னும் கோபுரங்களும், தேவாலயங்களும், மலைகளில் விசித்திரமாய் வெட்டப்பட்ட மிகுந்த ஆச்சரியமான பிரேத அறைகளுமாகிய சிற்பவே

லைகள் இந்நாள்வரைக்கும் அழியாதிருக்கின்றன. மேலும் அத்தேசத்தார் முற்காலத்தில் நாகரீகமும், செல்வமும், கீர்த்தியும் பெற்று வாழ்ந்தார்கள் என்பதற்கு அவைகளே பூரணமான திஷ்டாந்தங்களாம்.

பலஸ்தீனுதேசத்திலே பூர்வகாலத்தில் வெவ்வேறு வமிசத்தார் குடியேறியிருந்தார்கள். அவர்கள் சகலரும் ஆதியில் ஒரே குடும்பத்திலிருந்து பெருகினவர்கள். அதற்குக் கானுன்குடும்பம் என்று பெயராம். அவர்கள் பல அரணுன பட்டணங்களைக் கட்டி, அவைகளில் வாசம்பண்ணினுர்கள். அதன்மேல் ஆபிரகாம் என்பவனுடைய சந்ததியாராகிய எபிரோயசாதியார் அவர்களைக் கீழ்ப்படுத்தினுர்கள். அந்த எபிரோயர் நெடுங்காலமாய் எகிப்துதேசத்திலே சிறைப்பட்டிருந்து, குற்றேவல் செய்து, மிகுந்த கஸ்திப்பட்டு வருந்தியதின்மேல், அவர்கள் வெகு ஆச்சரியமானவிதமாய்ச் சிறைமீண்டு, தங்கள் குடும்பத்தலைவனுகிய ஆபிரகாமுக்குக் குறிக்கப்பட்டிருந்த தேசத்தை வசப்படுத்தினுர்கள். அந்தச் சனங்களுடைய சரித்திரத்தைப் பார்த்தால், தெய்வச்செயல் எப்படிப்பட்டதென்றும்; ஒருவனுவது, ஒருசாதியாவது மேலான கடவுள் இட்ட கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பதினுல், அவர்களுக்கு எத்தனை பெரிய நன்மைகள் உண்டாமென்றும் அறியலாம். ஆதலால் அவர்கள் சரித்திரம் மிகவும் விசேஷித்ததும், விரும்பப்படத்தக்கதுமாய் இருக்கின்றது. மேலும் ஐரோப்பிய சாதிகள் அனைவரும் அடைந்திருக்கிற பெருமைக்கும் வாழ்வுக்கும் காரணமாகிய கிறிஸ்துமார்க்கத்தை ஏற்படுத்திய கர்த்தர் மானிட ரூபமாய், எபிரோய சாதியாருக்குள்ளே தோன்றினுர்; அதினுல் அவர்கள் சரித்திரம் அதிக

முக்கியமுள்ளதாய்க் காணப்படும். ஆதியிலே மிகவும் துஷ்டராய் இருந்த ஐரோப்பிய சாதியார், கிறிஸ்து மார்க்கத்தை அனுசரித்ததினால், ஆச்சரியமான சீர் திருத்தம் பெற்றார்கள். அவர்களைக்குறித்த சரித்திரத்தை நன்றாய்க் கற்றுக்கொள்ளும் மாணுக்கருக்கு இந்த விசேஷம் தெளிவாகத் தெரியவரும். எபிரேயர் குடியிருந்த பலஸ்தீனதேசத்திலே கிறிஸ்துமார்க்கத்தை ஸ்தாபித்த மகிமைபொருந்திய சற்குருநாதர் பூலோகத்தில் அவதரித்தபொழுது, உலகத்தார் அறிவிலும் ஒழுக்கத்திலும் சீர்திருத்தம் அடைவதற்கு வரம்பெற்றார்கள். அந்த வரத்தினால் விளைந்த நன்மைகள் மிகவும் ஆச்சரியமானவைகள். அவைகள் நாளுக்குநாள் ஸதிரப்பட்டு, வளர்ந்தோங்கிவருகின்றன. எபிரேயசாதியார் கடவுளைக்குறித்தும், சன்மார்க்கத்தைக்குறித்தும் சத்திய வேதத்திலிருந்து அறியப்பெற்ற உத்தமக் கொள்கைகள், அப்பொழுதே உலகத்தில் எங்கும் பரவத் தொடங்கின. அவ்வாறு நாளாவர்த்தியில் மேற்சொல்லிய கொள்கைகள் விஸ்தாரமாகப் பரவினதினால், உரோம இராச்சியத்தின் தன்மை மாறிப்போயிற்று. மேலும் ஐரோப்பிய சாதிகளெல்லாரும் மனு நீதியிலும், உபயோகமான அறிவிலும் தெளிவு அடைவதற்கும், மனிதருக்குச் சம்பந்தமான உரிமைகளையும் சுயாதீனங்களையும் பகுத்தறிவதற்கும், அந்தக் கொள்கைகளே காரணமாய் இருந்தன. இந்த மேலான சிலாக்கியங்களை அடைந்திருப்பதினால், அத்தேசத்தவர்களுக்கும் மறு தேசத்தவர்களுக்கும் மிகுந்த வித்தியாசம் உண்டாயிற்று. கிறிஸதுமார்க்கம் ஸ்தாபிக்கப்பட்டுப் பரவினதினால், பூலோகத்திலே திரளான நன்மைகள் உண்டாயினவென்று கண்டு, அந்த மார்க்கத்தின் கொள்கைகளை அனுசரித்த சகல தேசத்தார்

களும், தமக்குள் நடந்த முக்கியமான வர்த்தமானங்களின் காலங்களைக் குறிப்பதற்காக, கிறிஸ்து பிறந்த காலத்தையே மத்தியகாலமாக நிறுத்தி, அதற்குமுன்சென்றது இத்தனைவருஷமென்றும், பின்சென்றது இத்தனைவருஷமென்றும் நிதானித்துவருகிறார்கள்.

இந்தப் புஸ்தகத்திலே புராதனசரித்திரத்தைக்குறித்து ஒன்றும் சொல்லப்படாமல், ஐரோப்பாக்கண்டத்தில் உள்ள பிரதான தேசங்களாகிய ருஷியா, சுவேதேன், நார்வே, தென்மார்க், ஹாலண்ட், வெல்ஜியம், ஸ்பேன், போர்ட்டியுகல், இற்றலி, ஸ்விற்சர்லண்ட், ஜர்மனி, ஆஸ்ற்றிறியா, புருஷியா, ஹங்கெரி, துருக்கியா, கிறீஸ், பிரான்ஸ், பிரித்தானியா இவைகளின் நூதனசரித்திரம் சுருக்கமாகச் சொல்லப்படும்.

குறிப்பு.—இனிமேல் ஆசியா, ஆபிரிக்கா, அமெரிக்காகண்டங்களின் சரித்திரச்சுருக்கம் அச்சடிக்கப்படும்.

---

## ருஷியாதேசம்.

ருஷியாதேசமானது, ஆதிகாலத்திலே ஒருவரோடொருவர் யுத்தஞ்செய்து, ஆளுக்காள் வெல்ல வகைபார்த்து, வாதாடிக்கொண்டிருந்த பல மிலேச்சர் வமிசத்தாரால் குடியேறப்பட்டிருந்தது. இவ்வளவேதவிர, ருஷியாதேசத்தின் சரித்திரவரலாற்றைக்குறித்து, ௧௭-ம்-நூற்றாண்டுக்குமுன் அதிகமாய் ஒன்றும் தெரியவரவில்லை. அந்த மிலேச்சரில் மஸ்கோவியர் என்னும் வகுப்பார், முக்கியமும் வல்லமையுமுள்ளவர்களாயிருந்தார்கள். அவர்கள் அதற்குமுன் நிலைபெற்ற அரசாட்சியை உடை

யவர்களாயிருந்தார்கள். அவர்களுடைய இராச்சியத்துக்கு மொஸ்கோநகரம் இராஜதானியாக இருந்தது. அதுமுதல் அவர்களை அரசாண்ட இராஜாக்களின் பட்டப்பெயர் த்சார் என்பது. மொஸ்கோ மிகுந்த அலங்காரமும் விஸ்தாரமுமான நகரம். ௧௭-ம்-நூற்றுண்டின் முடிவிலே பெரியவர் என்று மறுநாமமுள்ள பீற்றர் என்பவர் ருஷியசனங்களுக்கு அதிபதியாயிருந்தார். அவர் தமது குடிகள் ஐரோப்பிய துரைத்தனங்களுள்ளெல்லாம் தலைமைபெற்றுச் சிறந்திருக்கும்படியாக, அவர்களை உயர்த்த விரும்பி, தகுதியான முயற்சிகளைச் செய்தார். ஆதலால் அவர் அவர்களைச் சீர்திருத்தவேண்டுமென்றெண்ணி, மறு தேசத்தாருக்கு உண்டான பெருமைக்கும் செல்வத்துக்கும் காரணம் என்னவென்று கண்டறியும்படி, அங்கங்கே போய்ப் பார்த்துவந்தார். தாம் நினைத்த காரியத்துக்கு உபயோகமான கல்விகளிலும் தொழில்களிலும், உலாந்தாக்காரரும் அங்கிலோசாதியாருமே திட்டமாகத் தேர்ந்தவர்களாயிருந்தபடியால், அவர் அந்த இரண்டு சாதியாருடைய தேசங்களுக்கும் பிரயாணப்பட்டார். பின்பு அவர் தம்முடைய குடிகளுக்குக் கற்றுக்கொடுக்க விரும்பிய விஷயங்களைக் கண்ணுற் பார்வையிடுவதுமாத்திரம் போதாதென்றெண்ணி, தாமே அவைகளைக் கவனமாய்க் கற்றறியக் கருத்துக்கொண்டவராயிருந்தார். அவர் அந்தப்படி மேற்சொல்லிய இரண்டு தேசங்களிலும் கப்பல் செப்பனிடும் துறைகளுக்குப் போய், அங்குள்ள தொழிலாளிகளுடனே தாமும் ஒருவராகச் சேர்ந்து, கப்பல் செப்பனிடும் முறையையும் தச்சுத்தொழிலையும் நன்றாய்ப் பழகினார்; பழகிவருங்காலத்தில், தாம் முன்பு இராச்சியபாரம் ஒப்பித்துவந்த மந்திரிகளுக்குத் துரைத்தனவிஷய

த்தைச் சார்ந்த சட்டதிட்டங்களையெல்லாம் நுட்பமாக எழுதி அனுப்புவித்துக்கொண்டிருந்தார். தாம் கருதிப் போன விஷயங்களைப் பூரணமாய்க் கற்றுக்கொண்டதின்மேல், அவர் தமது தேசத்திற்குத் திரும்பிப்போய், முன்போல அரசாட்சியை ஒப்புக்கொண்டு, அதை ஒழுங்குபடுத்தி, தமது சாதியாருக்குள் அதிக சீக்கிரத்திலே பெரிய மாறுதல் உண்டாகும்படி பண்ணினார்; தமது இராச்சியத்திலே அடிக்கடி உண்டான கலகங்களை அடக்கினார்; அன்னியதேசத்தாரைச் செயித்தார்; கடலிலும் கரையிலும் யுத்தத்திற்கு உபயோகமாகச் சேனைகளையும் மரக்கலங்களையும் ஏற்படுத்தினார்; சாதாரண பாடசாலைகளையும், உயர்ந்த கல்விச்சாலைகளையும் ஸ்தாபித்தார்; அன்னியதேசத்தார் தமது இராச்சியத்தில் வந்து பலபல கைத்தொழில்முயற்சிகளைச் செய்வதற்கு இடங்கொடுத்தார். அவர் துறைமுகத்தில் இராஜதானிநகரமொன்றைக் கட்டி ஆதரிப்பது அவசியமென்று கண்டு, வால்த்திக்கடற்கரையில் சிறந்த ஒரு பட்டணத்தைக்கட்டி, தமது சுயநாமத்துக்கு ஞாபகக்குறியாக, அதற்குச் சேண்ட் பீட்டர்ஸ்பர்க் என்று பெயரிட்டார். ஆகிலும் இத்தனை உபயோகமான ஏற்பாடுகளையும் சீர்த்திருத்தங்களையும் சித்தியாக்கும்படி, ருஷிய அரசன் சனங்களுக்குச் செய்த கொடுமையும் நிஷ்டூரமும் மிகுதியாயிருந்தன. அவர்களுக்கு எத்தனை சுகத்தாழ்வு நேரிட்டபோதிலும், அதை அவர் சற்றுவது நினையாமல், எதுவிதமும் தமது இஷ்டத்தை நிறைவேற்ற வகைதேடினார். அவர் மேற்படி இராஜதானியை அதிகசீக்கிரங் கட்டிமுடித்தாரென்று, எவர்களும் அறிந்து தம்மை மெச்சிக்கொள்ளும்படியாக, அதைக் கட்டின வேலைக்காரரைக் கட்டாயம்பண்ணி, மிகவும் கிலே

சப்படுத்தினார். அப்பொழுது அனேகம் ஆயிரம் சனங்கள் அவர் செய்த நிஷ்டூரத்தினாலே பிராணசேதப்பட்டார்கள்.

பீற்றர் என்னும் அரசன் அரசாட்சியே பெரிதென்றெண்ணி, அதை அதிகரிக்கப்பண்ணி, தமது இராச்சியத்தைப் பலப்படுத்தி, மேன்மையுள்ளதாக்குவதற்குப் பிரயாசப்பட்டார். ஆனதினால் பலவகையான வித்தைகள், வியாபாரம், கைத்தொழில்முயற்சி, கல்வி முதலிய விஷயங்களைத் தமது ராச்சியத்திலே விருத்தியாக்கும்படி மிகுந்த ஊக்கத்துடன் முயற்சிபண்ணினார். விசேஷமாய் சேனைகளையும், யுத்தமரக்கலங்களையும் ஏற்படுத்துவதுதான் அவருடைய நோக்கமாயிருந்தது. அவர் தமது இரணுவவீரர்களைத் திறமையும் தேர்ச்சியுமுள்ளவர்களென்று கண்டவுடனே, அவர்கள் ஆண்மையைப் பரீட்சிக்கும்படியாக, சுவேதேன்தேசத்தின் அரசனாகிய ௧௨ - ம் - சார்ல்ஸ் என்பவர்மேற்படையெடுத்துப்போனார்: அங்கே போய்ச்சேர்ந்ததின்மேல், பல முறையும் யுத்தஞ்செய்து தோல்வியடைந்தும், கடைசியாய்ப் பல்த்தோவா என்னும் இடத்திலே நடந்த பெரிய சண்டையில், அவர் முழுவதும் வெற்றிசிறந்தவராய்ச் சுவேதேனியருடைய துரைத்தனத்தைச் சார்ந்த பல இடங்களைத் தன்வசப்படுத்தினார். அப்புறம் அவர் துருக்கியசேனைகளையும் தருத்தாரியசேனைகளையும் ஜெயித்து, அவர்கள் தேசங்களிற் சில பகுதிகளை வசப்படுத்தி, தமது இராச்சியத்தை விஸ்தாரமாக்கினார். பின்பு அவர் தாம் விரும்பியபிரகாரம் தமது தேசமானது, இராணுவபலத்தில் ஐரோப்பியதுரைத்தனங்களுக்குள் முதன்மைபெற்றதாயிருக்கிறதென்று கண்டு, க

ளிப்படைந்திருந்தார். இந்த அற்புதமான அரசன் க,எஉ௫ - ம் - வருஷம் மரணமடைந்தார்.

அவருக்குப்பின் பட்டத்திற்கு வந்த அரசர்கள், அவர் செய்த வழக்கத்தின்படி, இலக்கண்விலக்கியங்கள், விசித்திரமான வித்தைகள், கைத்தொழில்முயற்சிகள், வர்த்தகம் முதலிய உபயொகமான காரியங்களை இதுவரையில் அபிவிர்த்திசெய்துவந்தார்கள்; அதுவுமன்றி, முக்கியமாய்க் கரையிலும் கடலிலுமுள்ள இராணுவங்களை, தொகையிலும் வல்லமையிலும் அதிகரிக்கப்பண்ணும்படியாக எத்தினம்பண்ணிவந்தார்கள்; வரவர அதிகமான தேசங்களைக் கட்டியாளவேண்டுமென்கிற நோக்கம் ஒருபொழுதும் அவர்கள் மனதை விட்டு ஒழிந்துபோகவில்லை. உண்டான நோக்கம் மேன்மேலும் அனுகூலப்பட்டது. அவர்கள் இராச்சியம், வால்த்திக்கடல், பஷிபிக்சமுத்திரம், வடகடல், கருங்கடலாகிய இந்த நாலு எல்லைகள்மட்டும் பரம்பியிருக்கின்றது. மேற்கே போல்ண்ட் தேசத்தின் மிகுதியான பகுதியும், தேற்கே ஜார்ஜிய - ஸர்காஷியதேசங்களும், ருஷிய அரசாட்சிக்குட்பட்டிருக்கின்றன. மேலும் தருத்தாரியாவின் மாகாணங்களில் எளிதாய் அடக்கி வசப்படுத்தக்கூடாத சாதியாரை, ருஷியதுரைத்தனத்தார் அடக்கி ஆண்டுவருகிறார்கள். ருஷியராச்சியத்தில் உள்ள ஜனங்களின் தொகை கூ - கோடி.

இவ்வளவு விஸ்தாரமுள்ளதாயிருக்கிற ருஷியாதேசம், மிகவும் குளிர்ச்சியான தேசமாயிருப்பதினால், உள்நாடுகளில் எளிதாகப் போக்குவரவுசெய்வதற்குத் தகுதியான வழிவகைகள் இதுவரையில் அனேகம் இல்லாதிருந்தும், இப்பொழுது இருப்புப்பாதைகளைச் செய்

பணிடுகிறதற்குத் தொடங்கியிருக்கிறார்கள். ருஷியாவிலும் அதிக சிறியவைகளான ஸ்பேன், இற்றலி என்னுந் தேசங்களில் உள்ள சாதாரண செளக்கியங்களில் அனேகம் அங்கில்லை; ஆகிலும் அங்கே பொருள்வரவுக்கு உதவியான ஏதுகள் அனேகமுண்டு; விலையுயர்ந்த லோகங்கள் விளைகிற சுரங்கங்கள் மிகுதி. சிபேரியாவிலும் யூறல்மலைகளிலும் பொன், வெள்ளி, இரும்பும், மிகுந்த உபயோகமுள்ள லோகமாகிய பிளாற்றினம் என்பதும், உயர்ந்த கல்வகைகளும் திரள்திரளாய் உண்டாகின்றன. வட மாகாணங்களிலும், சுவேதேனிய ஜர்மானியதுரைத்தனத்தாரிடத்தினின்று ருஷியர் கைவசப்படுத்திக்கொண்ட வால்த்திக்கடற்கரையைச் சார்ந்த மாகாணங்களிலும், தேவதாரி, ஜாதிக்காய்மரம், பர்ச்சு முதலிய மரங்கள் நெருங்கிய விஸ்தாரமான காடுகளுண்டு. அங்கிருந்து வெட்டப்படுகின்ற திரளான மரங்களில் விதம்விதமான வேலைகள் செய்யப்படுகின்றன. அராபியருக்குப் பேரீந்தும், இந்துக்களுக்குத் தென்னமரமும் அனேக விஷயங்களில் உபயோகப்படுவதுபோல, பர்ச்சு என்னும் மரம் அடுத்த மாகாணங்களில் வசிக்கும் சனங்களுக்கு உபயோகமுள்ளதாயிருக்கும். அதின் குருத்திலைகளும், இளந்தழைகளும் பல வியாதிகளுக்கு ஒளஷதங்களாகப் பிரயோகிக்கப்படும்; அவைகள் முதிர்ந்து அதிக பசுமைகொள்ளும் பருவத்தில், அவைகளினால் உசிதமான மஞ்சட்சாயம் உண்டுபண்ணப்படும். அவைகள் சருகாய் உலர்ந்து உதிரும்பொழுது, மிருதுவான தலையணைகளுக்கும் மெத்தைகளுக்கும் போடுவதற்கு உபயோகமாகும். அந்த மரத்தினாலே கட்டில், நாற்காலி முதலிய வீட்டுச்சாமான்கள், பலவகை ஆயுதங்கள், ஏர்த்தொழிலுக்கு உரிய கருவிகள் செய்யப்படுவதுமன்றி,

அதில் அதிகமான கரியும் சுடப்படும்; அதின் பட்டையினால் வீடுகளை வேவார்கள்; பாதரட்சைகளை உண்டுபண்ணுவார்கள்; ஒருவகையான கறுத்தமையைச் சேர்ப்பார்கள்: அதின் சாரத்தினால் மிகவும் மதுரமான பானம் உண்டுபண்ணி விற்பார்கள்; மேலும் அதிலே தித்திப்பான பாகு செய்து, அதைச் சர்க்கரைக்குப் பதிலாகப் பிரயோகிப்பார்கள்.

மேற்சொல்லிய மாகாணங்களிலே குளிர் மிகுதி: அங்கே பழந்தருமரங்கள், பூஞ்செடிகள், கீரைவகைகள் இவையெல்லாம் கண்ணாடியால் மூடப்பட்ட வீடுகளுக்குள் உண்டாவதேயொழிய, வெளியிலே உண்டாகிறதில்லை. ஆகிலும் குளிர்ந்த தேசப்புறங்களிற் பயிராகத்தக்க வாற்கோதுமை முதலான இரண்டொரு கோதுமைவகைகளும், ஓத்ஸ் தானியமும் அங்கே வெகு விஸ்தாரமாக விளைகின்றன. அங்குள்ள உத்தமமான சணல்வகைக்கு ஒப்பாய் உலகத்தில் வேறு எங்குங்கண்டதில்லை. அந்த மாகாணங்களில் இருக்கிற முக்கியமான பட்டணங்கள்—வின்லண்ட் மாகாணத்தில் அபூநகரம், எஸ்தோனியாவில் றிவேல்நகரம், லிவோனியாவில் றிகாநகரம், கோர்லண்டில் மிற்றோநகரம் இவைகளே. ருஷியராச்சியத்திலே வர்த்தகவிஷயத்திற்கு முக்கியமான பட்டணம், அதின் இராஜதானியாகிய சேண்ட் பீற்றர்ஸ்பர்க் என்பது. அதற்கு இரண்டாந்தரமானது றிகாபட்டணம். அங்கிருந்து புறத்தேசத்திற்கு அனுப்பப்படும் பிரதானமான வியாபாரங்கள் – தானியம், சணல்வகை, வெட்டுமரம், குங்குலியம், கயிறு, கிசில், பசுக்கொழுப்பு முதலியவைகளாம். அந்தப் பட்டணம் டுவைனா ஆற்றங்கரையிலே கட்டப்பட்டிருக்கின்றது. வருஷத்திலே சில மாதங்க

ளில் அந்த ஆறும் வால்த்திக்கடலும் உறைந்து, கல்லைப்போல் இறுகிப்போகின்றன; ஆதலால் அங்கே நடக்கிற பிறதேச வியாபாரமுயற்சிகளெல்லாம் அக்காலத்திலே நிறுத்தப்படும்; ஆகிலும் ஆறுமாதத்திற்கு மேற்பட அவ்விடத்திலே வியாபாரப்போக்குவரவு மிகுதியாய் நடக்கும். ருஷியாவின் உள்நாடுகளிலும் தென்னாடுகளிலும் தானியவகைகள் மிகுதியாய் விளையும்; அங்கே ஆடுமாடு அதிகமாயுண்டு; தென்பூமி முழுமையும் சமுத்திரத்தின் நீர்மட்டத்துக்குமேலே க,௫00 - அடியளவு உயர்ந்து, அனேகநூறு மைல்தூரமளவு விஸ்தாரமாகி, எங்கும் சமனாயிருக்கின்றது. அந்தச் சமவெளி நெடுக ஓரேதிட்டமாய்ப் பரந்து, கார்பேதியன்மலைதொடங்கி அல்றூமலையளவும், விஸ்தரித்திருக்கின்றது. அதற்கு ஸ்டெப் என்று பெயருண்டு. அதில் ஒரு மரமாவது, செடியாவது காண்பதரிது; ஆகிலும் அங்கே வருஷத்துக்குவருஷம் அனேக மாதங்களில் புல் அதிகமாய்த் தழைத்துப் படர்வதினால், ஏராளமான ஆடுமாடுகளுக்கும், குதிரைகளுக்கும் மேய்ச்சல் எவ்வளவுந் தாழ்வில்லை. அத்தேசத்திலே விளைகிற தானியங்களும், முக்கியமாய்க் கோதுமையும், புறத்தேசங்களுக்கு அனுப்பப்படும். வருஷத்திலே மூன்று மாதமளவும் மேற்சொல்லிய வெளி அடங்கலும் உறைந்தபனியால் மூடப்பட்டிருக்கும். மேலும் தேசத்தைப் பாழ்ப்படுத்துகிற ஒரு வகையான பெருங்காற்று வீசும். கோடைகாலத்தில் வெப்பத்தின் மிகுதியால், தரை உலர்ந்து வரண்டு பாழாய்க்கிடக்கும்; அப்போது ஆடுமாடு, குதிரைகள் ஆயிரக்கணக்காய் அழிந்துபோம்; ஆனாலும் வசந்தகாலத்திலும் இலையுதிர்காலத்திலும் அங்கே அதிக சௌக்

கியமுண்டு: பயிர் செடிகள் மதர்த்து வளரும். அத்தேசத்தின் குடிகள், கணவாய்களிலும், அருவி அரித்துப் பாய்வதினுலே பதிந்து வரண்டிருக்கும் பள்ளமான இடங்களிலும், வீடுகட்டுவார்கள்: மேலும் உரமாக வீசும் காற்றுக்கும் குளிருக்கும் தப்பிக் கொள்ளும்படி, அவர்கள் நிலத்தைக் குடைந்து, அறைகளை உண்டாக்கி, அவைகளில் வாசம் பண்ணுவார்கள்; அப்படியே தங்கள் ஆடுமாடுகளுக்கும் நிலவறைவீடுகளைத் தோண்டுவார்கள். அவர்கள் மிகவும் அவிவேகமும் அசாக்கிரதையுமுள்ளவர்களாயிருப்பதினுலே, வசந்தகாலத்திலும், இலையுதிர்காலத்திலும் திரளாய் உண்டாகிற புல்லை வெட்டிக், காயப்போட்டுக் கட்டி வைத்திருந்து, வரட்சியான கோடைகாலத்திலும், குளிரான மாரிகாலத்திலும், தங்கள் ஆடுமாடுகளுக்குப் போட்டு, அவைகளைக் காப்பாற்ற நினையாமல், அவைகள் பசியினுல் வதங்கிக் குளிரால் விறைத்துச் சாகும்படி விட்டுவிடுகிருர்கள். இப்படி அவர்களெல்லாரும் புத்திக்குறைச்சலுள்ளவர்களல்ல; இழிசனர் மாத்திரமே. அங்குள்ள தலைமக்களுக்குச் சொந்தமாக விஸ்தாரமான நிலங்களும், அவைகளில் விலையுயர்ந்த சிங்காரமான வீடுகளுமுண்டு. அவர்கள் தாங்கள் வசிக்கும் இடத்துக்கு நாலுபக்கங்களிலும் அதிக செலவிட்டு, சிறப்பான தோட்டங்களைச் செய்விப்பார்கள். ஒடெஸ்ஸா என்னும் பட்டணம் தென்ருஷியாவுக்குத் தலைப்பட்டணமாம். அது கருங்கடற்கரையிற் கட்டப்பட்டிருக்கின்றது. அங்கே வியாபாரத்தொழில் மிகுதியாய் நடக்கின்றது. அங்கிருந்து முக்கியமாய் கோதுமை, மாட்டுத்தோல், வேறு சிறுமிருகங்களின் தோல், பசுக்கொழுப்பு முதலிய பண்டங்களைப் புறத்தேசங்களுக்கு அனுப்புவார்கள். மிருகத்தோலின் மேற்புற

த்தில் உள்ள உரோமத்தினாலே விலையுயர்ந்த வஸ்திரங்களை நெசவுபண்ணுவார்கள். சிவிங்கி, கருநரி, ஸெபில் என்னும் கீரி முதலிய மிருகங்களின் உரோமம் அதிக விலையுயர்ந்தது. அது வால்த்திக்கடற்கரையில் உள்ள துறைமுகங்களினின்றும் ஏற்றப்படும். ஒடெஸ்ஸாநகரத்திலே முக்கியமாய் நடக்கிற வியாபாரமுயற்சி, பசுக்கொழுப்பை உருக்கி ஆயத்தம்பண்ணுவதாம். அங்கே கொழுப்பு உருக்கும்படி வர்த்தகர் கட்டியிருக்கிற சாலைகள் அனேகமுண்டு. கிரிமியாவில் இருக்கிற சிபாஸ்தபூல் நகரம் மிகவும் முக்கியமான இடம். அங்குள்ள கோட்டைகள் மிகவும் பலமானவைகள். கிரிமியாவை ஒருவகையாய் ருஷியாவின் தோட்டமென்று சொல்லலாம். மேற்குக்கரையை அடுத்த பள்ளத்தாக்குகளில் உரத்து வீசுகிற கீழ்காற்றும், புயலும் அதற்குள்ளே செல்லாதபடிக்கு, அது மலைக்காவலுள்ளதாயிருப்பதினால், அங்கே அதிக சௌக்கியமுண்டாயிருக்கும். அங்கே ருஷிய பிரபுக்களுக்குரிய சிறப்புள்ள பெரிய தோட்டங்களுமுண்டு; அவைகளில் பழந்தருகிற பலவகையான மரங்களும், சிறப்பான பூஞ்செடிகளும் செழித்திருக்கின்றன. திராட்சக்கொடி பக்குவமாய்ச் செய்கைபண்ணப்படுகின்றது. அதின் கனியில் முதன்மையான திராட்சரசம் வடிக்கிறார்கள். கிரிமியாமாகாணத்திலும், அடுத்த சமனான வெளியிலும் வேளாண்மைத்தொழில், தோட்டச்செய்கை, விவேகமும் திறமும் விசேஷமாய் வேண்டியிருக்கிற பலவகையான முயற்சிகள், இவையெல்லாம் ஜர்மானியர் முதலிய அன்னியதேசத்தாரால் செய்யப்பட்டுவருகின்றன. கருங்கடற்கரையிலே திரளான உப்பு விளைகின்றது.

ருஷியராச்சியத்திலே அதிக பிரபலமான பட்டணங்

கள் அனேகமில்லை. அதின் ராஜதானியாகிய சேண்ட் பீற்றர்ஸ்பர்க் நகரம் ஐரோப்பாதேசத்தில் உள்ள அதிக சிறப்புப்பொருந்திய பட்டணங்களில் ஒன்று. அங்குள்ள வீடுகள் மிகவும் சிங்காரமாகக் கட்டப்பட்டவைகளும், வீதிகள் விஸ்தாரமானவைகளுமாயிருக்கின்றன; அங்கே சிறப்பான பெரியதோட்டங்கள் அனேகமுண்டு; அவைகளைப் பத்திரப்படுத்திச் செழிப்பாக்கும்படிக்கு, அதிக செலவு செய்துவருகிறார்கள். அந்தப் பட்டணம் நீவா என்னும் ஆற்றங்கரையிற் கட்டப்பட்டிருக்கின்றது. அந்த ஆற்றின் தண்ணீர் தெளிவும் மதுரமுமாயிருக்கிறதென்று எவர்களும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். பட்டணங் கட்டப்பட்டிருக்கிற நிலம் சதுப்பானது; ஆதலால் பெரு மரங்களை அடுத்து, நிரை நிரையாய் பூமிக்குள்ளே ஆழமாய் ஏறும்படி கடாவி, அவைகளுக்குமேல் அத்திவாரம்போட்டு, அந்தப் பட்டணத்தில் உள்ள கட்டடங்களைக் கட்டினார்கள். அங்குள்ள வீடுகளில் அனேகம் மரத்தினாற் கட்டப்பட்டு, சாயம்பூசிய இருப்புத்தகட்டால் மேற்றளமிடப்பட்டவைகள். அப்படி இருப்பதினால் அவைகள் மிகவும் அலங்காரமாய்த் தோற்றும்.

சேண்ட் பீற்றர்ஸ்பர்க் பட்டணத்திலே, கப்பல்கள் தங்கும் இடமாகிய கிரேன்ஸ்ட்டாட் என்னும் துறை, நீவா நதியின் முகத்துவாரத்திலே மிகவும் பலமாய்க் கட்டப்பட்டிருக்கின்றது. அந்தத் துறைமுகம் வால்த்திக்கடற்கரையில் உள்ள மற்றத்துறைகளைப்போல வருஷந்தோறும் சில மாதங்களில் உறைந்துபோகிறது. அங்கே வெம்மை குளிர்மை இரண்டும் மிகுதி. வருஷத்துக்குவருஷம் ஆறுமாதமளவும் ஆறு முழுவதும் உ

றைந்துபோகத்தக்கதாய், குளிர் மிகுந்திருக்கிறது. நடுக்கோடைகாலத்தில் அந்த அளவாகவே வெப்பமும் அதிகரிக்கிறது. வடதேசப்புறங்களைப்போல அங்கேயும் இராக்காலம் அதிகம் நீடித்திருக்கும். சூரியனுடைய பிரகாசம் மிகவும் கொஞ்சநேரத்திற்குமாத்திரம் தோன்றும்; ஆகிலும், சந்திரனுடைய பிரகாசத்தினாலும், ஒரொரோ போறியலிஸ் என்னும் வடதிசைவெளிச்சத்தினாலும், உறைந்த பனியின்மேற் பிரதிவிம்பமாகத் தோன்றிய ஒளியினாலும், இராக்காலத்திலே மிகவும் சந்தோஷகரமாயிருக்கும். அங்கே கோடைகாலத்திலே சூரியன், அஸ்தமித்துக் கொஞ்சநேரம் சென்றதின்மேல், திரும்பி உதயமாகும்; ஆதலால் இராக்காலம் அதிகம் குறுகியிருக்கும். இராத்திரிகாலத்தில் அதிக சௌக்கியமுண்டு. அந்த நகரத்தில் சக்கரவர்த்தியும், தலைமையான பிரபுக்களும் வாசம்பண்ணுவார்கள். அங்குள்ள இராசபரிசனத்தின் மாட்சிமை, ஐரோப்பாதேசத்தில் இருக்கிற அரமனைகளுக்குள்ளெல்லாம், முதன்மையாயிருக்கின்றது. ரூஷியசாதியார் கூடி, ஆடி, வேடிக்கை விநோதஞ்செய்வதற்கு மிகுந்த விருப்பமுள்ளவர்கள். சேண்ட் பீற்றர்ஸ்பர்க் நகரத்தில் எப்பொழுதும் பலவகையான விநோதங்கள் நடப்பது வழக்கம்.

ரூஷியாதேசத்தின் பழைய இராஜதானியாகிய மொஸ்கோநகரமானது, நெடுநாட்பட்டதும், ஆச்சரியப்படத்தக்கதுமாயிருக்கின்றது. ரூஷியசாதியார் அதை வணங்கப்படத்தக்க இடமென்றெண்ணிப் போற்றிவருகிறார்கள். க,அகஉ - ம் - வருஷம் பிராஞ்சியசக்கரவர்த்தியாயிருந்த மஹா நப்போலியனவர்கள், ரூஷிய தேசத்திற்குப் படையெடுத்துச் சென்றபொழுது, மோஸ்கோபட்டணத்தார் மிகுந்த ஊக்கமாய் அவரோடு எதிர்த்துச் சண்டைசெய்து

கீர்த்தியடைந்தார்கள். ஆகிலும் கடைசியாய் அங்கிருந்த குடிகள் அந்தச் சக்கரவர்த்தியைச் சண்டையால் வெல்லத் தங்களுக்குத் திராணி போதாதென்று கண்டு, அவர் தமது எண்ணிறந்த சேனைகளுடன் தங்களால் வணங்கப்படத்தக்க பட்டணத்திற்குச் சமீபித்து வந்தபொழுது, மிகவும் துணிகரமாய் அதைவிட்டுப் புறப்பட்டுச் சுட்டெரித்தார்கள். ஆதலால் சத்துருக்கள் போசனத்துக்குக் கெதியற்று, கடுமையான குளிருக்கு ஒதுங்கும்படி புகலிடமில்லாமல், பட்டினியினாலும் கஸ்திகளினாலும் அவதிப்பட்டார்கள். அப்பொழுது அவர்களில் அனேகம் ஆயிரம் சனங்கள் மாண்டுபோனார்கள். அதைக் கண்டு நப்போலியசக்கரவர்த்தியவர்கள் தாம் நினைத்துப் போயிருந்த நோக்கத்தை விட்டு, மீதியான சனங்களுடனே சொல்லிமுடியாத துன்பத்தோடு தமது தேசத்துக்குத் திரும்பிவிட்டார்.

ருஷியாதேசத்திலே அனேகம் பெரிய ஆறுகள் உண்டு:— வோல்கா, டான், ஸ்நைதர், டுவைனா என்னும் ஆறுகள் ஐரோப்பாவைச் சேர்ந்த மாகாணங்களிலும்; ஓபி, எர்த்திஷ், லீனா, என்னிசி என்னும் ஆறுகள் சைபீரியாவிலும் இருக்கின்றன. வருஷத்துக்குவருஷம் சில மாதங்களில் மேற்சொல்லிய ஆறுகள் முழுமையும் உறைந்திருக்கும். ஆகிலும் குளிர்காலத்திலே கட்டியாய் உறைந்த பனியின்மேல் சறுக்குவண்டிகள் எளிதாகவும் வேகமாகவும் செல்லக்கூடியதினால், பிரயாணம்பண்ணுவதற்கும், சரக்குப் போக்குவரவுசெய்யப்படுகிறதற்கும் அதுவே தகுதியான காலம். கோடைகாலத்திலோ, கட்டியாக உறைந்திருக்கும் பனி உருக, எங்கும் சேறும் சதுப்புமாயிருப்பதினால், போக்குவரவுசெய்வது வருத்தமாயிருக்கும். டுவைனா, வோல்கா என்னும் ஆறுகளுடன் கலந்த பெரு

வாய்க்கால் ஒன்று தேசத்துக்கூடே இருக்கின்றது. மற்றொன்று வடக்கே ஆர்க்கேன்ஜல் என்னும் பட்டணந் தொடங்கி, மொஸ்கோபட்டணம் அளவும் எட்டியிருக்கின்றது. மேலும் மொஸ்கோபட்டணந் தொடங்கி, சேண்ட் பீற்றர்ஸ்பர்க் இராஜதானிவரைக்கும் இருப்புப்பாதை ஒன்று செப்பனிடப்பட்டிருக்கின்றது; எப்படியும் மாரிகாலத்திலே எளிதாகப் போக்குவரவுசெய்யக்கூடியதாய் இருப்பதினால், அங்கங்கே போக்குவரவுபண்ணும் விஷயத்தில் இதுவரையிற் செய்யப்பட்டிருக்கிற திருத்தங்கள் மிகவும் சொற்பந்தான்.

ருஷியாதேசத்திலே சாதாரணமான கட்டடங்கள், துரைத்தன சம்பந்தமான ஏற்பாடுகள், சனசங்கார்த்தமான விஷயங்கள் இவையெல்லாம் வெளிக்குக் கண்ணைப் பகட்டத்தக்க வேஷமாகத் தோற்றும்; சற்று ஊன்றிப் பார்த்தாலோ, அவ்வளவு திர்ப்திகரமாய் இராது; ஆதலால் பார்த்தவுடனே இது உள்ளது, இது வெறுந்தோற்றமென்று உறுதியாகச் சொல்லுவது அருமை. அரசாட்சியின் அதிகாரமெல்லாம் த்சார் என்னும் சக்கரவர்த்தியினிடத்தில் இருக்கிறது. குடிகள் யாவரும் அவரை மிகுந்த வணக்கத்தோடே மதிப்பார்கள். அவர் விரும்பியவைகளையெல்லாம் அவர்கள் செய்வது அவசியம்; செய்யாவிட்டால் அவருக்கு வெறுப்பு உண்டாகும்; அவர் எவர்களையாவது வெறுத்தாலோ, அவர்கள் தப்புவது அருமை. அரசாட்சிக்குரிய மிகவும் அற்பமான விஷயங்களையும் அவரோ ஏற்படுத்தி நடத்துவார். அவர் தமது இராச்சியத்தின் எல்லைக்குள் அங்கங்கே வேவுகாரரை வைத்து, அவர்கள் மூலமாய் அங்குள்ள எல்லா வர்த்தமானங்களையும் அறிந்துகொள்ளுவார். அங்கே இருக்கிற பிரபுகளும் குற்றஞ் செய்வார்களானால், அவர்கள் தங்கள் பட்டத்தை இழந்

று, பங்கப்பட்டு, சக்கரவர்த்தியுடைய தீர்ப்பின்படியே சுரங்கத்தில் மண்ணெடுக்கும்படியாக ஸைபீரியாதேசத்திற்கு அனுப்பப்படுவார்கள்; இப்படி நிஷ்டூரமான தண்டனையை எங்கும் கண்டதில்லை: சாதாரணமான குடிகளிற் குற்றஞ்செய்தவர்கள் கொடிய சரீர தண்டனையை அடைவார்கள். மேற்குலத்தாரும் பிரபுகளும் சரீர தண்டனைக்கு நீங்கலாயிருப்பார்கள். அங்குள்ள கோடி ஸ்ரீமான்களாகிய பிரபுகள் இராஜதானியிலும், நாட்டுப்புறங்களிலுமுள்ள சிங்காரமான வீடுகளில் சம்பிரமமாக வாழ்ந்திருப்பார்கள். சாதாரணமான சனங்களோ, அவர்களுக்கு அடிமைத்தொழில் செய்கிறார்கள். நிலம் விலைப்படும்பொழுது, அதைப் பயிரிடுங்குடிகளுங் கூட அந்தநிலத்தை வாங்கினவனிடத்திற் சேருவது வழக்கம்; ஆதலால் ருஷிய பிரபுகளின் செல்வம், அவர்களிடத்தில் இருக்கிற ஆடுமாடுகளின் தொகையினால் மாத்திரமல்ல, அடிமைகளின் தொகையினாலும் மதிக்கப்படும்: அந்த அடிமைகள் அதிசம் நிர்ப்பந்தமாக நாள்கழிக்கிறார்கள்; அவர்கள் சற்றாவது சௌக்கியமில்லாத சிறுகுடிசைகளிற் சஞ்சரித்து, அத்தேசத்தில் அதிகமாயுள்ள ஓனாய், கரடி முதலிய மிருகங்களின் தோலைப் பதமிடாமல் உடுத்துக்கொள்ளுவார்கள். எசமான்கள் அவர்களுக்குப் பலமுறையும் மிகவும் கடுமையான வேலைகளைக் கற்பிப்பார்கள். மேலும் தேசத்திலுள்ள பிரபுகள் யாவரும், தங்கள் அடிமைகளை இராணுவ சேவகம் செய்யும்படியாக, தலைக்கு இத்தனை பெயரென்று குறிக்கப்பட்ட தொகையிலே குறையாமல், வருஷந்தோறும் துரைத்தனத்தாருடைய சட்டத்தின்பிரகாரம் அனுப்பப் பாத்தியப்பட்டிருக்கிறார்கள்; ஆதலால் பட்டாளத்திலே இராணுவவீரர் குறைந்தபொழுதெல்லாம் அவர்களைக் கட்டாயமாகப் பிடித்து அனுப்புவார்கள். அ

ந்த அடிமைகள் தங்கள் எசமான்களுடைய நிலங்களைப் பயிரிட்டபொழுது, அவர்களால் அனுபவித்த கஷ்டங்களிலும், இராணுவத்திலே அதிகமான கஷ்டங்களை அனுபவிப்பார்கள். அனேக பிரபுகள் வருஷத்துக்குவருஷம் தங்களுக்கு இவ்வளவு பணம் கொடுக்கவேண்டுமென்று தங்கள் வாரக்குடிகளுடனே பொருந்திக்கொண்டு, அவர்களுடைய இஷ்டத்தின்படி எங்கேயாவது போய் வர்த்தகஞ்செய்வதற்கு அவர்களுக்கு இடங்கொடுப்பதும் உண்டு. அவர்கள் எவ்வளவு அனுகூலமடைந்து திரவிய சம்பத்துள்ளவர்களானாலும் என்ன, தங்கள் எசமான்களுக்குத் தகுதியான அளவு பணம் கொடுத்துத் தங்களைச் சிறைமீட்டுக்கொள்ளாமற் போவார்களானால், எசமான்கள் அவர்களை எந்த நிமிஷத்திலாவது வரவழைத்து வேளாண்மைத்தொழில் செய்யும்படி கட்டாயம்பண்ணக்கூடும்; ஆகிலும் அவர்கள்அப்படிச்செய்கிறது அருமை. அடிமைகள் தங்கள் சிறையிருப்பினின்று விலகும்படி இடம்பெறுவது வழக்கமல்ல.

மேற்சொல்லியபடி ருஷியாதேசத்தில் சம்பிரமத்தோடே உல்லாசமாக வாழ்ந்திருக்கும் பிரபுகளும், அடிமைத்தொழில் செய்து தரித்திரத்தினால் இம்சைப்படுகிற வாரக்குடிகளுமாகிய இரண்டு வகுப்பான சனங்கள் தவிர, வர்த்தகராகிய வேறே ஒரு வகுப்பாரும் உண்டு; அவர்களில் ஜர்மானியர் முதலிய புறத்தேச வர்த்தகர்களே முக்கியமானவர்கள். அங்கே அங்கிளோ, பிராஞ்சிய, சுவேதேனிய வர்த்தகரும் அனேகர் இருக்கிறார்கள். அந்த வர்த்தகரை ருஷியசாதியார் மிகவும் உபசரித்துக் கனம்பண்ணுகிறார்கள். உயர்குலத்திற் பிறந்த பிரபுகள் முதலாக, சகல சுதேசிகளும் அரசாத்தனத்தாருக்குச் செலுத்தவேண்டிய வரிப்பணம் முத

லிய ஏற்பாடுகளில் அனேகம் மேற்சொல்லிய வர்த்தகர்களுக்கு இல்லை; அவர்கள் உயர்ந்த வியாபாரிகளென்றும் திறமையுள்ள தொழிலாளிகளென்றும் வியந்துகொள்ளப்படுவார்கள். மேலும் அவர்கள் மேன்மையுள்ள பிரபுக்களுடைய குடும்பங்களிலே ஏவல்செய்கிற சனங்களுக்குத் தலைமைக்காரராகவும் ஏற்படுவார்கள்.

ருஷியருக்குள்ளே திரவியசம்பத்துள்ளவர்கள் தங்கள் பிள்ளைகளுக்குக் கல்விப்போதனை செய்யும்படிக்கு அங்கிளோ, ஜர்மானிய உவாத்தியாயர்களையும், உவாத்திமைத்தனஞ்செய்யும் பெண்களையும் மிகுந்த அபேட்சையோடே ஏற்படுத்துவார்கள்; அப்படி ஏற்பட்டவர்களை அவர்கள் அதிகம் கனம்பண்ணிப் பட்சமாய் நடத்துவார்கள்: ஆகிலும் தங்கள் பிள்ளைகள் எவ்வகையான நூல்களைப் படித்துவருகிறார்களென்று சிலர் அதிகமாய் விசாரிக்கிறதில்லை. அங்கே துரைத்தனத்தார் ஏற்படுத்திய அனேக சாதாரண பாடசாலைகள்தவிர, பெருந்தொகையான பணமுதலுள்ள நாலுமூன்று சிறந்த வித்தியாசாலைகளும் உண்டு: எப்படி இருந்தும் கல்விகளை நன்றாய்க் கற்பிக்கத்தக்க திறமையுள்ளவர்கள் ருஷியாதேசத்தில் இல்லை; அங்கே கல்விப்பயிற்சி அதிக தாழ்வாயிருக்கிறது. இளம்பிராயமுடைய பிரபுகள் பெரும்பாலும் துரைத்தனத்தைச் சார்ந்த இராணுவம் முதலிய உத்தியோகங்களை விரும்பித் தேடுவார்கள்; அவர்கள் மற்றத் தொழில்களை அதிக அற்பமாய் எண்ணுவார்கள். துரைத்தன உத்தியோகஸ்தர்கள் தங்கள் கடமைகளை நேர்மையாய்ச் செய்கிறது அருமை. சிறியோர், பெரியோர் என்கிற பேதமில்லாமல், ருஷியசாதியார் எல்லாருக்குள்ளும் கண்டபடி வஞ்சிப்பதும், வாயில் வந்தபடி பொய்சொல்வதும் எப்பொழுதும் வழக்கம். ருஷிய சக்

கரவர்த்தியானவர் அரசாட்சிக்குரிய காரியங்களைத் தம்மால் ஆனமட்டும் திட்டமாக விசாரித்துவருகிறார்; அவர் எத்தனை விழிப்பாயிருந்தபோதிலும், அவரிடத்தில் ஏவல்செய்கிற யாவரும் அவரை வஞ்சிக்கிறார்கள்.

ருஷியசாதியார் அனுசரிக்கும் மார்க்கம் கிறிஸ்துமார்க்கம்; ஆகிலும் அது அதிக தப்பும் தவறுமுள்ளதாய்ச் சீரழிந்திருக்கின்றது. செம்புடன் கலந்த பொன் தன் மாற்றிற் குறைவதுபோல், அங்கே வழங்கிய மார்க்கத்தில் ஒழியாமலிருக்கின்ற சொற்ப உண்மை திரளான பொய்யுடன் கலந்து மறைந்திருக்கின்றது. ஜனங்களில் அனேகர் குருமாரைக் கனம்பண்ணுகிறதுமில்லை; குருமாரில் அனேகர் கனம்பெறத்தக்க ஒழுக்கமுடையவர்களுமல்ல. மேலும் த்சார் என்னும் சக்கரவர்த்தி அரசாட்சிக்கு மாத்திரமல்ல, திருச்சபைக்கும் அதிபதியாயிருப்பதினால், அவர் தமக்கு இஷ்டமானபடி குருக்கள்மாரைத் தாழ்வுபடுத்தி, அவர்களைப் பட்டத்திலிருந்து விலக்கக்கூடும். ஜனங்களில் அனேகர் அவிசுவாசிகள்; அனேகர் வீண்பத்தியுள்ளவர்கள். மஸ்துள்ள பதார்த்தங்களை உண்பது ருஷியசாதியாருக்கு அதிக வழக்கம்.

ருஷியாதேசத்தின் முக்கியமான பூர்வசரித்திரம் இதின் அடியிலே சுருக்கமாய்க் குறிக்கப்படும். கிறிஸ்து அவதரித்து ௯-ம்- நூற்றாண்டின் நடுவில் சுவேதேன்தேசத்திற்கு எதிரான பகுதியில் வசித்த ஸகாந்திநேவியர் என்னும் சாதியார், தங்கள் பிரதானியாகிய றூறிக் என்பவரோடும், அவர் குமாரரோடும் படையெடுத்துப்போய், வால்த்திக்கடலைக் கடந்து, அக்கரையிலுள்ள தேசத்தைக் கையாண்டுகொண்டு, அங்கே குடியேறினார்கள். அப்புறமும் அவர்கள் சாதியாரில் அனேகர்

காலத்துக்குக்காலம் அங்கே போய்க் குடியேறினதினால், அவர்கள் பலத்து விர்த்தியாகி, அந்தத் தேசம் முழுவதையும் அரசாளப்பெற்றார்கள். றூறிக் என்னும் பிரதானியும், அவர் குடும்பத்தாரும் நொவ்கொரோட் என்னும் இடத்திலே பிரதான பிரபுப்பட்டம் பெற்று, அதை இராஜதானியாக்கி, அவ்விடத்தில் அலங்காரமான ஒரு அரமனையைக் கட்டி வாசம்பண்ணினார்கள். அந்த நகரமானது, கஉ-ம்-நூற்றாண்டுவரைக்கும் வர்த்தக விஷயத்திலே தலைப்பட்டிருந்தது. அப்புறம் மொஸ்கோநகரம் கட்டப்பட்டது. அதுவே பிரபுப்பட்டம் பெற்ற பிரதானிகள் வசிக்கும் இராஜதானியாயிற்று.

மேற்குறித்த ஸ்காந்திநேவியர் என்னப்பட்ட வடசீமைமனுஷர் ருஷியாதேசத்திற் சென்றபொழுது, அங்கே வெவ்வேறான வமிசத்தாரும் சாதியாரும் குடியேறியிருந்தார்கள். அவர்களுக்குள்ளே பிரதானமான சாதியார் ஷிளாவோனியர் என்பவர்கள்; அவர்கள் தங்கள்மேற் படையெடுத்துவந்த ஸ்காந்திநேவியருடனே யுத்தம்பண்ணமல், அவர்கள் செங்கோலின்கீழ் அடங்கியிருந்தார்கள். ஸ்காந்திநேவியர் அவர்களைத் தாங்கள் யுத்தஞ்செய்து சிறைபிடித்த அடிமைகளைப்போல் எண்ணி, அநியாயமாய் ஒடுக்கினார்கள். ருஷியர் என்னும் பெயரையுடைய அந்த ஸ்காந்திநேவியர் தாங்கள் குடியேறின தேசத்திற்கு ருஷியாவென்று பெயரிட்டார்கள். க0-ம்-நூற்றாண்டிலே அவர்களுடைய மஹாபிரபு கிறிஸ்துமதத்திலே பிறந்த ஒருபெண்ணை விவாகஞ்செய்தார். அதினால் அவர்கள் அக்காலந் தொடங்கிக் கிறிஸ்துமார்க்கத்திலே சேர்கெட்டிருந்த சில உபதேசங்களை அனுசரித்துவந்தார்கள்: ஆகிலும் சில நூற்றாண்டுவரையில் அவர்கள் நாகரீகமில்லாதவர்களாய் இருந்தார்கள்; பின்பு அங்கிருந்த இராஜகுடும்

பத்தாரும் பிரபுகளும் பல சிறுமாகாணங்களில் வசித்து, ஒருவரோடொருவர் ஓயாமற் சண்டையிட்டு வாதுபண்ணினார்கள். அப்படி இருக்கும் காலத்தில், தர்த்தாரி தேசத்தானாகிய ஜிங்ஹிஸ்கான் என்னும் பயங்கரமான படைவீரன், அவர்கள்மேற் படையெடுத்துப்போய், அவர்களைக் கீழ்ப்படுத்தி, அவர்கள் இராச்சியங்களையும் கைவசமாக்கினான். அவனுக்குப்பின் பட்டத்திற்கு வந்த அரசர்கள் தேசமெங்கும் சென்று, அங்கங்கிருந்த ஜனங்களைச் சிறைபிடித்து, ஒடுக்கி, ஏறக்குறைய ௨௦௦ - வருஷமளவும் அவர்களை மிகவும் சிரமப்படுத்தினார்கள்.

பின்பு இருந்த பிரதானிகள் றூறிக் என்பவருடைய வமிசத்திலே பிறந்தவர்களும், பிரபுப்பட்டம் உடையவர்களுமாயிருந்தார்கள்: ஆகிலும் அவர்கள் தங்கள் சுயாதீனத்தை முழுமையும் பறிகொடுத்துப் பங்கப்பட்டார்கள். ௧௫ - ம் - நூற்றாண்டின் நடுவில் மொஸ்கோபட்டணத்தில் இருந்த மஹா பிரதானியாகிய ௩ - ம் - இவான் என்பவர், மேற்சொல்லிய அன்னியதேசத்தின் கொடுங்கோலரசரை அடியோடே ஊருக்கு அப்புறந் துரத்திவிட்டு, தமது தேசத்தை அவர்களுடைய ஆளுகையினின்று விலக்கினார்; எப்படியும் சுயாதீனராக வாழ்ந்திருப்பதினால் வரத்தக்க சுகானுபவங்களின் நன்மை ஜனங்களுக்குத் தெரியவுமில்லை; அவர்கள்அதை இலட்சியம்பண்ணவுமில்லை. பின்பு அந்த நகரத்தாரிலும் பிரபுகளிலும் சிலர் இவான் என்பவருக்கு விரோதஞ்செய்யத் தலைப்பட்டார்கள். அவர் அவர்களை அப்போதப்போதே சங்கரித்தார்; எல்லாச் சனங்களையும் தமது ஆளுகைக்கு உட்படுத்தினார்; பெரிதானஇராச்சியம் ஒன்றை ஸ்தாபித்து ஏகாதிபதியாய் அரசாண்டார். இப்பொழுது ருஷிய சக்கரவர்த்திகளுக்கு வழங்கிவருகிற "த்சார்" என்

னும் பட்டப்பெயர் முதல்முதல் அவருடைய காலத்திலே உண்டாயிற்று. "த்சார்" என்பதற்குச் சருவாதிகாரி என்று அருத்தமாம். அவர் மொஸகோ ராஜதானியிலே மிகவும் அலங்காரமான கிறெம்லின் என்னும் கட்டடத்தைச் செப்பனிடுவித்து, அதைத் தமக்கு அரமனையாகவும் கோட்டையாகவும் ஸ்தாபித்தார்.

"பெரியவர்" என்று விஷேப்பெயர் பெற்ற ந-ம்-இவான் என்பவருடைய வமிசத்திலுள்ளவர்கள் மூன்று தலைமுறையளவும் அரசாண்டார்கள். அவர்களில் ஒருவரும் "பயங்கரமானவர்" என்று விசேஷநாமம் பெற்றவருமாகிய இவான் என்பவர் கொடிய பாதகங்களைக் கூசாமற் செய்த துஷ்டனாயிருந்தார். அவர் அரசாண்ட காலத்தில் சிபேரியாதேசம் ஜெயித்துக்கொள்ளப்பட்டது; அங்கிளோதேசத்தாருடன் வர்த்தகசம்பந்தம் ஏற்படுத்தப்பட்டது. க,ருகஅ-ம்- வருஷமளவில், றூறிக் என்னும் அரசனுடைய வமிசம் ஒழிந்துபோக, அப்புறம் ஊர்க்கலகமும், நிர்ப்பந்தமும், அன்னிய அரசும் தலைப்பட்டன. போலாண்ட்தேசத்தார் ருஷியாதேசத்துக்குள் படையெடுத்துப்போய், இராஜகுமாரன் ஒருவனை தங்களுக்கு அரசனாக ஏற்படுத்தி, அவனுக்கு மொஸ்கோ ராஜதானியிலே பட்டாபிஷேகம்பண்ணி வைத்தார்கள். க,சுகந-ம்- வருஷமளவும் அந்தக் கிரமம் தவறாமல் நடந்துவந்தது. பின்பு அந்த வருஷத்திலே "ரோமனொப்" என்பவருடைய குடும்பத்திலே பிறந்தவரும் இளம்பிராயம் உடையவருமாகிய ஒருவர் பட்டத்திற்குவந்து, போலாண்டியாரைத் தேசத்திற்கு அப்புறம் அகற்றிவிட்டார்; அவர் வமிசத்திலுள்ள இராஜாக்களே இன்றளவும் ருஷியாதேசத்தை அரசாண்டுவருகிறார்கள்.

ஆதியிலே ரூரிக் குடும்பத்தில் அரசாண்ட இராஜனுக்குப் பேரப்பிள்ளையாகிய க. ம் - பீற்றர் என்பவர் பட்டத்திற்கு வருமுன் ருஷியாதேசத்தில் நடந்த வர்த்தமானங்களை அறிவதற்கு சரித்திரவகையில்லை.

---

## சுவேதேனும் நார்வேயும்.

சுவேதேன், நார்வே என்னும் இரண்டு தேசங்களும் அடங்கிய இராச்சியமானது, ஐரோப்பிய இராச்சியங்கள் எல்லாவற்றுக்குள்ளும் ஆக வடக்கே உள்ளது. அனேக நூற்றுண்டுகளுக்குமுன் அந்த இரண்டு தேசங்களும், தென்மார்க்குதேசமும் ஸ்காந்திநேவியர் என்னும் சாதிப்பெயருடைய பல கோத்திரத்தாராற் குடியேறப்பட்டன. அவர்கள் முதல்முதல் ஆசியாக்கண்டத்திலே காஸ்பியன்கடற்கரையை அடுத்த நாடுகளிலிருந்து போனூர்களென்று தோன்றுகிறது. தென்மார்க்குதேசத்திலே குடியேறின கோத்திரத்தார்கள் பராக்கிரமசாலிகள். அவர்கள் தான் ஆதியிலே அந்தத் தேசத்தை இராச்சியமாக ஏற்படுத்தி, ஒரே அரசனுடைய ஆளுகைக்குள் அடங்கி நடந்தவர்கள். அதைக் கண்டு, சுவேதேனியரும் அந்தப் பிரகாரஞ் செய்தார்கள். பின்பு கூ - ம் - நூற்றுண்டின் நடுவில், நார்வேதேசமும், சுதேச அதிபதியின் ஆளுகைக்குட்பட்ட இராச்சியமாயிற்று. வழக்கமாய் "வடதேசத்தார்" என்று பெயர்பெற்ற நார்வேஜியரும், தானியரும் சில நூற்றுண்டளவும் கடற்சண்டைசெய்வதில் மிகுந்த சாமர்த்தியமுள்ளவர்களாய் இருந்தார்கள்: ஆகிலும் அவர்கள் நாகரீகவிர்த்தியில்லாத கொடிய மூர்க்கர். தென்தேசத்திலே திரவிய சம்பத்துள்ளவர்களாகச்

சமாதானத்துடன் வாழ்ந்திருந்த சாதிகளுடனே, அவர்கள் ஓயாமற் சண்டைபண்ணப் படையெடுத்துப்போனூர்கள். அவர்களிற் சிலர் பிரான்ஸ்தேசத்திலுள்ள வட மாகாணங்களிற் குடியேறினூர்கள். வேறு சிலர் அங்கிளோதேசத்திற்கு அடிக்கடி படையெடுத்துச்சென்று, அங்குள்ள குடிகளிற் சிலரைச் சிறைபிடித்து, அவர்கள் பொருளைக் கொள்ளையடித்துத் தங்கள் கப்பல்களில் ஏற்றிக்கொண்டு திரும்புவார்கள். ௧௦-ம்-நூற்றூண்டளவில் மேற்சொல்லிய தேசங்களிலே கிறிஸ்துமார்க்கம் முதல்முதல் அறிவிக்கப்பட்டது. அதின் அறிவு பரவிப் பலத்ததினூல், அடங்காத துஷ்டரும் மூர்க்கருமாகிய அந்த ஜனங்கள் சீர்த்திருத்தம் அடைந்து வழிக்குவந்தார்கள். ௧௪-ம்-நூற்றூண்டின் முடிவில் சுவேதேன், நார்வே என்னும் இரண்டு தேசங்கள் தென்மார்க்கு இராச்சியத்துடன் ஒன்றூகச் சேர்க்கப்பட்டன. அப்பொழுது அந்த மூன்று தேசங்களும் அடங்கிய இராச்சியத்தில் ஒரு மேன்மைபெற்ற ராக்கினி அரசாண்டாள்: அடுத்த நூற்றூண்டிலோ, சுவேதேன்தேசத்திலே யுத்தத்தில் அதிக ஆண்மையுடைய ஒருவன் எழுந்து, தென்மார்க்கருடனே போராடி, அவர்கள் தன் தேசத்துக்கு ஏற்றிய பாரத்தை விலக்கி, சுயாதீனம்பெற்றூன். இவ்விதமாய் அவன் தங்களுக்குச் செய்த இணையில்லாத நன்றியைச் சனங்கள் கண்டுணர்ந்து, அவனையே தங்களுக்கு அரசனூகத் தெரிந்து ஏற்படுத்தினூர்கள். அதுமுதல் இதுவரையில் அந்தத்தேசம் சுயாதீனமுள்ள இராச்சியமாயிருக்கின்றது. அங்குள்ள அரசர்கள் விவேகமாயும் லோகோபகாரமாயும் ஆளுகைசெய்துவந்தார்கள். தொடக்கத்திலே அந்த இராச்சியத்தில் துரைத்தனஞ்செய்த அரசன் பெயர் குஸ்தாவஸ் வாஸா என்பது. தா

னியருடைய துரைத்தனவிசாரணைக்கு உட்பட்டிருந்த நார்வேதேசமானது, ௪௦ - வருஷத்திற்குமுன்பு சுவேதேன் துரைத்தனத்தாருக்கு ஒப்பிக்கப்பட்டது. இப்பொழுது அவை இரண்டும் ஒன்றாகச் சேர்ந்து சிறந்த இராச்சியமாய் இருக்கின்றன; ஆகிலும் நார்வேதேசத்திலே மந்திராலோசனைச்சபையும், சனப்பிரதிநிதிகள் கூடிய தேசசபையும் உண்டு. சனப்பிரதிநிதிகள்சபையிற் சேர்ந்திருப்பவர்கள் ஜனங்களாலே தெரிந்து ஏற்படுத்தப்படவேண்டும். அரசனுடைய மனக்கருத்து எப்படியிருந்தாலும், அந்தச் சபையார் மூன்று வருஷத்துக்கு ஒருமுறை சங்கங்கூடிச் சட்டங்களை ஏற்படுத்தலாம். அவர்கள் ஏற்படுத்துஞ் சட்டங்கள் வெவ்வேறான மூன்று பார்லிமெண்ட் என்னும் ஆலோசனைச்சபையார் மனம் பொருந்தி ஒப்புக்கொண்டவைகளாய் இருக்குமானால், அவைகளுக்கு அரசனுடைய அனுமதி வேண்டுவது அவசியமல்ல: மேலும் அவ்வகையான ஒரு மந்திராலோசனைச்சபை சுவேதேன்தேசத்திலும் உண்டு. அந்தச்சபையார் துரைத்தன விசாரணையில் அரசனுக்குத் துணைசெய்து, அவர் தமக்குரிய அதிகாரத்துக்கு மிஞ்சிநடவாதபடி பார்த்துக்கொள்ளுவார்கள்; ஆகிலும் நற்குண நற்செய்கைகளிற் சிறந்தவராகிய குஸ்தாவஸ் அரசன் சுவேதேன்தேசத்தை அரசாண்ட நாள்முதலாக இதுவரையில் அங்குள்ள அரசர்களெல்லாரும் தங்கள் குடிகள் செல்வராய் வாழவேண்டுமென்று விரும்பி, பட்சபாதமில்லாமல், சீராய் அரசாண்டுவருகிறார்கள். அவர்கள் தேசத்திலே சாதாரணமாய் நடந்துவந்த சீர்த்தாழ்வுகளைப் படிப்படியாக விலக்கினார்கள்; தீமைகளை அகற்றினார்கள்; சனங்கள் கட்டாயத்தினாலே கஸ்திப்படாமல் சுயாதீனம்பெற்று வாழும்படி தகுதியான சட்டங்களை ஏற்

படுத்தினார்கள்; உபயோகமான தேசநியாயப்பிரமாணங்களை நிரூபித்தார்கள்; பலபல கல்விகளையும், கைத்தொழில் முயற்சிகளையும் அபிவிர்த்திசெய்தார்கள். அங்குள்ள சனங்கள் சுவிசேஷ மார்க்கத்தை அனுசரிக்கிறார்கள்; சமய விஷயத்திலே தங்களுக்கு யுக்தமாகத் தோன்றியபடி பேசவும், நடக்கவும் இடம்பெற்றிருக்கிறார்கள்; அவர்கள் யாவரும் சமாதானமாய்ச் சஞ்சரிக்கிறார்கள். அன்னிய துரைத்தனத்தார்களுடனேயும் ஐக்கபந்தமுள்ளவர்களாய் இருக்கிறார்கள். அங்கே இப்பொழுது துரைத்தனம் செய்கிற அரசனையும், இராணியையும் சனங்கள் மிகவும் நேசித்து உபசரிக்கிறார்கள். அரசன் தமது குடிகளுக்கு நிஷ்டூரம்பண்ணாமலும், துரைத்தனத்தின் ஒழுங்குக்குத் தாழ்வு வராமலும் காவல்பண்ணி, செவ்வையாக அரசாட்சிசெய்கிறார். கல்விப்பயிற்சிக்கும், வியாபாரவிர்த்திக்கும், மற்றுண்டான சகல அனுகூலங்களுக்கும் உபயோகமான சகாயங்களெல்லாம் தாராளமாகச் செய்யப்படுகின்றன; குடிகளுடைய அனுகூலத்துக்காகத் துரைத்தனத்தார் இப்படி பலபல முயற்சிகளைச் செய்தும், குடிகளோ பெரும்பாலும் அந்த முயற்சிகளுக்குப் பொருட்சகாயம் பண்ணுகிறதில்லை; எப்படியிருந்தும் அவர்கள் சற்றாவது கலகம்பண்ணாமல், அரசனுக்குக் கீழமைந்து, தேசத்திலே செய்கைபண்ணத்தக்க நிலம் முழுவதையும் முயற்சியாகப் பயிரிட்டுவருகிறார்கள். அவர்கள் எவ்வகையான நாகரீகவிர்த்தியையாவது, சீர்திருத்தத்தையாவது பெரிதென்று எண்ணுகிறதில்லை. அந்தந்தத் தொழில்முயற்சிகளைத் தங்கள் முன்னோர்கள் செய்த முறைப்படியே அவர்களும் செய்துவருவார்கள்; அவைகளில் விருதாவான முறைகளைத் தள்ளி வேறே உத்தமமான முறைகளை நூதனமாய்க் கண்டறிந்து செய்வது அவர்களுக்கு எவ்வளவும்

சம்மதமில்லை; தங்கள் முன்னோர்கள் நடந்த பிரகாரமா கவே தாங்களும் நடப்பது அவர்களுக்குத் திர்ப்தி. அதில் மாத்திரம் அவர்கள் குறைவுள்ளவர்களானால் பெரிதல்ல. அவர்களிடத்தில் வேறொரு பெரிய சீர்த்தாழ்வும் உண்டு. அது பல கொடிய துன்மார்க்கங்களுக்கு ஆதிகாரணமாய் இருக்கிற மதுபானவழக்கமாம். அந்தவழக்கம் அவர்களுக் குள்ளே சாதாரணமாயிருக்கின்றது. அதினால் உண்டான கெடுதிகள் அனேகம். தேசத்திலே நன்மை விர்த்தியாகும் படி துரைத்தனத்தார் தகுதியானசட்டங்களை ஏற்படுத்தி நடத்துகிறார்கள்; சனங்கள் சுயாதீனம் பெற்றிருக்கிறார் கள்; எவர்களாலும் மெய்ச்சப்படத் தகுதியான ஒழுக்க மும், கனமுமுள்ள உத்தியோகஸ்தர் அங்கங்கே அதிகார ஞ்செலுத்துகிறார்கள்; சாதாரண கல்வி மேன்மேலும் அ பிவிர்த்தியாகின்றது: ஆகிலும் இவைகளால் உண்டாகும் சவுக்கியங்கள், சிலாக்கியங்கள் யாவையும் மேற்சொ ல்லிய மதுபானமென்னும் கொடிய தீமையானது கெ டுக்கின்றது; அதினாலேதான் குடிகள் பொருள்வரவு இல் லாமல் தரித்திரப்படுகிறார்கள்; நாகரீகமில்லாதவர்களாய் அவலட்சணமாகச் சஞ்சரிக்கிறார்கள்; அவர்களுக்குள்ளே எவ்வகையான துன்மார்க்கங்களும் மேலிட்டு நடக்கின் றன. அவர்களுடைய தேசத்தின் நீர்வளம், நிலவளம், வெப் பம், குளிர்ச்சி இரண்டுக்கும் சம்பந்தமான சவுக்கியங்கள் பல வழியிலும் அவர்களுக்குச் சகாயமாயிருக்கவில் லை. அவர்கள் தேசம் பயிர்செய்யப்பட்டதுமல்ல; ஆ டுமாடுகள் மேய்வதற்குப் புல் வளமுள்ளதுமல்ல: அங்கே சுதேசிகளுடைய செலவுக்குப் போதுமான தானியம் உண்டு: ஆகிலும் பிறதேசத்துக்கு வியாபார முகாந்தர மாக ஏற்றுமதிசெய்வதற்கு அங்குள்ள விளைச்சல் போ தாது. வேளாண்மைத் தொழிலைக்குறித்து நூதனமாய்க்

கண்டறிந்த திருத்தங்களைத் தாங்கள் ஒப்புக்கொள்வ தில்லையென்று அவர்கள் ஒரே பிடிவாதமாய் இருக்கிறார் கள்; அதினால் வேளாண்மை விஷயத்திலே அவர்கல் அதிகம் பிரயோசனம் அடையவில்லை. பல நூற்றாண் டுகளுக்குமுன் அவர்கள் நடந்தது எப்படியோ, அப்படி யே இன்னும் நடக்கிறார்கள். அவர்கள் வீடுகள், விசே ஷமாய் நார்வேஜியருடைய வீடுகள், மரத்தினாலே கட் டப்பட்ட அசவுக்கியமான சிறு குடிசைகளாய் இருக் கின்றன. தங்கள் நடை உடை பாவனைகளிலே திருந்தா மலும், வீடுகளைச் சிங்காரியாமலும் இருப்பதுதான் அவ ர்களிடத்தில் இருக்கிற பெரிய குறைவு. அந்தத்தேசத்தி லே நெடுந்தூரமளவும் விஸ்தரித்து, மலைகளிற் செறிந்து வளர்ந்திருக்கிற தேவதாரம் முதலான மரங்கள்தான் அவ ர்களுக்கு விசேஷித்த செல்வம்; அவர்கள் அந்த மரங் களை வெட்டியும், அவைகளில் தைலம், கிசில், குங்குலி யம், எண்ணெய் முதலியவைகளைச் செய்தும் பிறதேசங்க ளுக்கு ஏற்றுமதிபண்ணுவார்கள்: மேலும் அந்த மலைகளில் அனேக இரும்புச்சுரங்கங்களும், செம்புச்சுரங்கங்களும் உண்டு; வெள்ளிச்சுரங்கம் அதிகமாய் இல்லை; வெள்ளைக் கல் பல இடங்களில் வெட்டி எடுக்கப்படுகின்றது. உலோ கங்களை உருக்கி வெவ்வேறு பதமாக்கி வேலைசெய்வ தில் அவர்கள் அதிகம் கைதேர்ந்தவர்களல்ல; ஆகி லும் இரும்பை உருக்காக்குவார்கள்; அங்குள்ள வி சாலமான ஒரு கம்மியசாலையில் அந்த வேலை நடக்கி ன்றது. அவர்களுக்குள் வர்த்தகம் அதிகமாய் நடக்கவி ல்லை. உப்பு, திராட்சரசம், சர்க்கரை, காப்பிக்கொ ட்டை, புகையிலை, பழவகைகள் முதலிய முக்கியமான பண்டங்களும்; ஆட்டுமயிர், சணல்நூல், பட்டு முதலிய நெசவுக்குரிய வஸ்துக்களும் பிறதேசத்திலிருந்து கொண்

டுவரப்படும்: ஆகிலும் நெசவுக்குரிய வஸ்துகள் அவர்களுக்கு அதிகமாகச் செலவில்லை.

அந்த இராச்சியத்தில் எங்கும் மலைகளும், மடுக்களும் மலையருவிகளும், சிறிய ஆறுகளும் இருக்கின்றன. நார்வேதேசத்தின் மேற்குக்கரையில் ஒன்றையொன்று ஊடுறுத்துச் செல்லுகிற பல குடாக்கடல்களும், உள்நாட்டிலே நெடுந்தூரமளவுஞ் செல்லுகிற சமுத்திரக் கால்வாய்களும் அதிகரித்திருப்பதினால், அந்தத்தேசம் காட்சிக்கு அதிக அலங்காரமாயிருக்கும். சுவேதேன்தேசத்தில் நல்ல சாலைகள் அனேகம் உண்டு. நார்வேதேசத்தில் அவ்வளவு இல்லை. அந்தத்தேசங்களில் வாசமாயிருக்கிற சனங்கள் வறியவர்களானாலும், நல்லொழுக்கமும், உண்மையும், அன்னியரை உபசரிக்கும் குணமும் உள்ளவர்களாய் இருப்பதினால், அங்கே கொஞ்சமாவது பயமில்லாமல், எவர்களும் பிரயாணம்பண்ணலாம்; ஆகிலும் சங்கடமில்லாமல் விரைவாகப் பயணம்பண்ணுவதற்குப் போதுமான எத்தினங்கள் அங்கில்லை. சுவேதேன்தேசத்திலாவது, நார்வேதேசத்திலாவது பயிர்செய்யுங் குடிகளுக்குள் செல்வர், வறியர் என்கிற பேதம் ஒன்றேதவிர, மற்றத் தேசங்களில் வழங்கியபடி, பிரபுகள், துரைமக்கள் என்கிற தாரதம்மியம் அதிகமாய் இல்லை. ஆதலால் பெரும்பாலும் சில தேசங்களிலுள்ள பெரியோருக்கு விசேஷமாய் உண்டாகியிருக்கிற நாகரீகம் அந்தத்தேசங்களிலே குறைவாயிருக்கின்றது. மெய்தான் விஸ்தாரமான நகரங்களில் அந்தந்தக் குலங்களுக்கும் உத்தியோகங்களுக்கும் அடுத்த தாரதம்மியம் உண்டு; ஆகிலும் மற்ற இராச்சியங்களிலும் இராச சபைகளிலும் இருக்கிற தாரதம்மியங்கள் அங்கே அதிகமாய் இல்லை. மேற்சொல்லிய தேசங்களிலே வாசஞ்செய்யும் சனங்கள் கல்வியில் அதிகமாகத்

தேர்ந்தவர்கள். சாதாரணமாய் அங்குள்ள பெண்கள் எழுத வாசிக்கப் பழகியிருக்கிறார்கள்; அவர்களில் அனேகர் மிகவும் கல்வித்திறமுள்ளவர்கள்; சிலர் எந்தக் கல்விமான்களும் மதிக்கத்தக்க பிரபந்தங்களை எழுதியிருக்கிறார்கள். அந்தத்தேசங்களிலே பெரிய பட்டணங்களும், அனேக சனங்கள் குடியேறியிருக்கிற கிராமங்களும் இல்லை. அங்குள்ள மரவீடுகள் பெரும்பாலும் ஒன்றோடொன்று சேர்த்துக் கட்டப்படாமல், அங்கங்கே வெளிகளிலும் தோப்புகளிலும் தனித்தனியே கட்டப்பட்டிருக்கின்றன. இந்தப்படி செய்வது நார்வேதேசத்திலேதான் அதிக வழக்கம். சுவேதேன்தேசத்திலே பயிரிடுங்குடிகள் வசதியான வீடுகளில் வாசம்பண்ணுகிறார்கள்; நல்ல உடைகளைத் தரிக்கிறார்கள்; சிரமமில்லாமல் சீவனம்பண்ணுகிறார்கள். இப்படி அவர்கள் லவுகிக காரியங்கள் எல்லாவற்றிலும் சவுக்கியமுள்ளவர்களாய் வாழ்ந்திருக்கிறார்கள். நார்வேதேசத்திலுள்ள முக்கியமான பட்டணங்கள் இராஜதானியாகிய பர்ஜென், மந்திராலோசனைச் சபையார் கூடும் பட்டணமாகிய கிறிஸ்தியானு, டிரோன்தீம் என்பவைகளாம். சுவேதேன்தேசத்தின் இராஜதானி ஸ்டக்ஹோல்ம் என்பது; அங்கே இராஜா வாசமாயிருக்கிறார். அந்தப்பட்டணம் வால்த்திக்கடலிலுள்ள ஒரு தீவிலே விசாலமும் சிங்காரமுமாய்க் கட்டப்பட்டிருக்கின்றது. அங்கே அலங்காரமான கட்டடங்கள் உண்டு; அவைகளில் விசித்திரமான அனேக தேவாலயங்களும், மிகவும் சிறப்பான அரமனையும், இராணுவவித்தியாசாலையும், நடனசாலையும் விசேஷமானவைகள். அங்குள்ள கப்பல் துறைமுகம் பெரிதும் வசதியுமானதாயிருக்கின்றது. சுவேதேன்தேசத்திலே இன்னும் ஒரு பிரதான நகரம் உண்டு, அதற்குப் பெயர் உப்ஸல். அந்த நகரத்

திலே கீர்த்திபெற்ற ஒரு வித்தியாசாலை இருக்கின்றது; அதில் வாசித்தவர்களிற் சிலர் சாஸ்திரத்தேர்ச்சியும், கல்வித்தெளிவும், கவி பாடும் திறமையுமுள்ளவர்களென்று பெயர்பெற்றார்கள். சுவேதேன்தேசத்தாரில் அனேகர் சங்கீதவாத்தியத்தில் மிகவும் வல்லமையுடையவர்கள்; அந்தத்தேசத்தாளாகிய ஒரு பெண் இராக பரீட்சையில் ஐரோப்பா, அமெரிக்கா தேசங்களில் எங்கும் பெயரெடுத்த சமர்த்தியாயிருக்கிறாள். கொற்றென்புர்க் என்பது நல்ல கடல்துறை அடுத்த நகரம்; அங்கே வியாபாரம் அதிகமாய் நடக்கின்றது. இவையல்லாமல், ஸ்ற்றிருல்ஸண்ட் முதலான வேறு சில நகரங்களும் அங்கே உண்டு. சாலைகளும் பெருவாய்க்கால்களுமல்லாமல், உபயோகமான பாலம் முதலிய வேறு கட்டடங்களும் கொஞ்சக் காலத்திற்குள் உண்டாக்கப்பட்டிருக்கின்றன: மேலும் கோதாநதியைச் சார்ந்த மடுக்களை ஒன்றாகச் சேர்த்து, ஒன்றுக்கொன்று உ00 மையில் தூரமான கோதென்புர்க் நகரந்தொடங்கி, இராஜதானியாகிய ஸ்டக்ஹோல்ம் நகரமளவும் எட்டத்தக்க பெருவாய்க்கால் ஒன்று வெட்டியிருக்கிறார்கள். இப்படியே வடகடலும் வால்த்திக்கடலும் ஒன்றோடொன்று பொருந்தியிருப்பதினால், புகைக்கப்பல்கள் கோதாநதிவழியாக மேற்சொல்லிய இரண்டு பட்டணங்களுக்கும் ஓயாமல் போக்குவரவாயிருக்கின்றன; அந்த வாய்க்கால் ஆச்சரியமான வேலைப்பாடுள்ளது. அது இடையிலுள்ள குன்றுகளையும் தாண்டி ஓடுகின்றது. அருவிப் பாய்ச்சல் எதிரிடும் இடங்களில், அங்கங்கே அனேக கால்வாயடைப்புகள் கட்டப்பட்டிருக்கின்றன; அந்தக் கால்வாயடைப்புகளில் சேர்ந்த தண்ணீர் ௩௬0 அடியளவும் உயர்ந்திருக்கிற அருவிமட்டத்துக்கு எழும்பி,

மரக்கலத்தை எழுப்ப, அது அந்தக் கால்வாயடைப்புகள் ஒவ்வொன்றிலும் படிப்படியாய் ஏறி, பின்பு அத்தன்மையாகவே நதிமட்டமாய் இறங்கும். மேற்சொல்லிய வாய்க்கால் தாண்டிச் செல்லுகிற மலையில் எஉ கால்வாயடைப்புகள் வெட்டிக் கட்டப்பட்டிருக்கின்றன: ஒரு இடத்திலே கக கால்வாயடைப்புகள் நெருக்கமான படிக்கட்டுகளைப்போல ஒன்றையொன்று அடுத்திருக்கின்றன.

அந்தத்தேசங்கள் மிகவும் குளிர்ச்சியாயிருக்கின்றன. தென்தேசங்களில் எப்பொழுதும் குளிர் அதிகரித்திருப்பதினால், அங்கே மாரிகாலம் கோடைகாலம் என்கிற பேதம் இல்லை: ஆதலால் அங்கே பழம் தரும் மரங்களும், பூஞ்செடிகளும் அதிகமாய் செழிக்கிறதில்லை. கோடைகாலம் மிகவும் குறுகியிருக்கும். வருஷத்தில் சில மாதமளவும் அத்தேசமெங்கும் பனி கல்லைப்போல உறைந்திருக்கும். ஆதலால் சனங்கள் சக்கரமில்லாத வில்வண்டிகளில் குதிரைகளையாவது, கலைமான்களையாவது பூட்டி, அதின்மேல் செலுத்திப் போக்குவரவுபண்ணுவார்கள்; ஆகிலும் மாரிகாலந்தான் அவர்களுக்கு மிகவும் கொண்டாட்டமான காலம். அப்போது பல விதமான விளையாட்டுகளும் வேடிக்கைகளும் நடக்கும். சனங்கள் தங்கள் பாதரட்சைகளில் இருப்புவில் தொடுத்து, உறைந்த பனியில் வழுக்கி, எவ்வளவும் அபாயமில்லாமல் வேகமாய் ஓடி ஆடுவார்கள்; கரடிகள், ஓனாய்கள் முதலிய காட்டு மிருகங்களை துப்பாக்கியாற் சுட்டு வேட்டையாடுவார்கள்; அவர்கள் ஐக்கமாய்க் கூடி, குலாவி, விருந்து கொண்டாடி, உல்லாசமாகப் பொழுதுபோக்குவார்கள். அந்த வடதேசங்களில் இராக்காலத்தினுடைய சிறப்பை இவ்வளவென்று சொல்வது அரிது. அங்கே வருஷத்தில்

பெரும்பாலும் பகல் குறுகி, இராத்திரி நீடித்திருக்கும். அவைகளுக்கு வடக்கேயுள்ள பகுதிகளில் சில மாதங்களிலே இராப்பகல் உச மணிநேரத்தில் சூரிய வெளிச்சம் தோன்றுவது மிகவும் கொஞ்ச நேரந்தான். அதிலும் வடக்கே சில நாள்வரையில் சூரியன் எவ்வளவும் காணப்படுகிறதில்லை; ஆகிலும் ஆகாயத்திலிருந்து விழுகிற நட்சத்திரங்களின் வெளிச்சமும், பலவர்னமாக ஆகாயமெங்கும் பரவி எறிக்கும் திரளான ஒளியும் வெயில்போலத் தோன்றியும், அதிலே வெப்பம் சிறுதுமில்லை: ஆதலால் அங்கே கல்லைப்போல் உறைந்திருக்கிற பனியானது மேற்சொல்லிய ஒளியினாலே உருகுகிறதில்லை; எவ்விதமான பயிரும் செழிக்கிறதில்லை: கோடைகாலத்திலோ, அப்படியல்ல; அப்போது பகல் நீடித்திருப்பதினால், அங்கே இருள் மத்தியமமாய் இருக்கும். சில நாளளவும் சூரியன் அஸ்தமியாமல், ஆகாயத்திலே தாழ்ந்து, சிறு மண்டலமாய் ஓடி, இராப்பகல் என்கிற எல்லையில்லாமல், எப்பொழுதும் ஒரே அளவாகப் பிரகாசிக்கும். இந்த அபூர்வமான காட்சியைக் காணாதவர்கள், இதைக்குறித்துக் கேட்கும்பொழுது மிகவும் ஆச்சரியப்படுவார்கள். மலைகளும் காடுகளும் அணியணியாய் இருப்பதினால், அந்தத்தேசத்தின் காட்சி மிகவும் அலங்காரமாயிருக்கும்: ஆதலால் அங்கே பிரயாணம்பண்ணுகிறவர்கள் அதைப் பார்த்து அதிக திர்ப்தியடைவார்கள். கொஞ்ச நாளளவும் நிலைத்திருக்கிற கோடைகாலத்தில், சுவேதேன்தேசத்திலே எங்கே பார்த்தாலும், அங்கெல்லாம் சனங்கள் அதிக முயற்சியும் சாக்கிரதையுமுள்ளவர்களாய் இருப்பார்கள். பயிரிடுங்குடிகள் வயலிலே பயரிடுவதும், விளைவை அறுப்பதும், மற்றும் உண்டான அலுவல்களையெல்லாம் பார்ப்பதும்,

மாரிகாலத்தில் சீவனம்பண்ணுவதற்கு வேண்டிய போச
ன பதார்த்தங்களைச் சேர்த்துவைப்பதுமாகிய யாவும் கோ
டைகாலத்திலேதான். மாரிகாலம் தொடங்கும்பொழு
து, பயிரிடுதல் முதலிய தொழில் முயற்சிகளைச் செய்வத
ற்கு இடமில்லை. சுவேதேன்தேசத்திலே யுத்தாப்பியாச
முள்ள சேனுவீரரும், கப்பலிராணுவங்களும் உண்டு.
ஆகிலும் கஎ - ம் நூற்றுண்டில் அரசாண்டவரும்
நற்குண நற்செய்கைகளிலே கீர்த்தியடைந்தவருமா
கிய குஸ்தாவஸ் அதால்பஸ் என்னும் அரசன் இறந்
தபின்பு, அந்தத்தேசம் ஐரோப்பிய தேசங்களுக்குள்ளே
பெரிதென்று எண்ணப்படுவதற்கு விசேஷமுடையதாய்
இருக்கவில்லை.

---

## தென்மார்க்கு.

ஜத்லண்ட் என்னும் கழுத்துப்போன்ற தேசப்பகுதியும்,
சீலண்ட், பியூனென் என்னும் முக்கியமான தீவுகளும்,
வேறு பல சொற்ப தீவுகளும், தென்மார்க்குதேசத்தின்
அரசன் ஆளுகைசெய்கின்ற ஹோல்ஸ்தீன், ஸ்லெஸ்விக்
என்னும் மாகாணங்களும், இவையெல்லாம் ஒன்றுகச் சே
ர்ந்த தென்மார்க்கு இராச்சியமானது, சுவேதேன், நார்
வேதேசங்களில் ஸ்காந்திநேவியர் என்னும் சாதியார் கு
டியேறின காலத்தில், அல்லது அதற்குச் சில காலத்துக்
குமுன்பு, அவர்களால்தானே குடியேறப்பட்டது. தென்
மார்க்கின் அரசரால் ஆளப்பட்ட அந்தத் தானியர் ௧௦-ம்
நூற்றுண்டிலே யுத்தத்தில் வெகு ஆண்மையுடையவர்க
ளாய் இருந்தார்கள். பக்கத்திலுள்ள தேசத்தார் அனை
வரும் பல நூற்றுண்டளவும் அவர்களுக்குப் பயந்து, ஓடு

ங்கிநடந்தார்கள். விசேஷமாய் கடற்கொள்ளையாடுவ திலே அவர்களைப்போலக் கைவந்தவர்கள் இல்லை. வால்த்திக்கடலில் வர்த்தக விஷயமாகப் போக்குவரவுசெய்யும் யாத்திரைகாரரை அந்தத் தானியர் மறித்து, தங்களுக்குப் பகுதிகொடுக்கச் சொல்லி, கட்டாயம்பண்ணுவார்கள். அவர்கள் எவ்விதமாயாவது நியாயமான முயற்சிகளைச் செய்து சீவனம் பண்ணுவது கஷ்டமென்று நினைத்து, அடுத்த தேசங்களுக்கு அடிக்கடி படையெடுத்துச்சென்று, அங்கே அகப்பட்ட பொருளையெல்லாம் அநியாயமாய்ப் பறித்துக்கொள்வார்கள். அப்படியே ௯-ம் நூற்றாண்டில் அவர்கள் முன்னிலும் அதிகமான இராணுவங்களைச் சேர்த்து, மிகுந்த பராக்கிரமத்துடனே அங்கிளோதேசத்துக்குப் படையெடுத்துச்சென்று, அங்கிருந்த சக்சோனியசாதியாருடனே சண்டைசெய்து, அவர்களை முறியடித்து, அங்கே தாங்கள் அரசாளும்படி தலைப்பட்டார்கள்; ஆகிலும் சில காலத்திற்குப்பின்பு அங்கிளோதேசத்தார் அவர்களை அவ்விடத்தினின்று அடியோடே துரத்திவிட்டார்கள். அதின்பின் அந்தத் தானியர் அங்கிளோதேசத்தைத் திரும்பிப் பார்க்கவுந் துணியவில்லை. மேற்சொல்லியபடி, பலாத்காரமாய்ப் படையெடுத்துப்போவதும், கடற்கொள்ளையாடுவதுமல்லாமல், மீன்பிடிப்பதும், ஆடுமாடு மேய்ப்பதும் அவர்களுடைய பிரதான தொழில்களாம். எப்படியும் அவர்கள் வரவர நாகரீகத்தில் விர்த்தியடைந்தார்கள். மறு தேசத்தார்கள் வல்லமையில் அதிகரித்து, தங்கள்தங்கள் தேசங்களைக் காவல்செய்து அரசாளவும், கப்பல்களைச் செப்பனிட்டு ஆதரிக்கவும் திராணியுள்ளவர்களானபொழுது, மேற்படி தானியரும் சமாதானத்துக்கு உபயோகமான கைத்தொழில் முதலியவைக

ளைச் செய்வது அவசியமாயிற்று. கச - ம் நூற்றுண்டிலே தென்மார்க்குதேசத்தில் அரசாண்ட மாட்சிமையுள்ள இராணியாகிய மார்கெரெட் அவர்கள் தமது இராச்சியத்துடன் சுவேதேன், நார்வே என்னும் தேசங்களைச் சேர்த்து ஒரு குடைக்கீழ் இராச்சியபாரம்பண்ணினூர்; ஆகிலும் சில காலம் சென்றபின் சுவேதேன், நார்வே தேசங்களின் குடிகள் கலகஞ்செய்து, சுயாதீனம்பெற்ருர்கள். இப்பொழுது தென்மார்க்குத் துரைத்தனத்தைச் சேர்ந்த இடங்கள் ஐஸ்லண்ட்தீவு, பெரி என்னும் சிறு தீவுகள், விஸ்தாரமான சலாபத்துக்குரிய முயற்சிகள் நடக்கின்ற கிறீன்லண்ட்தீவின் ஒரு பகுதி, மேற்கு இந்திய தீவுகளில் இரண்டு இவைகளேயாம். சில வருஷங்களுக்குமுன்பு அவர்கள் தென் இந்தியாவிலுள்ள தரங்கம்பாடியையும், பங்காளத்திலுள்ள சேராமபுரியையும் வசப்படுத்தியிருந்தும், பின்பு அவைகளை அங்கிளோ இந்தியதுரைத்தனத்தாருக்குக் கிரயமாகக் கொடுத்துவிட்டார்கள். தென்மார்குதேசத்தின் நிலம் முழுவதும் மருதநிலப்பாங்காய் இருக்கின்றது. அங்கே வேளாண்மைத்தொழில் மிகுதியாய் நடக்கின்றது. வருஷத்துக்கு வருஷம் கோதுமை, வாற்கோதுமை முதலிய தானியங்களும், கிழங்குவகைகளும், பலவிதக் காய், கனி, கீரைகளும் திரளாய் உண்டாகின்றன. அவைகளில் சுதேசிகளுடைய செலவுக்கு வேண்டிய பகுதி போக, மீதியானவைகளெல்லாம் பிறதேசங்களுக்கு அனுப்பப்படும்: மேலும் அங்கே வெண்ணெய், பாற்கட்டி, ஆடு மாடு, குதிரை, தோல், ஆட்டுமயிர் முதலானவைகளையும் வியாபார விஷயமாகப் பிறதேசங்களுக்கு ஏற்றுமதிபண்ணுவார்கள். அவர்கள் மீன்களை அதிகமாய்ப் பிடித்து, பிறதேசத்தாருக்கு விற்கிருர்கள்.

தானியர் ஐஸ்லண்டிலே உயர்ந்த விலையுள்ள மிருது
வான ஒருவகை இறகை சேர்க்கிறார்கள். அது அவ்விட
த்திலே திரளாகச் சஞ்சரிக்கிற ஒருவகைத் தாராவின்
மார்பிலுள்ள வெண்மையான மெல்லிய இறகாம். கட
ற்கரையிலுள்ள உயர்ந்த மலைப்பிளவுகளின் பக்கத்திலும்,
செங்குத்தான் பாறைச் சரிவுகளிலும், மேற்சொல்லிய ப
ட்சிகள் கட்டிவைத்திருக்கும் கூடுகளிலிருந்து அது எடுத்
துக்கொள்ளப்படும். அவ்விடத்திற்கு ஏறிப்போய் அதை
எடுப்பது மிகவும் கஷ்டம். ஆதலால் அது விலையுயர்ந்த
அருமையான பொருளாயிருக்கின்றது. எடுக்கப்போகிற
போது, பல முறையும் அபாயம் நேரிடுகிறதும் உண்டு;
அந்தப் பட்சி தன்மார்பிலுள்ள பஞ்சுபோன்ற மிருதுவா
ன இறகைக் கோதி, எடுத்து, கூட்டுக்குள்ளே துணி
தைத்துவைத்த பாவனைபோல, பரப்பிவைக்க, அதைம
னுஷர் எடுத்துக் கொண்டுபோவார்கள். பட்சி திரும்ப
வும் முன்போலவே தன் இறகைக் கூட்டுக்குள்ளே பர
ப்பிவைக்கும்; அதையும் எடுத்துக் கொண்டுபோவார்கள்.
அப்புறம் மூன்றாந்தரமும் அப்படியே செய்து பறிகொடுத்
துவிடும். பின்பு அவர்கள் அதற்கு இப்படி அபகாரம்பண்
ணுவதை விட்டுவிடுவார்கள். அவ்வகையான வாத்துகள்
ஐஸ்லண்ட்தீவிலே திரள்திரளாய் உண்டு. அவைகள் மிக
வும் சாதுவானவைகளாயிருக்கும்; அவைகளிடத்திலே து
ஷ்டத்தன்மை எவ்வளவுமில்லை. ஒரு கூட்டில் மாத்திரம்
எடுக்கப்படும் இறகு ஒன்றுக்கும் போதாது. பல கூடுகளி
லுள்ள இறகை எடுத்து ஒன்றாகச் சேர்த்தால், அது காரி
யத்துக்கு உதவியாகும். ஐஸ்லண்ட்தீவில் வசிக்கும் குடிக
ளுக்குத் திரவிய சம்பாத்தியத்திற்கு வருவழி மேற்சொல்
லிய இறகும், மீன்பிடித்து விற்பதுமேயொழிய, வேறில்
லை. அது ஒரு ஆச்சரியமான தீவாயிருப்பதினால், அதைச்

சார்ந்த சில குறிப்புகளை இவ்விடத்திற் சுருக்கமாய்ச் சொல்வது தகுதியாயிருக்கும். ௯-ம் நூற்றாண்டில் நார்வேதேசத்தை அரசாண்ட கொடுங்கோல்மன்னன் ஒருவன் குடிகளுக்குச் செய்த நிஷ்டூரத்தைச் சகிக்க கூடாமல், உயர் குலத்திற் பிறந்த துணிவுடைய சில பிரபுகள் அன்னிய தேசங்களுக்குப் பிரயாணம் போனார்கள்; போன வழியில் அவர்கள் ஐஸ்லண்ட்தீவைக் கண்டு, அதிற் குடியேறினார்கள். அங்கே அவர்கள் வரவர விர்த்தியடைந்து, பலத்த சாதியானார்கள். அந்தத் தீவின் நிலம் பயிரிடுவதற்கு வளங்கொண்டதல்ல. அங்கங்கே புல் அதிகமாய் வளருமேயல்லாமல், வேறு யாதொரு விளைவில்லை. அந்தத் தீவிலே அனேக அக்கினிமலைகள் உண்டு; அந்த மலைகளில் அப்போதப்போது நெருப்பு மூண்டு சீறி எரிந்து சுவாலிக்கும்: அப்பொழுது அதிலிருந்து நெருப்புக்கல்லுகள் சோனாமாரிபோலக் கக்கப்படும். அந்தக் கல்லுகள் தேசத்தில் எங்கும் சிதறுண்டு செறிந்து கிடக்கும். மேலும் அப்படிச்சொரிகிற நெருப்புக்கல்லுகள் உருகி, அங்குள்ள பயிர், பூண்டு, மாவடை, மரவடைகளையெல்லாம் சாம்பராகும்படி எரித்து, நிலத்திலே உறைந்து கிடக்கும். அதற்குத் தப்பி, அங்கங்கே இருக்கிற துண்டு நிலங்களில், கஸ்திப்பட்டுப் பயிர்வேலைசெய்யும் குடிகள், தங்களிடத்திலுள்ள சில ஆடுமாடுகளையும், குதிரைகளையும் மேய்க்கும்படி புல் உண்டாக்குவார்கள். அந்தத் தீவிலே குளிர் அதிகம். அங்கே பழம் தரும் மரங்களைக் காண்பதும் அருமை. பூஞ்செடிகளும், கீரைவகைகளும் கோடைகாலத்திலாவது செழிப்பாய் உண்டாகிறதில்லை. ஆதால் அங்குள்ள குடிகள் மீன்களையும், மேற்சொல்லிய இறகுகளையும் அடுத்த தேசங்களுக்கு ஏற்றிக்கொண்டுபோய் விலைப்படுத்தி, அங்கங்கிருந்து தங்களுக்கு வேண்டிய போசன

பதார்த்தங்களை வாங்கிவருவார்கள். அந்தத் தீவில் ஒரு சிறு நகரமும், சில கிராமங்களும் உண்டு. தேசாதிபதியும், அவருடைய விசாரணைக்குள் அடங்கிய உத்தியோகஸ்தர் சிலரும், எவ்வளவும் கஸ்திப்படாமல் சீவனம்பண்ணப் போதுமான பொருளிருப்புள்ள குடிகள் அனைவரும் பட்டணத்தில் வாசமாயிருப்பார்கள். நாட்டுப்புறங்களில் இருந்து நாள்கழிக்குங் குடிகள் ஏழைகளும், முயற்சித்தாழ்வுள்ளவர்களும், சீர்த்திருத்தமில்லாதவர்களுமாய் இருக்கிறார்கள்; ஆகிலும் அவர்கள் தங்களுக்குள்ளே சச்சரவில்லாமல், சமாதானமாய் வாழ்ந்து, உண்மையிலும், ஒழுக்கத்திலும் சிறந்து, சமயாசாரம் தவறாதவர்களாய், கல்விப்பொருளை விரும்பித் தேடுவார்கள். ஒரு பாதி நெருப்பும் மறு பாதி பனியுமுள்ளதான அந்தத் தீவிலே மிகவும் அற்புதமான ஒரு காட்சி உண்டு.— அதென்னவென்றால், அங்கிருக்கும் மலைகளின் ஊற்றுக்களிலுள்ள தண்ணீரானது கொதித்து, பொங்கி, குதிகொண்டு, ௨௰, ௩௰ அடி உயரத்துக்கு தூண்போல் எழுந்து, கொஞ்ச நேரத்தின்பின் வற்றுவதும், திரும்பவும் முன்போலக் கொதித்து, பொங்கி, வற்றுவதுமாம். அந்தத் தீவிலே குடிசனங்கள் அதிகமாய் இல்லை. இருக்கிறவர்களிற் பலர் மீன்பிடித்துச் சீவனம் பண்ணுகிறவர்கள். நார்வேதேசம் தென்மார்க்கிராச்சியத்துடன் சேர்ந்த நாள்முதலாய் இதுவரையில், மேற்சொல்லிய தீவு தானியருக்கு ஆதீனமாயிருக்கின்றது.

முற்காலத்திலே தென்மார்க்குதேசத்திற் குடியேறிய சனங்கள் வெவ்வேறு வகுப்பாராய் இருந்தார்கள்; ஆகிலும் அவர்கள் யாதொரு பேதமில்லாமல், ஒருமையாகச் சேர்ந்து நடந்தார்கள். அந்தக் காலம் தொடங்கி இந்நாள் வரைக்கும், அவர்கள் சுதேச அதிபதிகளின் ஆளு

கைக்கு உட்பட்டவர்களாய் இருக்கிறார்கள்; அவர்கள் ௯-ம் நூற்றாண்டிலே கிறிஸ்துமார்க்கத்தை அனுசரித்துக் கொண்டு, அதுமுதல் சுயாதீனம் பெற்று வாழுகிறார்கள்; அவர்கள் அரசர் பெரும்பாலும் சனங்களுடைய நயத்தை விரும்பி, விவேகமாய் ஆளுகைசெய்துவருகிறார்கள். ஐரோப்பியசாதிகளுக்குள்ளே தானியசாதியார் திரவிய பலத்திலும், செல்வாக்கிலும் ஒருபொழுதும் முதன்மை பெற்றிருந்தவர்களல்ல; அவர்கள் எப்பொழுதாகிலும், எந்தச் சாதிக்காவது கீழ்ப்பட்டவர்களுமல்ல. அவர்கள் தைரியசாலிகளும், வீரவான்களும், சுதேச அபிமானிகளும், கப்பல் ஓட்டும் தொழிலில் விருப்பமுடையவர்களும், யுத்தத்தில் அதிக உற்சாகமுள்ளவர்களுமாய் இருக்கிறார்கள். அன்னிய துரைத்தனத்தார் தங்கள் மேற் படையெடுத்து வரும்பொழுது, அவர்களைப் பயப்படுத்தி ஓட்டிவிடவும், தங்கள் தேசத்தின் சுயாதீனத்தைக் காக்கவும் போதுமான பராக்கிரமமுடைய சேனைகளைக் கடலிலும் தரையிலும் வைத்து ஆதரித்துவந்தார்கள். அங்கே இப்பொழுது அரசாளுகிற ௭-வது பெர்டினாண்ட் அரசனானவர் நற்குண நற்செய்கைகளிலே சிறந்த யோக்கியராய் இருக்கிறார்; அவரை சனங்கள் அதிகமாய் நேசித்து மதித்துவருகிறார்கள். சில வருஷங்களுக்கு முன்பு அவர் பட்டத்துக்கு வந்தபொழுது, தேசத்தாருக்கு உபயோகமான அனேக சட்டங்களை ஏற்படுத்தி, தமது குடிகளெல்லாரும் சுயாதீனம் பெற்று வாழும்படி செய்தார். அவருக்குமுன் இருந்த அரசர் ஒருவரும் அவ்விதமான சட்டங்களை ஏற்படுத்தினதில்லை; ஆகிலும் பின்பு அரசனுக்கும் குடிகளுக்கும் ஏதோ ஒரு காரணத்தினாலே சமாதானபேதம் உண்டாயிருக்கின்றது. அது முழுமையும் நீங்குவதற்கு இன்னும் அதிக

காலம் செல்லும். அத்தேசத்திலே வழங்குகிற சமயம் கிறிஸ்துமார்க்கம்; வேறு சமயங்களை அனுசரிப்பதற்கும் இடங்கொடுக்கப்பட்டிருக்கின்றது. அவரவர் தங்களுக்கு இஷ்டமான கோட்பாடுகளை அங்கீகரிப்பதற்கும், அவைகளை அச்சிட்டுப பிரசித்தம்பண்ணுவதற்கும் யாதொரு தடையில்லை. முன்சொன்னபடியே சனங்களுடைய முக்கியமான தொழில் வேளாண்மை செய்வதும், மீன்பிடிப்பதுமாம். தென்மார்க்குதேசத்தின் இராஜதானியாகிய கோபென்ஹேகென் நகரத்திலே வர்த்தகமுயற்சிகள் நடக்கின்றன; பொதுவாகப் பார்த்தால் அந்தத் தேசம் வியாபார விர்த்தியுள்ளதல்ல; மேற்சொல்லிய இராஜதானி சீலண்ட்தீவிலே கட்டப்பட்டிருக்கின்றது; அது மிகவும் சிறந்த ஒரு பட்டணம்; அதின் கரையில் வசதியான கப்பல் துறைமுகமும், இராணுவத்துக்குரிய சில கப்பல்களும் உண்டு; நெசவு முதலிய கைத்தொழில் முயற்சிகள் அங்கே அதிகம் இல்லை. அந்தத் தேசத்தின் நிலம் எங்கும் ஒரே மட்டமாயிருக்கின்றது. அங்கே மலைகளுமில்லை, எவ்வகையான சுரங்கங்களுமில்லை; நீர்வளத்துக்கு ஆதாரமாக ஆறுகளுமில்லை: இப்படி நீர்வளம் நிலக்கரிவளம் இரண்டும் இல்லாதிருப்பதினால், கைத்தொழில் முயற்சியாற் செய்யப்படும் வஸ்துக்களில் தங்களுக்குத் தேவையானவைகளை அந்தத் தேசத்தார்கள் அங்கிளோதேசம் முதலிய பிறதேசங்களிலிருந்து எடுப்பித்துக்கொள்வார்கள். அவ்வகையான வஸ்துக்களை அங்கே செய்யவேண்டுமானால், அதிக செலவுபிடிக்கும். தென்மார்க்குதேசத்திலே விசேஷமாய் மாரிகாலத்தில் குளிர் அதிகம்; அப்பொழுது நார்வே, சுவேதேன் தேசங்களைப்போல, அந்தத் தேசம் எங்கும் உறைந்த மழையினாலும் பனிக்கட்டியினாலும் மூடப்பட்டிருக்கும்;

அந்தக் காலத்தில் அங்கே எளிதாகப் பிரயாணம்பண்ணலாம். பொதுவாய் எந்தக் காலத்திலும் பிரயாணம்பண்ணுவதற்கு உபயோகமான சாலைகளும், இருப்புப்பாதைகளும் உண்டு. அத்தேசத்தில் ஒரு வருஷம் மிகவும் அதிக குளிர் உண்டானபோது, அதற்கும் நார்வேதேசத்துக்கும் இடையிலுள்ள சமுத்திரக்கால் முழுமையும் கல்லைப்போல் உறைந்துபோயிற்று. அப்பொழுது அந்த இரண்டு தேசங்களிலுமுள்ள சனங்கள் பயப்படாமல் அதின்வழியாகப் போக்குவரவு செய்ததுமன்றி, அவர்கள் அங்கே திரளாகச் சேர்ந்து, மிகுந்த சம்பிரமத்துடனே உற்சவமும் கொண்டாடினார்கள். தென்மார்க்குதேசத்தில் கல்வியின் அபிவிர்த்திக்காக மிகுந்த சகாயம் செய்யப்படுகின்றது. அங்குள்ள சனங்கள் சகல வித்தைகளையும், சாஸ்திரங்களையும் நன்றாய்ப் படிக்கிறார்கள். அவர்களுக்குள் அனேகர் அப்போதப்போது கல்வித்திறமையிற் கீர்த்திபெற்றிருந்தார்கள். கசு-ம் நூற்றாண்டில் உலகம் முழுதும் மெச்சும்படி ககோளசாஸ்திரத்தைக் கரைகண்ட நிபுணனாயிருந்த டைகோ பிறாஹி என்பவன் தென்மார்க்குதெசத்திலே பிறந்தவன். பின்பு சித்திரவேலையிற் கைவந்தவனென்று எங்கும் அறியப்பட்டிருந்த தோர்வால்ட்ஸென் என்பவனும் தென்மார்க்குதேசத்திற் பிறந்த ஒருவனாம். அவன் இறந்து இன்னும் அநேக வருஷம் ஆகவில்லை. இராஜதானிக்கு மாத்திரமல்ல, தென்மார்க்குதேசம் முழுதுக்கும் அழகாயிருப்பது அங்குள்ள நூதனபண்டசாலையாம். அந்த நூதனபண்டசாலையில், மேற்சொல்லிய தோர்வால்ட்ஸென் என்பவன் செய்த சித்திரவேலைகள் அனேகம் உண்டு; மேலும் சனங்கள் அவனை மிகவும் மதித்துப் போற்றி, அவன் சீவித்துப்போனதைக் குறித்துத் துக்கித்து, அவ

னுடைய பிரேதம் சேமஞ்செய்யப்பட்டிருக்கிற இடத்திலே தங்கள் கைச்செலவில் அவனுக்கு ஒரு சிறப்பான கோரி கட்டியிருக்கிறார்கள்.

---

## உலாந்ததேசம்.

உலாந்ததேசம் பூலோகத்திலுள்ள எந்தந்தத் தேசங்களைப்பார்க்கிலும் அதிகம் அபூர்வமும் ஆச்சரியமுமானது. எந்த வேலையிலாவது எவ்வளவு தடைகளும் சங்கடங்களும் நேரிட்டபோதிலும், முயற்சியும் உற்சாகமும் குறையாதிருக்குமானால், அந்த வேலையில் எத்தனையோ ஆச்சரியமான அனுகூலங்கள் உண்டாகுமென்பதற்கு உலாந்ததெசமே சாட்சியாம். அந்தத் தேசத்தின் அதிக பங்கு கடற்கரையைத் தூர்த்தும், கழிகளிலும் மடுக்களிலுமுள்ள நீரை காற்று யந்திரங்களைக்கொண்டு இறைத்தும் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

உலாந்ததேசமானது கரு-ம் நூற்றாண்டுவரைக்கும் ஜர்மானியராச்சியத்துடனே சம்பந்தப்பட்டிருந்தது. பின்பு அது மாகாணத்தலைவராகிய ஸ்ற்றுற்ஹோல்டர் என்னும் உத்தியோகஸ்தருடைய அதிகாரத்துக்கு உட்பட்டிருந்தது. அந்தத் தேசம் அக்காலம் தொடங்கி திரவியத்திலும் செல்வாக்கிலும் வரவர விர்த்தியாகி, கசு-ம், கஎ-ம் நூற்றாண்டுகளில், பூலோகத்திலுள்ள பிரதான இராச்சியங்களில் ஒன்றாயிற்று. கசு-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில், அது திரும்பவும் ஜர்மானிய சக்கரவர்த்தியின் அதிகாரத்துக்கு உள்ளாயிற்று. அதற்குப்பின்பு, அது ஸ்பானியவரசனுடைய ஆளுகையில் வந்தது. ஸ்பானியவரசன் ஜனங்களை அநியாயமாய் ஒடுக்கி, அவர்

களுக்குச் சொல்லிமுடியாத கொடுமைகளைச் செய்ததி னால், அவர்கள் அவனுடைய ஆணையைக் கடந்து, கல கஞ்செய்தார்கள். பின்பு அவர்கள் சுயாதீனம் பெற்று, தங்கள் தேசத்தை ஏழு மாகாணங்களாய்ப் பிரித்து, அவைகளை ஒன்றோடொன்று சம்பந்தப்படுத்தி, ஆளு கைசெய்தார்கள். அவர்கள் ஏற்படுத்திய அரசாட்சிமு றை கலப்புள்ளதாய் இருந்தது. அந்த இராச்சியத்தின் துரைத்தனத்தார் இரண்டு வகுப்பாராய் இருந்தார்கள். க-வது வமிசபாரம்பரையாய் உரிமை தவறுமற் பட் டத்துக்கு வருகிற மாகாணத்தலைவரும், உ-வது அவ ருடைய ஆளுகைக்குள் இருக்கிற மேற்சொல்லிய ஏழு மாகாணங்களின் ஜனங்கள் தெரிந்து ஏற்படுத்தும் பிர திநிதிகள் சேர்ந்த சாதாரண மந்திராலோசனைச்சபை யாருந்தான். அரசன் தனக்குரிய அதிகாரத்துக்கு மிஞ்சி நடவாதபடி காத்து, வேண்டிய சட்டங்களை நிருபித்து நடத்தி, இப்படி அரசனுக்குத் துணைசெய்வதே அந்த மந்திராலோசனைச்சபையாரின் கடமையாம். அவர்களு டைய அனுமதியில்லாமல், அரசனால் பிரதான காரியம் ஒன்றும் செய்ய முடியாது. இவ்வண்ணமே அவர்களு டைய துரைத்தனம் சனவரசாட்சியும், ஏகாதிபத்தியமும் ஒன்றாகச் சேர்ந்து நடப்பதாய் இருக்கின்றது. துரைத்த னத்தார் திருத்தமாகவும், விவேகமாகவும், பரோபகார மாகவும் ஆளுகைசெய்கிறார்கள்; சனங்கள் உற்சாகத்தி லும், கைத்தொழில் முயற்சியிலும் குறையாதிருக்கும் படி, அவர்களுக்குச் சகாயம்பண்ணுகிறார்கள்; அவர் கள் சுயாதீனராக நடக்கவும், அவரவருக்கு இஷ்டமான கோட்பாடுகளையும் சமயங்களையும் அனுசரிக்கவும் இடங் கொடுக்கிறார்கள்: ஆகிலும் சாதாரணமாய் அந்தத் தே சத்தார் தங்களுக்குள்ளே ஸ்தாபிக்கப்பட்ட சுவிசேஷ

மார்க்கத்தை அனுசரிக்கிறார்கள். உலாந்தசாதியார் இயல்பாய் ஆண்மையும், உண்மையும், முயற்சியும், துணிவுமுள்ளவர்கள். அவர்கள் தங்கள் அதிகாரிகளைக் கனப்படுத்தி, ஒருவரோடொருவர் சேர்ந்து, சமாதானமாய் வாழ்ந்திருக்கிறார்கள். உலாந்தசாதியார் ௧௬-ம் நூற்றாண்டின் முடிவில், ஸ்பானியருடைய ஆளுகையென்னும் நுகத்தைப் புரட்டி, தங்கள் சுய அரசருடைய ஆளுகைக்கு உட்பட்டார்கள், அப்படி இருக்கும் காலத்தில், சற்றேறக்குறைய ௬0 வருஷத்துக்குமுன்னே பிராஞ்சிய சக்கரவர்த்தியாகிய க-ம் நப்போலியன் என்பவர் அவர்களைக் கீழ்ப்படுத்தி அரசாண்டார்; ஆகிலும் கொஞ்சக் காலத்திற்குள் அவர்கள் திரும்பவும் சுயாதீனம் பெற்று, தங்கள் அரசனை ஆளுகைக்கு மீண்டுவரும்படி செய்தார்கள்; அவர்கள் அதுமுதல் இதுவரையில் யாதொரு ஐக்கபேதமில்லாமல், சவுக்கியமாய் வாழ்ந்திருக்கிறார்கள். பூர்வத்திலே உலாந்தசாதியார் பல முறையும் பகைவர் மேற் படையெடுத்துச் சென்றதும், தங்கள் தேசத்திற்குப்படையெடுத்து வந்த சத்துருக்களோடு எதிர்த்து, சண்டைபண்ணி, அவர்களைப் புறங்காட்டச்செய்ததும் உண்டு. சில நூற்றாண்டளவும் அவர்களுடைய கப்பல் இராணுவங்களைப்போல உலகத்தில் எங்கும் இருந்ததில்லை: ஆகிலும் சென்ற நூற்றாண்டில் அவர்களுக்கும் அங்கிலோ தேசத்தாருக்கும் கடைசியாய் உண்டான யுத்தத்திலே அவர்களுடைய மரக்கலங்களெல்லாம் சங்கரிக்கப்பட்டன; அதின்பிறகு அவர்கள் இன்னும் தலையெடுக்கவில்லை.

அத்தேசத்தின் நிலம் கோதுமை முதலிய தானியங்களைப் பயிர்செய்வதற்குத் தகாதது. ஆனபடியால் சனங்கள் அந்த முயற்சியை விட்டு, வியாபாரத்தையும்

நெசவு முதலிய கைத்தொழில்களையும் உற்சாகத்துடன் நடத்துகிறார்கள்: ஆகிலும் அப்படிப்பட்டவைகளுக்கு ஏற்ற எத்தினங்கள் அத்தேசத்தில் அதிகமாயில்லை; அங்கே பெரிய பட்டணமில்லை; தேசம் முழுவதும் கழியும், மடுக்களும், ஆறுகளும் இருந்தன; தரை மேடு பள்ளம் இல்லாமல், ஒரே மட்டமாய்ப் பரவியிருக்கின்றது; மரம் செடிகள் சில சிறுநாடுகளில் அங்கங்கே அபூர்வமாயிருக்கும்; அத்தேசத்தில் கல்லு கொஞ்சமாவது இல்லை; அந்தத் தேசம் பல ஆறுகளின் முகத்துவாரத்திலுள்ள பிரிவாற்றுக்கழியாய் இருக்கின்றது. அங்குள்ள சனங்கள் முதல் முதல் செய்த முக்கியமான வியாபாரம் ஐரைமீன் பிடித்து விற்பது: அந்த மீனை அவர்கள் திரளாய்ப் பிடித்து, பதனழியாமல் பெரிய பீப்பாக்களில் அடைத்து, ஊற வைத்து, பின்பு சுற்றுப்புறங்களிலுள்ள மற்றச் சாதிகளுக்கு விற்பார்கள். மேற்சொல்லிய விதமாய் ஐரைமீன் விற்றுச் சேர்த்த பணத்தைக்கொண்டு அவர்கள் கப்பல் செப்பனிடுவதற்கு வேண்டிய சாமான்களை வாங்கினார்கள். மரம், குங்குலியம், கிசில் முதலியவைகளை ரூஷியா, சுவேதேன், நார்வேதேசங்களிலும்; கப்பற்பாய் பின்னவும், கயிறு திரிக்கவும் உபயோகமாகிய சணல்நூலை ரூஷியாவிலும் கிரயத்திற்கு வாங்கி, கப்பல்களைச் செப்பனிட்டார்கள். இப்படி அவர்கள் செப்பனிட்ட கப்பல்களில் ஏறி, பலபல தேசங்களுக்குப் பிரயாணம்போய், அங்கங்கே மலிவாய் விற்கிற வியாபாரவஸ்துக்களைக் கிரயத்திற்கு வாங்கி, அவைகளில் வேறு வேலைசெய்யாமல் கைக்குக்கைமேல் மறுதேசங்களில் விற்பதும், வெவ்வேறு கைவேலைகளைச் செய்து விற்பதும் அவர்களுக்கு வழக்கம். இப்படி அவர்கள் விர்த்தியடைந்து அமெரிக்கா, அத்லந்திக்சமுத்திரத்திலுள்ள அனேக தீவுகள், ஆபிரிக்கா, ஆசி

யா, இந்திய சமுத்திரத்திலுள்ள தீவுகள் முதலான பல இடங்களிற் குடியேறினார்கள். அவைகளிற் சில இடங்களை யுத்தஞ்செய்து பிடித்தும், மற்ற இடங்களிலுள்ள துரைத்தனத்தாருடன் சமாதான உடம்படிக்கைபண்ணியும், அவ்விதமாய் வட ஐரோப்பாதேசத்தில் நடந்த வியாபாரம் முழுவதையும் ௨00 வருஷமளவும் அவர்களே நடத்தினார்கள். பிற்பாடு விசேஷமாய் அங்கிளோசாதியார் முதலானவர்கள் மேற்குறித்த இடங்களில் அவர்களைப் போல தாங்களும் வியாபாரத்தொழிலை நடத்தத் தொடங்கினார்கள். உலாந்தசாதியார் வியாபாரத்திலே தலையெடுத்து அனுகூலமடைந்த காலத்தில், அவர்கள் தங்கள் தேசத்திலே பலபல பெரிய பட்டணங்களைக் கட்டினார்கள்; அவைகளில் ஆம்ஸ்ற்றர்டம் என்பது அந்தத் தேசத்தின் தலைப்பட்டணம்; அது மிகவும் ஆச்சரியமான ஒரு பட்டணம்; அது இரண்டு நதிகள் ஒன்றோடொன்று கலக்கிற இடத்திலே கட்டப்பட்டிருக்கின்றது. அதைச் சூழ்ந்திருக்கிற மதிலுக்கு வெளியே நாலு புறத்திலும் தொடர்ச்சியாய் ஒரு கால்வாய் வெட்டப்பட்டிருக்கின்றதுமல்லாமல், பட்டணத்துக்குள்ளும் வீதிக்குவீதி அனேக சிறு கால்வாய்கள் ஒன்றுக்கொன்று குறுக்கிட்டிருக்கின்றன. அந்த நகரத்துக்கு அஸ்திவாரம் போட்ட இடம் சதுப்பு நிலமாயிருப்பதினால், அதில் வீடு கட்டுகிறவர்கள் பெரிய மரக்குற்றிகளை நிலத்துக்குள் ஆழமாய் ஏறும்படி நிரைநிரையாய்க் கடாவி, கெட்டித்து, அவைகளின்மேல் வீடுகளைக் கட்டுவார்கள். இவ்வளவு சங்கடம் இருந்தும், ஆம்ஸ்ற்றர்டம்நகரத்திலுள்ள தேவாலயங்கள், மண்டபங்கள், வீடுகள் முதலிய கட்டடங்கள் சிங்காரமாகவும், வீதிகள் விசாலமாகவும் இருக்கின்றன; அந்தப் பட்டணத்துக்கு கஅ-ம் நூற்

ருண்டில் அஸ்திவாரம் போடப்பட்டது. அது அக்கா லம் தொடங்கி வரவர மேன்மேலும் விஸ்தாரமாய்க் கட்டி அலங்கரிக்கப்பட்டது. இப்பொழுது அதின் காட்சி அதிக மாட்சிமையுள்ளதாய் இருக்கின்றது. விசாலத்திலும் மேன்மையிலும் அதற்கு இரண்டாந்தரமான பட்டணம் ரொற்றர்டம் என்பது. அது ஆமஸ்ற்றர்டம் நகரத்துக்கு முன்பு கட்டப்பட்டதும், அதைப்போல அதிக விசித்திரமுள்ளதுமாய் இருக்கின்றது. அதுவும் இரண்டு ஆறுகள் சந்திக்கும் இடத்திலே கட்டப்பட்டது; அவைகளில் ஒன்று பெரியது, மற்றது சிறியது. பெரிய ஆற்றுக்கு மியூஸ் என்று பெயர். ரொற்றர்டம் நகரத்துக்கு போடப்பட்ட அஸ்திவாரமும் மரக்குற்றிகள் தான்: அந்த நகரத்திலும் கால்வாய்கள் அனேகம் உண்டு. மேற்சொல்லிய பட்டணங்களிலுள்ள கட்டடங்களுக்கு வேண்டிய திரளான மரங்கள் வடதேசங்களிலிருந்து கொண்டுபோகப்படுகின்றன: இப்படியே எண்ணிறந்த மரங்கள் தரைக்குள்ளே கடாவப்பட்டிருக்கின்றன. ரொற்றர்டம்பட்டணம் கடற்கரையை அடுத்திருக்கின்றது. மியூஸ்நதியின் முகத்துவாரம் அதிக ஆழமாயிருப்பதினால், கப்பல்கள் நகரத்தின் நடுவளவும் வீடுகளுக்கு இடையிடையே மிகவும் சமீபமாகப் போம். ஆதலால் அங்குள்ள துறைமுகம் வியாபாரத்துக்கு அதிக வளமுள்ளதாயிருக்கின்றது. அப்படியே குடிகளும் தங்களுக்கு அனுகூலமாய்த் தோன்றிய எத்தினங்களையெல்லாம் முயற்சியுடனே பிரயோகித்து, வர்த்தகஞ்செய்கிறார்கள். ரொற்றர்டம், ஆம்ஸ்ற்றர்டம் என்னும் இரண்டு பட்டணங்களை அடுத்திருக்கிற கரைகளில் கப்பல் செப்பனிடுவதற்கு வசதியான துறைகள் இருக்கின்றன; அங்கே ஏராளமாய்த் தங்கி நிற்கிற பெரிய

வியாபாரக்கப்பல்கள் பொதுவாய் பல தேசங்களுக்கும், விசேஷமாய் இந்தியாதேசத்துக்கும் போக்குவரவாயிருக்கின்றன. உலாந்ததேசத்திலே வேறொரு அழகான பட்டணம் ஹேக்என்பது. அங்கே அரசன் வாசமாயிருக்கிறார். இராஜபரிசனத்தார் அவ்விடத்திலே கூடுவார்கள். அந்தப் பட்டணம் தற்காலத்தில் அதிகமாய்ச் சிங்காரிக்கப்பட்டிருக்கின்றது. அங்கே அனேக வீடுகள் விசித்திரமாய்க் கட்டப்பட்டிருக்கின்றன; ஒரு மேலான நூதனபண்டசாலையும், சித்திரப்படங்களைச் சேர்த்துக் காட்டுகிற மண்டபமும் அங்கே உண்டு. அந்தப் பட்டணத்திலே அனேக பிரபுகள் வாசமாயிருக்கிறார்கள். உலாந்ததேசத்திலுள்ள அந்தந்த நகரங்களில் வழக்கமாயிருப்பதுபோலக், ஹேக் என்னும் பட்டணத்தில் வாசமாயிருக்கிற சனங்களில் அனேகர் வர்த்தகர்கள்; அவர்களிற் சிலர் பெரிய பிரபுகளைப்போல் இருக்கிறார்கள். லேடென் என்பது அங்குள்ள வேறொரு பட்டணம்; அந்தப் பட்டணத்தில் அதிக பிரபலமான வித்தியாசாலை ஒன்று உண்டு. உலாந்ததேசத்தில் அனேக வித்தியாசாலைகள் இருக்கின்றன; அவைகளுக்குள்ளெல்லாம் லேடென் வித்தியாசாலையே தலைமைபெற்றது. அது முன் ஒருகாலத்தில் ஐரோப்பாகண்டத்திலுள்ள எல்லா வித்தியாசாலைகளைப் பார்க்கிலும், அதிக கீர்த்தியுடையதாய் இருந்தது; இப்பொழுதோ அது அத்தனை மேன்மையுள்ளதாய் இருக்கவில்லை. எப்படியும் உலகத்தில் அங்கங்கே இப்பொழுது இருக்கிற திறமான வித்தியாசாலைகளில் அதுவும் ஒன்றாக மதிக்கப்படும்: அதில் வாசித்தவர்களில்அனேகர் அதிக கல்விமான்கள்; போவர்ஹாவ் என்னும் வைத்தியர், கிரேஷியுஸ் என்னும் வேதசாஸ்திரி முதலான வித்துவான்களும் அங்கே

வாசித்தவர்களாம். அதில் படித்த சுதேசிகளுக்குள்ளும் பிறதேசத்தாருக்குள்ளும் வேறு அனேக வித்துவான்களும் உண்டு. உலாந்தசாதியார் கல்வியிலே பிரியமுடையவர்கள்; பொதுவாய் அவர்களில் அனேகர் நன்றாகப் படித்தவர்கள்; ஆகிலும் திரவியம் தேடவேண்டுமென்பதே அவர்களுடைய முக்கியமான விருப்பமாம்; இப்படி அவர்கள் பொருளாசைக்காரராயிருப்பதினால், நாகரிகம் முதலிய திருத்தங்களை அதிகமாய் மதிக்கிறதில்லை. அதுவே அவர்களுக்குள்ள ஒரு பெரிய குறைவு. அவர்கள் வாசமாயிருக்கிற வீடுகள் எப்பொழுதும் சுத்தமும் நேர்த்தியுமாயிருக்கும்; அவர்கள் உடம்புகளோ அப்படியல்ல. நல்லொழுக்கமும் மரியாதையும் அவர்களுக்குள் அதிகமாயில்லை. ஆனதினால் அவர்கள் சிலவேளை நினையாதபடி மறு சாதியாரை உபசரிக்காமல் விடுகிறார்கள்; அதைக் கண்டு அனேகருக்கு அவர்கள்மேல் வெறுப்பு உண்டாகின்றது. உலாந்தசாதியாருக்குள் பிரபுகள் வகுப்பைச் சார்ந்த ஜனங்கள் இல்லாதிருக்கிறபடியால், உபசாரமும் ஒழுக்கமும் இல்லாமற் போயின. நாகரிகம், சீர்திருத்தம் முதலிய லட்சணங்கள் சாதாரண சனங்களுக்கு இல்லை: இப்படியே அவர்கள் பல விஷயங்களிற் குறைவுள்ளவர்களாய் இருந்தும், ஆண்மையும், சாந்தமும், தொழில்முயற்சியும் உள்ளவர்கள்; அவர்கள் அனுசரிக்கிற சமயம் உண்மையும் சிறப்புமுள்ளதென்பதற்கு அவர்களால் ஆதரிக்கப்படுகின்ற ஏராளமான தர்ம சாலைகளே தகுதியான சாட்சிகளாம்; அங்கே ஏழைகளுக்கும் அநாதப்பிள்ளைகளுக்கும் கல்விகளை கற்றுக்கொடுப்பதற்கு அனேக பாடசாலைகள் உண்டு. மேலும் நோய்களை பரிகரிக்க வெவ்வேறு வைத்தியசாலைகளும், இடுக்கண்பட்டவர்களை ஆதரிக்கச் சம்ரட்சணைசா

லைகளும் உண்டு. அங்குள்ள சிறைச்சாலைகள் அதிக திற மானவைகள். அவைகள் தண்டிக்கப்படும் குற்றவாளிக ளுக்கு வேறும், ஊழியஞ்செய்யும் குற்றவாளிகளுக்கு வே றுமாகப் பகுதி பகுதியாய்ச் செய்யப்பட்டிருக்கின்றன. அவைகளெல்லாம் நன்றாக விசாரித்து நடத்தப்படுகின் றன. மேற்சொல்லியபடி உலாந்ததேசத்திலே தர்மம் விர்த்தியாய் நடப்பதினால், அங்கே யாசகரையும், ஏழை களையும், குடியரையும் காண்பது மிகவும் அருமை. ஜன ங்கள் சாதுவானவர்களும் அடக்கமுள்ளவர்களுமாய் இ ருக்கிறார்கள். அவர்கள் உல்லாசக்களிப்புக்கு அதிகமாய் இடங்கொடுக்கிறதில்லை. அத்தேசத்திலே வெவ்வேறு இடங்களிலும் குறித்த காலங்களிலும் கூடுகிற சந்தைக ளில், ஜனங்கள் திரளாய்ச் சேர்ந்து, விற்பன கொள்வன செய்வதுமல்லாமல், வெவ்வேறு விநோதங்கள் செய்தும் கொண்டாடுவார்கள்; அது அவர்களுக்கு அதிக முக்கி யம். உலாந்ததேசத்திலுள்ள நகரங்களைப்போல, நாட்டு ப்புறங்களும் விசேஷமும் ஆச்சரியமுமாயிருக்கும். அந்த நாட்டுப்புறங்களில் மிகுதியான பங்கு சதுப்புநிலங்களி லும் மடுக்களிலுமுள்ள நீரை இறைத்துத் திருத்தப்பட்ட தரையாம். அங்கே றயின், மியூஸ் என்னும் பெரிய ஆறுகளும், வேறு அனேக சிறிய ஆறுகளும் உண்டு. அந்த ஆறுகளுக்குப் பெரிய அணைகள் கட்டப்பட்டிருக் கின்றன: அல்லாமலும் அவைகளைக் கால்வாய்களிலே பாயும்படி வெட்டிவிடுகிறார்கள். அவ்விதமான அனேகம் கால்வாய்கள் நாட்டுப்புறங்களில் அங்கங்கே வெட்டப் பட்டிருக்கின்றன. மழை பெய்யும்பொழுதும், பனி உருகும்பொழுதும் ஆறுகளிலே மிகுதியாய் வருகிற வெ ள்ளம் அணை கடந்து, தேசத்தில் எங்கும் பெருக்கெடுத் து, எதிரிலுள்ள எல்லாவற்றையும் முழுகப்பண்ணி மிகு ந்த சேதம் உண்டுபண்ணுகின்றது. கடல் பெருகிச் சமீப

த்திலுள்ள தரையை மூடிக்கொள்ளாதபடிக்கு அணைகள் கட்டப்பட்டிருக்கின்றன. அந்த அணைகள் அப்போதப் போது சாக்கிரதையாய் பழுதுபார்க்கப்பட்டுவருகின்றன. ஆகிலும் உலாந்தசாதியார் தங்கள் விடாமுயற்சியினாலும், பொறுமையினாலும் அந்தச் சங்கடங்களையெலலாம் மேற்கொண்டு, செழிப்பும், செல்வமும், சுயாதீனமும் பெற்று வாழுகிறார்கள். சதுப்புநிலத்திலுள்ள நீரை இறைத்துத் திருத்திய தரை பயிரிடுவதற்குப் பக்குவம் இல்லாதிருந்தும், அதிலே புல் அதிகமாய் உண்டாகிறதினால், ஆடுமாடுகளுக்கு மேய்ச்சலுக்குத் தாழ்வில்லை; ஆதலால் அத்தேசத்தில் உண்டாகிற முக்கியமான வியாபார வஸ்துக்கள் வெண்ணெயும், பாலடைகட்டியுமாம். சில இடங்களில் ஒருவகை ஆட்டுமந்தைகள் ஏராளமாய் உண்டு. அவைகளில் கத்தரிக்கப்படும் மயிர் மிகவும் மெல்லியது. அங்கே விஸ்தாரமாய்ப் பயிரிடப்படுகின்ற சணலின் நாரில் மெல்லிதான நூல் எடுத்துத் துணி நெய்கிறார்கள். சணல்நூல், சரிகை, பதமிட்டதோல், பட்டுப்புடைவை, விதம்விதமான ஆட்டுமயிர்க்கம்பளிகள், புடைவைகள், உயர்ந்த விலையுள்ள ஒருவகையான மது இவைகளெல்லாம் அவர்களுடைய கைமுயற்சியால் செய்யப்படுகிற வியாபார வஸ்துகள். இவைகள்தவிர, ஆம்ஸ்ற்றர்டம் என்னும் பட்டணத்திலே கருப்பூரம் புடமிட, வெண்காரம், நீலக்கண்ணாடி இவைகள் செய்ய, சாதிலிங்கம் கூட்ட, வெவ்வேறு வாசனைத் தைலம் இறக்க அறிவார்கள். மேற்சொல்லிய வியாபாரச் சாமான்கள் அங்கே மலிவாய் விலைப்படுகின்றன. முக்கியமாய் அங்குள்ள கால்வாய்களிலே குதிரைகளால் இழுக்கப்பட்டு ஓடுகிற படவுகளில் பிரயாணக்காரர் போக்குவரவுபண்ணுவார்கள். வியாபாரச் சரக்குகளும் அந்தப் படவுகளில்

ஏற்றி அனுப்பப்படும். கால்வாய்களன்றி, அனேக சாலைகளும் அங்கே உண்டு. அங்குள்ள பெரிய பட்டணங்களுக்குப் போக்குவரவு செய்யயும்படி, அநேக இருப்புப்பாதைகள் செப்பனிடப்பட்டிருக்கின்றன. மேற்சொல்லிய கால்வாய்கள் பெரும்பாலும் நிலமட்டத்துக்கு உயரமாகவும், இரு புறத்திலும் உள்ள வயல்களும் கிராமங்களும் அதிக தாழ்வாகவும் இருக்கும். அந்தக் கால்வாய்களுக்குப் பழுது வராதபடி இருபுறமும் பலத்த அணைகள் கட்டப்பட்டிருக்கின்றன. இவைகளெல்லாம் பார்வைக்கு அதிக ஆச்சரியமாயிருக்கும். மேலும் நாட்டுப்புறங்களில் அங்கங்கே காற்று யந்திரக் கோபுரங்கள் அனேகம் இருக்கின்றன. அவைகளால் உண்டாகிற உபயோகம் மிகுதி. தானியம் அரைப்பது, நெசவு முதலிய தொழில் செய்வது, சதுப்புநிலங்களிலும் மடுக்களிலுமுள்ள நீரை இறைத்துவிடுவது ஆகிய இவைகளெல்லாம் அந்த யந்திரங்களினாற் செய்யப்படும். உலாந்த தேசத்திலே குடியேறிய ஜனங்கள் ஏராளமானவர்கள். அங்குள்ள கிராமங்களும், ஆடுமாடுகள் அடைக்கும் வீடுகளும், தானியக் களஞ்சியங்களும் அனேகம். உலாந்தசாதியார் புஷ்பங்களிலே அதிக பிரியமுள்ளவர்களாய் இருப்பதினால், அங்கே அனேகம் சிறப்பான நந்தவனங்கள் உண்டு. அந்தத் தேசத்திலுள்ள வீடுகள் எப்பொழுதும் நேர்த்தியாயிருக்கும். பிரயாணக்காரர் படவில் ஏறிக் கால்வாய் வழியாகச் செல்லும்பொழுதும், வண்டித்தொடரில் ஏறி இருப்புப்பாதை வழியாக வேகமாய்ப் போகும்பொழுதும், இரு புறத்திலும் இருக்கிற கிராமங்களையும் புலங்களையும் மேற்சொல்லிய குளிர்ச்சியான நந்தவனங்கள் அவர்களுக்கு அலங்காரமாகத் தோற்றுவிக்கும். அத்தேசத்தில் அங்கங்கே அனேக சத்திரங்கள் இருப்பதி

னால், பிரயாணம்பண்ணுவது எளிது. ஆகிலும் வேலை செய்கிறவர்களுக்குக் கொடுக்குங் கூலிவீதம் அதிகமாயிருப்பதினால், எவ்வகையான பண்டங்களும் அதிக விலையாக விற்கப்படும். அங்குள்ள வீடுகளைப்பார்க்கிலும் உயர்ந்திருக்கிற கால்வாய்களிலே பாய்வலித்து ஓடுகிற கப்பல்கள், படவுகள் முதலிய அபூர்வமான காட்சிகளன்றி, அத்தேசத்திலே பிரயாணம்போகிற அன்னியருடைய கருத்தைக் கவரத்தக்க வேறு ஒரு காட்சியும் உண்டு. அது மிகவும் விசித்திரமாய் எழுதப்பட்ட திரளான படங்களாம். ௧௬-ம், ௧௭-ம் நூற்றாண்டுகளில் உலாந்ததேசத்தில் இருந்த சித்திரக்காரருக்குச் சமானமானவர்கள் மற்றொரு தேசத்திலும் இல்லை. இப்பொழுதும் அவர்கள் சாதாரணமாய் சித்திரம் எழுதப் பழகுகிறார்கள்; பழகியும், நேர்த்தியாக எழுதத்தக்கவர்கள் இல்லை. அந்தத் தேசத்தில் இன்னும் ஒரு அதிசயமான காட்சி, அங்குள்ள மணல் திரளாய் அள்ளுண்டு ௪0, ௫0 அடி உயரமாக நெடுந்தூரமளவும் குவிந்திருப்பதே. அப்படிச் சேர்ந்த திரளான மணல் நடுநாட்டிற் சென்று குடிகளுக்கு நஷ்டத்தை உண்டாக்காதபடிக்கு, மணல்நிலத்திலே செழிக்கத்தக்க பயிர் பூண்டுகளை அதின்மேல் உண்டாக்குவார்கள்; அவைகள் முளைத்து வேரூன்றும்பொழுது, பக்கவேர்களெல்லாம் ஒன்றோடொன்று பின்னிக்கொள்வதினால், மணல் சிதறாமல் தரையோடு அமர்ந்துபோம்; அந்தப் பயிர் பூண்டுகளெல்லாம் வரவர உலர்ந்து, மக்கி, மண்ணுடன் ஒன்றாகச் சேர்ந்து நிலத்துக்கு நல்ல எருவாகும். பின்பு போசனத்துக்கு உபயோகமான கீரைவகைகளும் மரம் செடிகளும் அதிலே உண்டாக்கப்படும். அந்த மணல்மேடுகள் கடல் பெருகித் தேசத்தை அழிக்காதபடிக்கு பலமான அடைப்புகளாகவும், தேசத்துக்குக் காவலா

கவும் இருக்கின்றன. அவைகளால் அதிக நன்மையேயல்லாமல் தீமையில்லை. அந்தத் தேசத்தில் அதிக வெப்பமும் இல்லை, குளிர்ச்சியும் இல்லை. சில வேளை மாரிகாலத்திலே குளிர் மிகுந்திருப்பதும் உண்டு. அப்போது நிலம் கசிவாயிருக்கும்; ஆறுகள், கால்வாய்கள் எல்லாம் கல்லைப்போல் உறைந்துபோம். முன் ஒரு மாரி காலத்திலே, ஆறுகளும், கால்வாய்களும் அப்படி உறைந்தபொழுது, உலாந்தசாதியாருடைய போர்க்கப்பல்கள் பிராஞ்சிய ராணுவத்தாற் பிடித்துக்கொள்ளப்பட்டன. கப்பல்கள் அங்கிங்கு அசையாமற் கெட்டியாய் இருந்துபோய்விட, பிராஞ்சிய குதிரை ராணுவங்கள் பனிக்கட்டிமேற் சென்று, அந்தக் கப்பல்களையும், கப்பற்காரரையும் பிடித்துக்கொண்டன. அப்படியே பனி உறைந்துபோவதினால் சில காலங்களில் மிகுந்த அபாயம் நேரிடுவதும் உண்டு. ஆற்றுவெள்ளமும் உருகின பனியின் வெள்ளமும் ஒன்றாகச் சேர்ந்து பெருக்கெடுத்துச் செல்லும்பொழுது, கல்லைப்போலக் கெட்டியாய் உறைந்து வெடித்துக் கிடக்கும் பிரமாண்டமான பனிக்கட்டிகள் அந்த வெள்ளப்பெருக்கைத் தடுப்பதினால், அது தேங்கி அணைகடந்து தேசத்திற்குள்ளே சென்று, எதிரிட்ட மனுஷரையும், ஆடு மாடு, மரம், வீடுகள் அனைத்தையும் முழுகப்பண்ணுகின்றது. இத்தனை விக்கினங்களும் அபாயங்களும் சாதாரணமாயிருக்கின்ற தேசத்தில் சனங்கள் செய்திருக்கிற சாமர்த்தியமான வேலைகளைப் பார்க்குமிடத்தில், எத்தனை ஆச்சரியம் உண்டாகமாட்டாது. எந்தச் சாதியாராவது செல்வராகிச் செழித்து வாழ்வது அவரவர் சுய முயற்சியினாலும் கஷ்டத்தினாலுமேயொழிய, அவர்களுடைய தேசங்களுக்கு சுபாபமாயுள்ள நயங்களினால் அல்ல என்பதற்கு, உலாந்த

சாதியார்தாமே சாட்சிகளாம். அவர்கள் நன்றாக யுத்தவித்தை பழகின இராணுவத்தை சேர்த்து ஆதரிக்கவில்லை. ஆகிலும் அங்கே யுத்தம் நேரிடும்பொழுது, பட்டணத்தார் யாவரும் ஆயுதம் தரித்துப் போர்செய்ய எத்தனப்படுவார்கள். தங்கள் தேசத்திலே படையெடுத்துவரும் சத்துருக்களுடைய கைக்குத் தப்பும்படியாக அவர்களிடத்தில் ஒரு தகுதியான உபாயம் உண்டு. அந்த உபாயம் அவர்களுக்கே அபாயமாய் இருந்தும், தறுவாயான காலத்தில் இரண்டொரு முறை அவர்கள் அதைப் பிரயோகித்ததும் உண்டு. அதென்னவென்றால்—சத்துருக்கள் யுத்தஞ்செய்யும்படி தங்கள்மேற் படையெடுத்து வரும்பொழுது, அவர்கள் தங்கள் தேசத்திலுள்ள மதகுகளின் அடைப்புகளைத் திறந்து, காலவாய்களின் அணைகளை வெட்டி, சடிதியாய் வெள்ளத்தை பெருகவிட்டு, இப்படியே சத்துருக்களைப் பயமுறுத்தி துரத்திவிடுவதாம். உலாந்தசாதியார் ஸ்பானிய அரசனுக்கு விரோதமாய் எழுந்து கலகஞ்செய்தபொழுதும், பிராஞ்சிய ராணுவங்கள் இரண்டு முறை அவர்கள் தேசத்திற் படையெடுத்துச் சென்றபொழுதும், ஆக மூன்று விசையாக, அவர்கள் மேற்சொல்லிய உபாயத்தைச் செய்து சித்தியடைந்தார்கள். இதற்குச் சமானமான பராக்கிரமத்தை எங்கும் கண்டதில்லை. ரூஷியசாதியார் தங்கள் இராஜதானியாகிய மொஸ்கோபட்டணத்துக்கு நெருப்புவைத்ததும் பெரிதல்ல. சத்துருக்களுக்குக் கீழ்ப்பட்டுத் தங்கள் சுயாதீனத்தை இழந்துவிடுவதிலும், ஒன்றுக்கும் அஞ்சாமல், பொருள் பண்டங்களை ஒரு பொருட்டாய் எண்ணாமல், அவைகளை எல்லாம் நிர்த்தூளியாய் அழித்தபின்பு, பொறுமையுடனே விடாமுயற்சியாய் வேலைசெய்து, தாங்கள் இழந்துவிட்ட பொருளையெல்லாம்

தேடிச் செல்வராக வாழ்ந்திருப்பது எவ்வளவு அருமை. இப்பொழுது உலாந்த சாதியார் தங்கள் முயற்சிக்குத் தகுதியான பலன் பெற்றுச் சந்தோஷமாக நாள்கழிக்கிறார்கள். செல்வமும் செழிப்புமுள்ளவர்களாய் இருக்கிறார்கள். பூலோகத்திலுள்ள சகல சாதிகளாலும் கனம் பெறத்தக்கவர்களாய் இருக்கிறார்கள்.

---

## பெல்ஜியம்.

பெல்ஜியம், உலாந்தா என்னும் இரண்டு தேசங்களின் தரை சமமாகவும் பள்ளமாகவும் இருப்பதினால், அந்தத், தேசங்கள்பள்ளநாடுகள் என்று அர்த்தங்கொள்ளுகிற "நெதர்லண்ட்ஸ்" என்னப்படும். உலாந்ததேசத்தின் தன்மையைக்குறித்தும், அங்கே கைமுயற்சியால் செய்யப்பட்டிருக்கிற பல திருத்தங்களைக்குறித்தும், குடிஜனங்களின் தொகையைக்குறித்தும், அவர்களுடைய தேசாசாரம் மதாசாரங்களைக்குறித்தும் முன் சொல்லப்பட்ட விவரமே பொதுவாக பெல்ஜியம் என்னும் தேசத்துக்கும் பொருந்தும்: ஆகிலும் சில விஷயங்களிலே பேதம் உண்டு. எப்படியெனில், தேசத்தின் தன்மையையும் நிலவளத்தையும் பார்க்குமிடத்தில், அவை ஆடு மாடுகள் மேயும்படி புல் உண்டாவதற்கு அல்ல, பயிரிடுவதற்கே அதிகம் வாய்ப்பாய் இருக்கின்றன. அங்குள்ள வித்துவான்கள் கலைக்கியான விசாரணையிற் கரைகண்டவர்கள். அந்தத் தேசத்திலே பண்படுத்திப் பயிரிடப்படாத நிலம் ஒரு துண்டாவது இல்லை. தானியவகைகள் எல்லாம் செழிப்பாய் விளைகின்றன. சில இடங்களில் மிகவும் மிருதுவான நாருள்ள சணல் உண்டாகின்றது. அந்தத் தேசத்திலிருந்து வருகின்ற உசிதமான பின்னற்சீலைகள், அல்லது சரிகைக்கரை

கள் அந்தச் சணலில் எடுக்கப்படும் நூலினுலேதான் செய்யப்பட்டன. அத்தேசத்தாருடைய கைவேலைகள் எல்லாவற்றிலும் அதுவே முக்கியமானது. உலாந்ததேசத்திலுள்ள மரம் செடிகள், கிராமங்கள், தோட்டம் துரவுகள், நந்தவனங்களாகிய இவைகளைப்பார்க்கிலும், பெல்ஜியம் தேசத்திலுள்ளவைகள் அதிகம். ஆதலால், அத்தேசத்தின் பொதுவான காட்சி மிகவும் அலங்காரமாயிருக்கின்றது; அது நீர்வளமுள்ள தேசம்; அங்கே இரண்டு பெரிய ஆறுகளும், அனேக சிறிய ஆறுகளும் உண்டு; அவைகளில் பிரதானமானவைகள் மியூஸ் என்பதும், ஷெல்ட்ற் என்பதுமே. அத்தேசத்திலே பழம் தரும் மரங்களும், பல வகையான கறிபதார்த்தங்களும் உண்டாகின்றன. ஹொப்ஸ் என்னும் கொடி விஸ்தாரமாகச் செய்கை பண்ணப்படுகின்றது; அது வீர், ஏல் என்னும் பானவகைகள் செய்வதற்கு உபயோகப்படும். சில காலத்திற்குமுன்பு பட்டுப்பூச்சிகளை வளர்த்து விர்த்தியாக்கும்படியாக கம்பளிகொண்டான்செடியை அத்தேசத்திலே உண்டாக்கத் தொடங்கிச் சித்திகண்டிருக்கிறுர்கள். தெற்கேயுள்ள மாகாணங்களில் சிறு மலைகளும், காட்டு மரங்கள் அடர்ந்த விஸ்தாரமான வனங்களும் அனேகம் உண்டு; அந்த வனங்களில் ஓனாய்களும், காட்டுப்பன்றிகளும் சஞ்சரிக்கின்றன; அவைகளை இன்றளவும் ஜனங்கள் அப்போதப்போது கண்டு, வேட்டையாடுவார்கள். அந்தச் சிறுமலைகளில் சிறப்பான பலவர்ன்னக்கல் வெட்டி எடுக்கப்படும் குழிகள், விலையுயர்ந்த கல் இருக்கும் நிலங்கள், இருப்புச்சுரங்கங்கள், நிலக்கரிச்சுரங்கங்கள் முதலியவைகள் மிகுதி. பெல்ஜியம்தேசத்திலுள்ள தொழிற்சாலைகளில் நடக்கும் வேலைகள் சாதாரணமாய்ப் புகை யந்திரங்களினுல் நிறைவேற்றப்படும். சரிகை,

பதமிட்ட தோல், உருக்கு, கூராயுதங்கள், சணல்நூல், பருத்திநூற்புடைவை, சூரியகாந்திப்பட்டு, சாதாரணப் பட்டு, வஸதிரங்கள் முதலியவைகளே அந்தத் தேசத்திலே, செய்யப்படும் முக்கியமான கைவேலைகளாம். மேற்சொல்லிய வெவ்வேறு வஸ்துகளுக்குள், அங்கே செய்யப்படும் கூராயுதங்களின் வேலைத் திறமையை வெல்லத்தக்க ஆயுதங்கள் செய்யப்படுவது அங்கிளோதேசத்திலேயொழிய, உலகத்திலெ மற்றொரு இடத்திலும் இல்லை. மேலும் மலையடிவாரங்களில் உண்டாகிற திராட்சப்பழங்களில் நல்ல பானம் உண்டுபண்ணுகிறார்கள். அந்தத் தேசச்தில் நேர்த்தியான சாலைகள் அனேகம் உண்டு; அவைகளில் சனங்கள் போக்குவரவு செய்வதற்கு உபயோகமான பண்டிகள் அங்கங்கே ஓட்டப்படும். பெரிய பட்டணங்கள் எல்லாவற்றிலும் ஒன்றோடொன்று கலக்கிற இருப்புப்பாதைகள் செய்யப்பட்டிருக்கின்றன. சில பட்டணங்களிலுள்ள வீடுகள், உததியோக சாலைகள் முதலான கட்டடங்கள் உலகத்தில் எங்குள்ளவகைகளைப்பார்க்கிலும், அதிக அலங்காரமானவைகளாய் இருக்கின்றன: ஆகிலும் அவைகள் இற்றலிதேசத்திலுள்ள சில நகரங்களுக்கு தாழ்வானவைகளாம். பெல்ஜியம்தேசத்தார் சிற்ப வேலையிலும் சித்திர வேலையிலும் அதிக தேர்ச்சியுள்ளவர்கள். அங்குள்ள பிரதான கோவில்கள் முதலிய கட்டடங்களில் அனேகம் மிகவும் விசித்திரமாய்க் கட்டப்பட்டிருக்கின்றன. அாசனும் பிரபுகளும் வாசம்பண்ணுகிற பிரஸெல்ஸ் என்னும் பழைய பட்டணம் அதற்கு ராஜதானி; அது அத்தேசத்திலுள்ள சிறந்த பட்டணங்களுக்குள்ளே சிரேஷ்டமாயிருப்பது: அங்கே நெசவுபண்ணப்படுகிற சரிகை, இரத்தினக்கம்பளம் முதலிய வியாபார வஸ்துக்களால் அந்தப் பட்டணம் விசேஷித்தது. கெ

ண்ட், பிருஜெஸ், நேமர், லீஜ், லோவென், அண்டு வெர்ப், ஒஸ்ற்றெண்ட் என்னும் பட்டணங்களும் முக்கிய மானவைகள். கெண்ட் என்பது மிகவும் பழமையான பட்டணம்; அது கட்டப்பட்டிருக்கிற இடத்திலே அனேக சிறு தீவுகள் இருந்தன; அந்தத் தீவுகள் பாலங்களினால் ஒன்றோடொன்று சேர்க்கப்பட்டிருப்பதினாலே, அவைக ளாற் சேர்ந்த பட்டணப் பகுதிகளெல்லாம் ஒன்றுபட்டி ருக்கின்றன: அப்படிப்பட்ட பாலங்கள் எண்பது வரை யிற் பட்டணத்தில் உண்டு. அண்டுவெர்ப், ஒஸ்ற்றெண்ட் என்னும் பட்டணங்களே அத்தேசத்தில் விசேஷமான கப்பல் துறைமுகங்கள். பெல்ஜியம்தேசத்தில் ஏற்றுமதி இறக்குமதி பண்ணுகிற வர்த்தக சாமான்கள் யாவையும் அண்டுவெர்ப்பட்டணத்தின் கரையிலே காணலாம்: அங்கு ள்ள துறைமுகமானது கப்பல்கள் வசதியாய் நிற்கத்தக்க விசாலமுடையது; அது கப்பல்கள் பட்டணத்திற்குச் சமீ பத்தில் வந்து நிற்கத்தக்கதாயிருக்கின்றது. கசு-ம், கரு-ம் நூற்றாண்டுகளில் அந்தப் பட்டணமானது வியாபாரவிர்த் தியிலும், குடிகளின் சிறப்பிலும், செல்வாக்கிலும், அலங் காரத்திலும் வெனீஸ் நகரத்திற்குச் சமானமாயிருந்தது. அது இப்பொழுதும் பூலோகத்திலுள்ள எந்தெந்தப் பட் டணங்களைப்பார்க்கிலும் அதிக செல்வப்பொழிவும், சிறப் புமுள்ளதாயிருக்கின்றது; ஆகிலும் முன்போல அவ்வ ளவு விசேஷமாயில்லை. பெல்ஜியம்தேசத்திலே முற்கா லத்தில் முக்கியமாயிருந்த நகரங்களெல்லாம் அப்படி யே கொஞ்சத்திற்கொஞ்சம் குறைந்துபோயின: அவை கள் இன்னும் கண்ணுக்கு அலங்காரமாயிருந்தும், தேடு வார் இல்லாமல் சிதைந்திருக்கிறவைகளாகத் தோன்றும். கங-ம், கசு-ம், கரு-ம், கரூ-ம் நூற்றாண்டுகளிலோ, அப் படியல்ல. அப்பொழுது அவைகளே ஐரோப்பாவுக்கெ

ல்லாம் முக்கியமானவைகளாய் இருந்தன. அவை செல்வமும், பலமும், சுயாதீனமும், அனுகூலமும் அடைந்தன; அந்தப் பட்டணங்களில் பிறதேச வியாபாரம் விஸ்தாரமாய் நடந்தது; சுதேச வியாபாரம் விர்த்தியானது; கைவேலைகள் திறமாயிருந்தன; அங்குள்ள பிரபுகள் அனைவரும் சுயாதீனரானார்கள்; வர்த்தகரோ, இராஜாக்களைப்போல் இருந்தார்கள்; கலைஞானங்களும் கைத்தொழில்முயற்சிகளும் அபிவிர்த்தியாயின; சர்வசாஸ்திரசாலைகள் உயர்ந்த நிலைமையில் இருந்தன; லோவென் என்னும் இடத்தில் இருந்த சர்வகலாசாலை உலகத்தில் எங்கும் கீர்த்திபெற்றிருந்தது. சகல தேசங்களிலும் இருந்து ஏராளமான வித்தியார்த்திகள் அங்கே வாசிக்கும்படி போனார்கள்; வாசித்தவர்களில் அனேகர் கல்வித்தெளிவுடையவர்களானார்கள்: சிற்பநூலிலும், சித்திரவித்தையிலும் தேற்றம் அடைந்தார்கள்: ஆகிலும் சில சில காரணங்களினால் இப்பொழுது காரியத்தின் சீர் அதிக பேதமாயிருக்கின்றது: அந்தக் காரணங்கள் என்னவென்றால், க-வது.— அந்த ஜனங்களுடைய தன்மை மாறிப்போயிற்று. அவர்கள் ஆண்மையும், உண்மையும், முயற்சியும், சுயாதீனமுமுடையவர்களானாலும், கலகப்பிரியரும், கோபிகளும், அழுக்காறுள்ளவர்களுமாய் இருக்கிறார்கள். பெரிய பட்டணங்களில் வாசமாயிருந்த ஜனங்கள் ஒருவருக்கொருவர் ஓயாமல் விரோதமும், சண்டையும், யுத்தமும் செய்துவந்தார்கள். குடிகள் தங்கள்தங்கள் பிரபுகள்மேற் பட்சமுள்ளவர்களாயிருந்தும், சொற்ப காரணங்களுக்காக அவர்களுடைய கட்டளைகளை மீறிக் கலகஞ்செய்வது வழக்கம். காரியத்தின் சீர் இப்படியிருந்ததினால், அவர்கள் ஒருமைப்பாடில்லாமல், பலம் குறைந்து, வெவ்வேறு துரைத்தனங்களாகப் பிரிந்து,

பிரபுகளால் ஆளப்பட்டார்கள்: அந்தப் பிரபுகளும் அவ்விதமாய் எப்பொழுதும் பகைசாதித்து நடந்தார்கள்; ஆதலால் அவர்கள் மறு சாதியாருடைய அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டிருந்து வருந்தும்படி நேரிட்டது. நாட்டவர்களைப் பார்க்கிலும் அதிக செல்வாக்கும், சீர்த்திருத்தமும் உள்ளவர்களாகிய பட்டணத்தார்கள் சாதாரணமாய்ச் சுயாதீனத்திற் பிரியமுள்ளவர்களாய் இருப்பது போல, அவர்களும் சுயாதீனப் பிரியராய் இருந்தும், அவர்கள் ஒருபொழுதும் நெடுநாள்வரைக்கும் சுயாதீனராய் இருக்கவில்லை. அதுவே இரண்டாவது காரணத்துக்கு ஏதுவாயிருந்தது. உ-வது.—அன்னிய அரசர்கள் ஓயாமற் படையெடுத்துப்போய், போர்செய்து, அங்கிருந்த நகரங்களைப் பாழ்ப்படுத்தி, குடிகளைச் சங்கரித்து, பலவகையான தொழில்முயற்சிகளையும் தலையெடுக்க ஒட்டாமல் தடுத்தார்கள். ஆதியிலே அந்தத் தேசம் உரோம சாதியாருடைய அரசாட்சிக்கு உட்பட்டிருந்தது. அப்புறம் ரு - ம் நூற்றுண்டில் அது பரங்கியர் என்னும் சாதியாரால் ஜெயித்துக்கொள்ளப்பட்டது. க - ம் நூற்றுண்டில் அதுவும், உலாந்ததேசமும் ஜெர்மானிய இராச்சியத்துடன் சேர்க்கப்பட்டன. அதின்மேல் அது பெயருக்கு ஜெர்மானிய சக்கரவர்த்தியின் விசாரணைக்குட்பட்டு, பல பல சிறு இராச்சியப் பகுதிகளாகப் பிரிந்தது. முன்பு பலத்திலும், மாட்சிமையிலும், செல்வத்திலும் சிறந்து தோன்றிய மேற்சொல்லிய நகரங்கள் பிரபலமாகத் தொடங்கின; அப்பொழுதே அதிக செல்வத்தால் உண்டாகும் தீமைகள் அதிகரித்து நடந்தன. அப்பால் அந்த இராச்சியப் பகுதிகள் அனைத்தும் புர்கண்டி மாகாணத்தின் பிரபுவுடைய ஆளுகைக்குட்பட்டன. பிற்பாடு ஜெர்மானிய சக்கரவர்த்தியாகிய மாக்ஷிமிலியன் என்பவர் மேற்சொல்லிய மாகாணத்தின் பிரபுப்பட்டம்

உடைய பெருமாட்டியை விவாகஞ்செய்ததினாலே, அவைகள் திரும்பவும் அவருடை யதுரைத்தன விசாரணைக்குள்ளாயின. அதின்பிறகு ௫-ம் கரோலஸ் என்னும் ஜெர்மானிய சக்கரவர்த்தியும், ஸ்பானிய அரசனுமாகிய அவர்கள் பேரனுக்கு பெல்ஜியம்தேசமும், உலாந்ததேசமும் ஆதீனமாயின. அவனுக்குப் பின்பு இராச்சியபாரத்திற்கு வந்த அரசன் குடிகளுக்கு நிஷ்டூரம்பண்ணி, கொடுங்கோல்செலுத்தியதினால், அவர்கள் அவன்மேல் அதிக மனவருத்தம் அடைந்து, உலாந்தசாதியார் செய்ததுபோல, ௧௬-ம் நூற்றாண்டின் முடிவிலே கலகஞ்செய்தார்கள்; ஆகிலும் ஜெர்மானிய அரசன் திரும்பவும் அவர்களை ஜெயித்துச் சில காலம் அரசாண்டபின், அவர்களுடைய தேசம் பிராஞ்சிய துரைத்தனத்தாராலே பிடித்துக்கொள்ளப்பட்டு, ௧,௮௩௦-ம் ஆண்டுவரையில் அந்தத் துரைத்தனத்தாருடைய ஆளுகையில் இருந்தது. அதற்குமுன் சிலகாலமாய் அதுவும், உலாந்ததேசமும் ஒரே இராச்சியமாய் இணைக்கப்பட்டிருந்தன. ௧,௮௩௦-ம் ஆண்டில் அத்தேசத்தார் கலகஞ்செய்து, தங்கள் தேசத்தைச் சுயாதீனப்படுத்திக்கொண்டதின்மேல், தங்கள் சுய அரசனாகிய லீயொபோல்ட் என்பவருடைய அதிகாரத்துக்குள் அமைந்து, இந்நாள்வரைக்கும் ஒழுங்காய் நடந்துவருகிறார்கள். சுதேச அரசாட்சி தொடங்கிய நாள் முதலாக, அரசாட்சியின் கிரமம் தவறாமல் சமாதானமாக நடந்துவருகின்றது. அங்குள்ள நகரங்கள் பூர்வத்தில் இருந்தபடி செல்வமும் வாழ்வும் பெற்றுப பிரபலமாகத் தொடங்குகின்றன; அங்கே சாதாரண கைத்தொழில் முயற்சிகள் விர்த்தியாகின்றன; பிறதேச வியாபாரமும் சுதேச வியாபாரமும் வரவர அதிகரித்து நடக்கின்றன; ஆகிலும் இவைகளுக்கெல்லாம் இடையூறாய் நே

ரிட்ட ௬-வது காரணம் மதவிஷயத்திலே பிடிவாதமா யிருத்தலாம். மூட பத்தியுள்ள குருக்கள் சனங்களை அ நியாயமாய் அடக்கி ஒடுக்கி அவர்களுக்கு இடுக்கண் செய்ததினால், உபயோகமான தொழில்முயற்சிகளிலே கை வந்தவர்களும் பெருமுதல் வைத்து வியாபாரஞ்செய்தவர்களுமான அனேகர் அத்தேசத்தை விட்டு நீங்கி, பிற தேசங்களுக்குப் போனார்கள்; அவர்கள் கற்றிருந்த கல்விகளையும், பழகியிருந்த கைத்தொழில்களையும் போன போன இடங்களிலே அபிவிர்த்திசெய்தார்கள்; அவர்களிற் சிலர் அங்கிளோதேசத்திற்கும், பலர் உலாந்ததேசத்திற்கும் போயிருந்தார்கள். ஒன்றுபட்டிருந்த உலாந்தா, பெல்ஜியம் என்னும் இராச்சியங்கள் கடைசியாய் வெவ்வேறாகப் பிரிந்தன. பிரிந்தபொழுது, அண்டுவெர்ப் நகரத்தில் நடந்த வியாபாரமுயற்சி முழுமையும் அங்கிருந்து ஆம்ஸ்ற்றர்டம், றொற்றர்டம் என்னும் நகரங்களிற் சேர்ந்தது. அதினால் உண்டான குறைவு இப்பொழுது கொஞ்சங்கொஞ்சமாய் நீங்குகின்றது. அங்குள்ள நகரங்களில் வேறு அநேகம் கைத்தொழில், திரவியம், பராக்கிரமம், அலங்காரம், வர்த்தகவிர்த்தி முதலிய விஷயங்களால் மேற்சொல்லிய நகரங்களைப்பார்க்கிலும் அதிக மேன்மை அடைகின்றன. விசேஷமாய் அங்கிளோதேசம் பல விஷயங்களிலும் அதிகரிக்கின்றது. ஆகிலும் பெல்ஜியம்தேசத்தின் குடிகள் ஒருவரோடொருவர் சமாதானமாய் நடப்பார்களானால், அன்னியசாதியார் அவர்கள் காரியத்திலே தலையிட்டுச் சச்சரவுபண்ணுதிருப்பார்களானால், அவர்கள் விடாமுயற்சியினாலும், சுயாதீன அரசாட்சியின் துணையினாலும், முற்காலத்திலே தாங்கள் பெற்றிருந்த செல்வத்தையும் சிறப்பையும் திரும்பவும் அடைந்துகொள்வார்களென்பதற்குச் சந்தேகமில்லை. குடி-

கள் தொகையிலே குறைந்தும், செல்வத்திலே சிறுமை ப்பட்டுமிருப்பது பெல்ஜியம்தேசத்திலுள்ள பட்டணங்க ளிலே அல்லாமல், நாட்டுப்புறங்களிலேயல்ல. நாட்டுப் புறங்கள் செழிப்பும் சிங்காரமுமுள்ளவைகளாய் இருக் கின்றன. அத்தேசத்தின் வட மாகாணங்கள் எங்கும் ஓரோ நந்தவனம்போலப் பரந்து அடர்ச்சியாய்க் குடியே றப்பட்டிருக்கின்றன. பெல்ஜியம்தேசத்தார்கள் உலாந்த சாதியாரைப் போல அடக்கமும் அமைதியுமுள்ளவர்கள் அல்ல. அவர்கள் பாங்கு பழக்கங்களிற் சற்றே திருத் தமில்லாதவர்கள்; மட்டுமரியாதை தெரியாதவர்கள்; உட ம்பைப் புனிதமாக்குவதில் மிகவும் குறைவுள்ளவர்கள். அ த்தேசத்திலே வெவ்வேறு வித்தியாசாலைகளும் தர்மசா லைகளும் விசேஷமாய்த் துரைத்தனத்தாரால் ஆதரிக்கப் படுகின்றன; அவற்றுள் அங்குள்ள சிரேஷ்டமான சர்வ கலாசாலைகள் இரண்டு; சாதாரண சர்வகலாசாலைகள் இரண்டு. அந்த நாலு சாலைகளிலும் யாதொரு பேதம் இல்லாமல் எவர்களும் போய்ப் படிப்பதற்கு உத்தரவு உண்டு. அங்கே இருக்கிற சிறைச்சாலைகளாகிய கட்ட டங்கள் மிகவும் சிறப்பாய்க் கட்டப்பட்டிருக்கின்றன. அ வைகளில் அதிக கட்டுப்பாடு நடந்துவருகின்றது. அத் தேசத்தில் எந்தக் குற்றவாளியையாவது தூக்கிற்போடுகி றவழக்கம் இல்லை. கொடிய குற்றம் செய்தவர்களை மர ணபரியந்தம் சிறைச்சாலையில் அடைத்து, அவர்களைக்கொ ண்டு வருத்தமான ஊழியங்களைச் செய்விப்பார்கள். பெ ல்ஜியம்தேசத்திலும் உலாந்ததேசத்திலும் நடக்கின்ற அ ரசாட்சியின் ஒழுங்குகள் சற்றேறக்குறைய ஒன்றுக்கொ ன்று சமானமாய் இருக்கும்; ஆகிலும் சமயாசாரம், பா ஷை முதலிய விஷயங்களிலோ, பேதம் உண்டு. பெல் ஜியம்தேசத்தின் உள்நாட்டிலும், முதன்மையான பட்ட

ணங்களிலும் பிராஞ்சியபாஷை அதிகமாய் வழங்குகின்றது.

அத்தேசத்தில் பாதி பாழாயிருக்கின்ற நகரங்களில் பிரயாணம் போகும் பிறதேசத்தார்களுடைய கண்ணைப் பகட்டத்தக்க காட்சிகள் அங்குள்ள சிறப்பான கட்டடங்களும், சித்திரப்படங்களைச் சேர்த்துக் காட்டும் சாலைகளுமாம்; அந்தச் சித்திரப்படங்கள் மிகவும் புத்தியுத்தியாய் எழுதப்பட்டவைகள். சித்திரம் எழுதும் வித்தையை அங்குள்ளவர்கள் இன்னும் பழகுகிறார்கள். அங்கே சிற்பநூலிலே தேர்ந்தவர்கள் அனேகர் உண்டு. ஆகிலும் கரு-ம், ககூ-ம் நூற்றாண்டுகளில் அங்கிருந்த சிற்பசாஸ்திரிகள் மிகவும் திறமுடையவர்கள். இப்போது இருக்கிறவர்கள் அவர்களுக்குச் சமானமுள்ளவர்களல்ல.

---

## ஸ்பானியதேசம்.

ஸ்பானியதேசமும் உலாந்ததேசமும் சகல விஷயங்களிலும் ஒன்றுக்கொன்று முழுமையும் பேதமாயிருக்கின்றன. ஸ்பானியதேசம் உலாந்ததேசத்தைப்போல வர்த்தக விஷயத்துக்குச் சார்பாய் கடற்கரையை அடுத்திருக்கிறதுமல்லாமல், அது நல்ல நிலவளமுள்ளதும் சவுக்கியத்தைத் தருவதுமாய் இருக்கின்றது. ஆகிலும் ஒழுங்கற்ற அரசாட்சியினாலும், சீர்கெட்ட சமயாசாரத்தினாலும் அந்த இராச்சியத்தார் ஐரோப்பாக்கண்டத்திலுள்ள மற்றெந்த இராச்சியத்தாரைப் பார்க்கிலும் அதிக தாழ்ச்சியும், அறியாமையும், கெடுதியுமுள்ளவர்களாய் இருக்கிறார்கள். ஸ்பானியதேசம் பல நூற்றாண்டுகளாக உரோமராச்சியத்தைச் சேர்ந்த ஒரு மாகாணமாய் இருந்தது. அப்பொழுது அங்கே மிகவும் ஒழுங்கான அரசாட்சி நடந்தபடியினால், அந்தத் தேசமானது ஐரோப்பாக்கண்டத்தின்

அழகிய நந்தவனம்போல் இருந்தது. அங்கிருந்து திரளான தானியவகைகள் பிறதேசங்களுக்கு ஏற்றுமதிசெய்யப்பட்டன. டானியூப் நதியின் வடகரையில் வாசமாயிருந்த கோத்தியர் என்னப்பட்ட மிலேச்சசாதியார் ரு-ம் நூற்றுண்டிலே ஸ்பானியதேசத்திற்குச் சென்று, அதை வசப்படுத்தி, தங்கள் அரசாட்சிக்கு உள்ளாக்கினர்கள்; பின்பு அ-ம் நூற்றுண்டில் அந்தத் தேசத்துக்கு அரபியசாதியார் படையெடுத்துப்போய், ஸ்பானியரென்று மறு பெயர் பெற்ற கோத்தியருடனே சண்டைசெய்து, அவர்களை வென்று, தேசத்தை முழுமையும் தங்கள் வசமாக்கிக்கொண்டு, அவர்களை அத்தேசத்தின் வடபுறத்திலுள்ள மலை செறிந்த மாகாணங்களுக்குள் ஓடி ஒதுங்கும்படி துரத்திவிட்டார்கள். மேற்சொல்லிய இரண்டுசாதியாருக்கும் நெடுங்காலமளவும் ஓயாமற் சண்டைகளும் சச்சரவுகளும் நடந்தன. மகமதீய சமயத்தை அனுசரித்தவர்களான அரபியருக்கும், கிறிஸது சமயத்தை அங்கிகரித்தவர்களான கோத்தியருக்கும் சமயபேதம் உண்டாயிருந்தபடியால், அவர்களுக்கு இப்படிப் போராட்டம் உண்டாயிற்று: பின்பு அந்தக் கிறிஸ்தவர்களான கோத்தியர் வரவரப் பராக்கிரமசாலிகளாகி, ஒன்றின்பின்னென்றுகப் பல மாகாணங்களைச் சேர்த்து, அவைகளை வெவ்வேறு இராச்சியங்களாய் ஏற்படுத்தி, அரசாண்டார்கள். கடைசியிலே கிரெனெடா மாகாணம் ஒன்றுதவிர, மற்றென்றுவது அரபியருடைய வசத்தில் இருக்கவில்லை. அதையும் அவர்கள் கரு-ம் நூற்றுண்டிலே பறிகொடுத்து, பெர்டிணண்ட் என்னும் மகத்துவமான அரசனும், அவருடைய பத்தினியாகிய இஸபெலாவென்னும் ராக்கினியும அரசாண்ட காலத்தில், ஸ்பானியதேசத்தினின்று துரத்திவிடப்பட்டார்கள். ஸ்பானியராச்சியத்தைச் சேர்ந்த பகுதிகளுக்குள்ளே காஸ்டில் என்பது அதிக விஸ்தாரமுள்ள

து; அதை இஸபெலா இராக்கினி அரசாண்டாள். விசாலத்திலும் மேன்மையிலும் அதற்கு இரண்டாவதான தேசப்பகுதி அரகன் என்பது; அதை பெர்டிஞண்ட அரசன் இராச்சியபாரம்பண்ணினர். மேற்சொல்லிய இரண்டு இராச்சியப் பகுதிகளுடனே வரவர வேறு பல சிறுப் பகுதிகளும் சேர்த்துக்கொள்ளப்பட்டன: பின்பு அந்த அரசனுக்கும் இராக்கினிக்கும் விவாகம் நிறைவேறிற்று; அப்போது அவர்கள் மகமதீயர் வசத்தில் இருந்த மாகாணத்தைப் பிடித்துக்கொண்டு, அவர்களை இராச்சியத்துக்கு அப்புறம் துரத்திவிட்டார்கள்: இந்தப்படி ஸ்பானியராசியம் முழுவதும் அவர்களுக்கே ஆதீனமாயிற்று. அவர்களும், அவர்களுக்குப் பின் பட்டத்துக்கு வந்த இரண்டு இராசாக்களும் ஸ்பானியதேசத்தை அரசாண்ட காலங்களிலே, அந்தத் தேசம் அதிக மேன்மையாயிருந்தது. அவர்கள் ஏகாதிபத்தியமுடையவர்களாய் இருந்தும், மிகவும் விவேகமாகவும் செவ்வையாகவும் அரசாண்டார்கள். ஸ்பானியருடைய போர்க்கப்பல்களைப் போலே அத்தனை திறமானவைகள் எங்கும் இருந்ததில்லை; அவர்களுடைய சேனுவீரர்களும் பராக்கிரமசாலிகளாய் இருந்தார்கள். அந்தத் தேசத்தின் வியாபாரம் எங்கும் விஸ்தரித்திருந்தது; அங்கே உயர்ந்த விலைபெறத்தக்க பல விதக் கைத்தொழிலால் ஆகிய வஸ்துக்களைச் செய்தார்கள். பார்க்குமிடத்தில் அப்போது இருந்த ஐரொப்பிய இராச்சியங்கள் எல்லாவற்றிலும், ஸ்பானியராச்சியமே வல்லமையிலும், செல்வத்திலும் முதன்மையானதாய் இருந்தது. அங்கே அரசாண்ட இராஜாக்களுக்குள்ளெல்லாம் முதன்மை பெற்றிருந்த அரசன் ஜெர்மானியதேசத்தின் ஐந்தாவது கரோலஸ் என்பவர்; அவருக்கு ஸ்பானியதேசத்தின் இரண்டாவது கரோலஸ் என்றும் பெயர் உண்டு; அவர் பெர்

டினண்ட், இஸபெலா என்பவர்களுக்குப் பேரனும், ஜெர்மானிய சக்கரவர்த்தியும்; நெதர்லண்ட்ஸ் தேசத்தின் பிரபுவுமாயிருந்தார்.

பெர்டினண்ட் அரசனும் இஸபெலா இராக்கினியும் அக்காலத்திலே பூலோகத்தில் இருந்த இராச்சியங்களெல்லாவற்றிலும் அதிக விஸ்தாரமாயிருந்த இராச்சியத்தை அரசாண்டார்கள். அரசன் சண்டைசெய்து ஸ்பானியா, நப்பொலி, ஸிஸிலி தேசங்களைத் தமது வசப்படுத்தினர்: அல்லாமலும் அரசனும் இராக்கினியும் இராச்சியபாரம் நடத்திவருங்காலத்திலே, அங்குள்ள குடிகளில் ஒருவனாகிய கொலம்பஸ் என்பவன் அமெரிக்காதேசத்தை முதல் முதல் கண்டான். அந்தக் கொலம்பஸ் என்பவனும், அவன் மரணமடைந்தபின்பு திறமையுள்ள வேறு யுத்தவீரர்களும் கொஞ்சம் குறையத் தென் அமெரிக்கா முழுவதையும், மேற்கு இந்தியதீவுகளையும், ஸ்பானியராச்சியத்துடனே சேர்த்துக்கொண்டார்கள். இவ்வண்ணமாகப் புதியதாய்க் கண்ட விஸ்தாரமான தேசத்திலே பொன்னும் வெள்ளியும் திரளாய் விளைந்ததினால், ஸ்பானியதேசத்தார் அதிக திரவிய சம்பத்துள்ளவர்களாகி, நூறு, நூற்றிருபது வருஷமளவும் மிகவும் பிரபலமானவர்களாய் இருந்தார்கள்: ஆகிலும் அந்தப்படி அவர்கள் செல்வமும் மேன்மையும் பெற்றுச் சிறந்து ஓங்கிய காலத்திலும், அவர்கள் சிதைந்து சிறுமைப்பட்டுப்போவதற்கான சில காரணங்கள் உண்டாயிருந்தன. எப்படியெனில், தேசத்திலே உண்டான சுயாதீனம் முழுவதும் பிரபுகளுக்குள்ளும், பிரதான பட்டணங்களில் வாசமாயிருந்த சீமான்களுக்குள்ளும் அடங்கியிருந்தது. மற்றக் குடிகளெல்லாரும் அடிமைகளைப்போல் ஒடுக்கப்பட்டார்கள். அங்குள்ள பிரபுகளோ, செல்வமும், சுயாதீன

மூமுள்ளவர்களாயிருந்தார்கள். மெய்தான் அவர்கள் அக் காலத்திலே மற்றச் சாதிகளுக்குள் இருந்த பிரபுகளைப்பா ர்க்கிலும், அதிக ஆண்மையும், கனமும், நாகரிகமும், கல் வியுமுடையவர்களாய் இருந்தார்கள்; எப்படியிருந்தும், அவர்கள் குணம் செவ்வையானதாய் இருக்கவில்லை; அவ ர்கள் அகந்தைக்காரரும், பொருமையுள்ளவர்களும், கோ பிகளுமாயிருந்தார்கள். எதிரிகள் இணங்கிளுலொழிய, அவர்கள் கோபம் ஆறுவது மிகவும் அருமை. குடிக ளோடு குடிகளும், குடிகளோடு அரசரும் ஓயாமல் எப் பொழுதும் சண்டைபண்ணுவது அவர்களுக்கு வழக்க மாயிருந்தது. பட்டணத்தில் வாசமாயிருந்த செல்வர்க ளும் அந்தப் பிரகாரமே தங்களுக்குள்ளே சச்சரவுபட் டார்கள்; பிரபுகள் ஒருவருக்கொருவர் மேன்மைப்பட விரும்பி, பொருமையும் எரிச்சலுமுள்ளவர்களாய் நடந் தார்கள். ஆதலால் அவர்களுக்குள்ளே ஓயாமல் உண் டான கலகங்கள் சில வேளை அநேகர் பிராணசேதம் அ டைவதற்கு ஏதுவாயிருந்தன. இராஜாக்கள் குடிகளிடத் தில் அநியாய வரி வாங்கி, அவர்களை ஒடுக்கும் காலத்தி லே, குடிகள் அவிவேகிகளும், தரித்திரரும், வீண்பத்தி க்காரரும், மனத்திர்ப்தியற்றவர்களுமாவது எப்போதும் வழக்கந்தான். அரசன், பிரபுகள், சாதாரண குடிகளா கிய யாவரும் துராசாரமுள்ள கொடிய குருக்களுடைய ஆக்கினைக்கு உட்பட்டிருந்தார்கள்.

அந்தக் குருக்கள் ஸ்பானியசாதியாரை அறிவிலும் வே சாட்சிப்பிரமாணத்திலும் அதிகரிக்கவிடாமல், அவர்களை முழுமையும் தங்களுக்குக் கீழ்ப்படுத்திக்கொள்ளும்படியா க, அத்தேசத்திலே கல்வியின் அபிவிர்த்தியைத் தடுத்தார் கள். பாப்புமதத்தைத் தள்ளி, சுவிசேஷமார்க்கத்தை அனு சரித்தவர்களைத் தண்டிக்கும்படியாக “இங்குவிஸிஷன்”,

என்னப்பட்ட மதவிசாரணைச்சங்கம் ஒன்றை ஏற்படுத்தினார்கள். அந்தச் சங்கத்திலே குருக்கள்மாரும், அவர்களுடைய சித்தத்துக்கு இணங்க நடப்போமென்று வாக்குக்கொடுத்த எண்ணிறந்த பணிவிடைக்காரர்களும் சேர்ந்திருந்தார்கள். அந்தப் பணிவிடைக்காரர்கள் தேசமெங்கும் திரிந்து, வீடுகள்தோறும் போய் எவர்களோடும் இஷ்டம் பாராட்டிவருவார்கள்; அவர்கள் அங்கங்கே நடக்கிறகாரியங்களைக் கருத்தாகப் பார்த்து, சனங்கள் பேசுகிற இரகசியமான பேச்சுக்களைக் கேட்டு, அவரவருடைய அந்தரங்கமான எண்ணங்களை உபாயமாய் அறிந்து, தாங்கள் கண்டவைகளும், கேட்டவைகளும், சமுசயித்தவைகளுமான சங்கதிகள் எல்லாவற்றையும் தங்கள் சங்கத்தின் தலைவராகிய சிரேஷ்டகுருக்களுக்கு அறிவித்துவருவார்கள். பதிதரென்று சமுசயப்பட்டவர்களையும், தங்கள்தங்கள் யுக்தப்படியே சமயாசாரக் கொள்கைகளை அனுசரிக்கத் துணிந்தவர்களையும் குருக்கள்மார் தமக்கு இஷ்டமான பொழுதெல்லாம் சடிதியிலே பிடிப்பித்து, சிறைச்சாலைகளிலே அடைத்துவைப்பார்கள். அப்புறம் அந்தக் கொள்கைகளைத் தள்ளும்படி அவர்களைப் பலாத்காரஞ்செய்வதுமல்லாமல், அவர்களுடைய மனம், வாக்கு, காயங்களில் ஒருபொழுதும் உண்டாகாத விஷயங்களை அனுசரித்தோமென்று ஒப்புக்கொண்டு அறிக்கைபண்ணும்படியாகக் குருக்கள்மார் அவர்களைச் சித்திரவதை செய்வதும் உண்டு. குருக்கள்மாருடைய இஷ்டத்துக்கு இடங்கொடாமல் ஆட்சேபம் சொல்லுகிறவர்களை அவர்கள் பிடித்து, கட்டியுருட்டி, எவர்களும் காணும்படி சுட்டெரிப்பார்கள்; அந்தப் பரிதாபமான காட்சியைப் * பார்க்கும்படி அங்கங்கிருந்து அநேக சனங்கள் போவார்கள்.

---

* இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பிராஞ்சியர் ஸ்பானியதேசத்தை அரசாண்டபொழுது, அவர்கள் அ

இத்தன்மையான கொடிய ஏற்பாடுகளை எளிதாய்க்கொண்டுசெலுத்தத்தக்க குருக்களும், அவர்களுக்கு அடக்கமான துரைத்தனத்தாரும், ஒருமித்து நடத்தின இராச்சியபாரத்தால், தேசத்தார் இழிவுபட்டுப்போனார்கள். சுக அனுபவங்களுக்கு உபயோகமான பலவகை வளப்பங்களையுடைய ஸ்பானியதேசத்தில் இருந்த சனங்கள் கரு-ம் நூற்றுண்டின் நடுவில் அங்கே போதிக்கப்பட்ட பரிசுத்தமும் சத்தியமுமான உபதேசங்களை அலட்சியம்பண்ணித் தள்ளிவிட்டார்கள்: அதுமுதல் இதுவரையில் அந்தத் தேசம் தன் மாட்சிமையான பூர்வநிலைமையிலிருந்து வரவரச் சீரழிந்தது; அது இப்பொழுது ஐரோப்பாவிலுள்ள தேசங்களில் போர்ட்யுகல் ஒன்றுதவிர, மற்றெல்லாத் தேசங்களைப்பார்க்கிலும் அதிக தாழ்மைப்பட்டிருக்கின்றது. ஸ்பானியசாதியார் தங்கள் அரசாட்சிக்கு உள்ளிட்ட பிறதேசங்களில் ஒன்று இரண்டுதவிர, மற்றெல்லாவற்றையும் இழந்துபோனார்கள்; அவர்கள் வர்த்தகம் மிகவும் குறைந்துபோயிற்று; அவர்கள் வேளாண்மைத்தொழிலைக் கட்டோடே விட்டுவிட்டார்கள்; நிலம் பண்படாமல் தரிசாய்க் கிடக்கின்றது; ஜனங்கள் தரித்திரமடைந்து, அவிவேகிகளும், சோம்பேறிகளும், துன்மார்க்கருமாய் இருக்கிறார்கள்; பிறதேச அரசர் படையெடுத்துப்போய், † அவர்களுடனே யுத்தஞ்செய்ததினாலும், உள்ளூர்ச் சண்டைக

---

ந்தப் பயங்கரமான மதவிசாரணைச் சபையை நிறுத்திவிட்டார்கள்; நிறுத்தியும் பாப்புமதஸ்தருடைய அந்தக் கொடிய குணமானது இன்னும் மாறவில்லை.

† இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் பிராஞ்சிய சக்கரவர்த்தியாகிய க-ம் நப்போலியன் ஸ்பானியதேசத்திற்குக் கடைசியாய்ப் படையெடுத்துப்போனபொழுது, அவருடைய இராணுவங்கள் அந்தத் தேசத்தைக் கொள்ளையடித்து நிர்மூலப்படுத்தின; அப்போது ஸ்பா

னிருலும் போர்க்களத்தில் எண்ணிறந்த ஜனங்கள் மடிந்துபோனார்கள்; துரோகத்தினாலும், வியாதியினாலும் வேகு ஜனங்கள் மரணத்திற்கு இரையானார்கள்: இப்படியே அங்குள்ள குடிகளின் தொகை மிகவும் குறைந்துபோயிற்று; தேசம் பாழாயிற்று; பட்டணங்கள் நிருமூலமாயின: அல்லாமலும் ஸ்பானியதேசத்தில் அரசாண்டுவருகிற இராக்கினி நல்ல புத்திசாலியல்ல; அவருடைய அரசாட்சி சீரானதுமல்ல; அந்த அரசாட்சியினால் குடிகளுக்கு எவ்வளவும் சகாயமில்லை; அங்குள்ள பிரபுகள் ஆதிமுதல் எப்பொழுதும் அகங்காரிகளும், சோம்பேறிகளும், எரிச்சலுள்ளவர்களும், கலகப்பிரியருமாய் இருக்கிறார்கள்; ஆகிலும் முற்காலத்தில் அவர்களுக்குள் ஒழுக்கமும் கனமும் உண்டு, இப்பொழுதோ அதுவும் இல்லை; அவர்கள் மிகவும் அவிவேகிகள், சீர்கேட்டவர்கள், கைக்கூலிப்பிரியர், அதிக துன்மார்க்கர்: இப்படி இருந்தும், அவர்கள் தங்கள அறிவு போதுமென்று நினைத்து, திர்ப்தியாயிருப்பதினால், தங்களுக்குச் சமானமுள்ள விவேகிகள் எங்கும் இல்லையென்று எண்ணி, அறிவிலே தெளிவு அடைவதற்கானமுயற்சிகளைச் செய்கிறதில்லை; அவர்கள் சுதேசிகளாலாவது, பிறதேசத்தாராலாவது நம்பப்படத்தக்க யோக்கியம் உடையவர்களுமல்ல. துரைத்தன உத்தியோகங்களில் ஏற்பட்டிருக்கிற பெரியோர்முதல் சிறியோர்வரையில் எவர்களும் தங்களால் இயன்ற பிரயத்தனங்களைச் செய்து,

---

னியருக்கு உண்டான சேதத்திலிருந்து அவர்கள் இன்னும் தலையெடுக்கவில்லை. அவர்கள் பிராஞ்சியராணுவங்களுடனே எதிர்த்து நெருங்கி, யுத்தஞ்செய்து, தத்தளித்த சமயத்தில், அங்கிளோதுரைத்தனத்தார் அவர்களுக்கு உதவியாகத் தங்கள் பலத்த ராணுவங்களை அனுப்பி, பிராஞ்சியசாதியாரை தேசத்திற்கு அப்புறம் துரத்திவிட்டார்கள்.—

திரவியத்தைச் சம்பாதித்து, செல்வராக வாழ்ந்திருப்பதும், சிற்றின்பங்களை அனுபவிப்பதுமே அவர்களுடைய முக்கியமான நோக்கமாம். பட்டணத்தாரும், கைத்தொழில் முயற்சியாற் சீவனம்பண்ணுகிற குடிகளுமாகிய மற்றச் சனங்களும் மேற்சொல்லிய குணங்குறிகளை உடையவர்களே; ஆகிலும் அவர்களிடத்தில் ஆண்மையும் துணிவும் உண்டு; விசேஷமாய், வடக்கே மலை செறிந்திருக்கிற மாகாணங்களில் வாசமாயிருக்கும் சனங்கள் எளிதாய்க் கீழ்ப்படியாத துணிவுள்ளவர்கள்; எப்படியும் அவர்கள் பெரும்பாலும் முயற்சியும், நேர்மையும், உண்மையும் உடையவர்களாயிருக்கிறார்கள்.

கொலை, களவு முதலிய கொடிய செய்கைகள் ஸ்பானியாவில் எப்பொழுதும் சதாரணமாய் நடக்கின்றன. அங்கே பொலீஸ் விசாரணை ஏற்பட்டிருந்தும், உபயோகப்படவில்லை. தேசநியாயவிசாரணைச்சட்டங்கள் செவ்வையாய் நடக்கிறதில்லை; குற்றம் செய்தவர்களைக் கண்டித்து அவர்களுக்குத் தகுதியான தண்டனை செய்வார் ஒருவரும் இல்லை: இப்படி இருப்பதினால், குடிகளுடைய பொருளும், பிராணனும் எப்பொழுதும் நாசம் அடைவதற்கு ஏதுவாயிருக்கின்றன. அதிக பொறாமையுள்ளவர்களும் கோபிகளுமாயிருக்கின்ற ஸ்பானிய சாதியார் அங்கங்கே போக்கு வரவு செய்யும் பொழுதெல்லாம், ஏதாவது ஈட்டி, கத்தி முதலிய ஆயுதங்களைத் தரித்துக்கொள்வது வழக்கமாயிருப்பதினாலே, மேற்சொல்லிய அபாயங்கள் நேரிடுகின்றன. எவர்களுக்காவது சொற்ப வாக்குவாதங்கள், சச்சரவுகள் நேரிடும்பொழுது, அவைகள் துரும்பு பெருத்துத் தூணாற்போல, உயிரளவாய் வளர்ந்து, கொலையளவாய் முடியும். அந்தத் தேசத்தவர்கள் இயல்பாய் வெகு மனவடக்கமும், சாந்தமுமுள்ளவர்களாய் இருக்கிறார்

கள்; இருந்தும் அவர்களுக்குள் நெடுநாள்வரையில் கிரமத்தாழ்வான அரசாட்சியும், வீண்பத்திநாசமும் மேலிட்டுவந்ததினால், அவர்கள் ஒருவருக்கொருவர் நம்பிக்கைத் துரோகிகளும், விரோதிகளுமானார்கள். ஸ்பானியதேசத்திலுள்ள நாட்டுப்புறத்தார் ஜனசந்தடியில்லாமல் ஏழைகளும் நிர்ப்பந்தருமாக நாள்கழிக்கிறார்கள்; அவர்கள் வீணாகப் பொழுதுபோக்குவதேயொழிய, சீர் திருந்திச் செல்வம் பெற்று வாழும்படி சற்றாவது முயற்சிபண்ணுகிறதில்லை. எந்தக் காரியங்களையும் தொன்றுதொட்டு வழங்கின முறைப்படியே செய்வது அவர்களுடைய கருத்து. திராட்சப்பழங்களைச் சேர்த்துப் பானம் உண்டாக்கும் போகத்தில் மாத்திரம் அவர்கள் சற்றே ஜாக்கிரதையாய் வேலைசெய்வார்கள். ஸ்பானியதேசம் திராட்சபானத்தால் விசேஷித்தது. திராட்சப்பழங்களைச் சேர்க்கும் காலந்தான் அவர்களுக்கு அதிக கொண்டாட்டமான காலம்; ஆகிலும் அங்கே அத்தனை திரட்சியாயுள்ள திராட்சப்பழத்தின் இரசத்தை இறக்கும் தொழிலிலாவது அவர்கள் அதிக முயற்சியாய் இருக்கிறதில்லை. அங்கிலேயர், பிராஞ்சியர் முதலிய அன்னியர் அதை இறக்குவார்கள். இப்பொழுது திராட்சபானம் ஒன்றே அவர்கள் தேசத்திலுள்ள விலை உயர்ந்த சரக்கு. அங்குள்ள குருக்கள்மார் பெல்ஜியம்தேசத்திலே செய்ததுபோல, ஸ்பானியதேசத்திலும் கைவேலை செய்து சீவனம்பண்ணுகிற தொழிலாளிகளை அங்கிருந்து துரத்திவிட்டார்கள்: பின்பு வியாபாரத்துக்கு அடுத்தவைகளாய் ஏற்படுத்தப்பட்ட சட்டங்களும், பிரமாணங்களும் நன்றாய் இருக்கவில்லை: ஆதலால் அங்கே தொழிலாளர் அதிகமாய்ச் சேரவில்லை; இந்த நாள்வரைக்கும், பட்டுப்புடைவை, சூரியகாந்திப் பட்டுப்புடைவை, பருத்திநூற்புடைவை, இரும்புவேலை,

கண்ணாடிவேலை முதலியவைகளைச் செய்யும் தொழிற்சாலைகள் சில உண்டு; ஆகிலும் அவைகள் உபயோகப்பட்டிருக்கவில்லை.

சமய சம்பந்தமான உற்சவம் கொண்டாடுவதும், காளைகளைப் போருக்கு விடுவதுமே ஸ்பானிய சாதியாருடைய முக்கியமான விநோதங்களாம். அவர்கள் சாதாரணமாய்க் கொண்டாடுகிற திரளான பண்டிகைகளும் உற்சவங்களுந்தான் அவர்களுடைய தரித்திரத்திற்கும் சோம்பலுக்கும் பிரதான காரணங்களாய் இருக்கின்றன. போர் செய்யப் பழக்கப்பட்டிருக்கிற காளைகளை ஒன்றோடொன்று போருக்கு விடுவதும், காளைகளையும் மனுஷரையும் போர் செய்ய விடுவதும் அவர்களுக்குள் வழக்கம். அந்தக்காளைப்போர் நடக்கிற சமயத்தில், ஆண், பெண், சிறியோர், பெரியோர் அனைவரும் ஏகமாய்க் கூடி, வேடிக்கை பார்த்து, வீணிலே பொழுதுபோக்குவார்கள். ஸ்பானியதேசத்திலுள்ள பெண்கள் தங்கள் இஷ்டத்தின்படி வெளியே வந்து, உலாவித் திரிவது வழக்கமல்ல. அத்தனை கட்டுப்பாடு¶ துருக்கியதேசத்திலொழிய, ஐரோப்பாவில் மற்றெங்கும் இல்லை. அவர்கள் மறு தேசத்துப் பெண்களைக் காட்டிலும் அதிக அறியாமையும் வீண்பத்தியுமுள்ளவர்கள்; ஒழுக்கத்தில் எவ்வளவும் மேன்மையுடையவர்களல்ல. அங்கே ஏற்படுத்தப்பட்டிருக்கிற தர்மசாலைகள் அநேகம் அல்ல; இருக்கிறவைகளும் துரைத்தனத்தாரால் ஆதரிக்கப்படுகின்றன; பார்க்குமிடத்தில் ஸ்பானியதேசத்தில் நடக்கின்ற கிரமத்தாழ்வு மிகுதி; வைத்தியநூலிலே தேர்ந்தவர்கள் இல்லை. செவ்வையான அரசாட்சி இல்லாததி

---

¶ செல்வமும் சீர்த்திருத்தமுமுள்ள சிமான்கள் வீட்டுப் பெண்களுக்குள் அந்த வழக்கம் வரவரக் குறைகின்றது.

றூற் சேரழிந்திருக்கின்ற ஸ்பானியதேசமானது, ஐரோப்பாக்கண்டத்தில் மிகுந்த சிறப்புள்ளதும் இயற்கையான வளப்பங்களில் எவ்வளவும் குறைவு இல்லாததுமாயிருக்கின்றது. அது ருஷியதேசத்தைப்போல விசாலமாயிராமல், அதிக நெருக்கமாயிருக்கின்றது; ஆகிலும் அத்தேசத்தின் நிலவளமும்; வெப்பம் குளிர்ச்சி இவைகளின் நிலைமையும் பேதாபேதமாயிருக்கும். அதின் ஒரு பக்கத்தில் அத்லந்திக்சமுத்திரமும், மறு பக்கத்தில் மத்தியதரையானகடலும் இருக்கிறதினால், அது வர்த்தகவிர்த்திக்கு வாய்ப்பான தெசமாயிருக்கின்றது. அதின் கரையை அடுத்த குடாக்கடல்கள் தோணிகள் தங்கிநிற்பதற்கு வசதியானவைகள். ஸ்பானியதேசத்திலே அதிக நீர்ப்பாய்ச்சலுள்ள பெரிய ஆறுகள் உண்டு. கொஞ்சச் செலவுபண்ணிச் சில கால்வாய்களை வெட்டிவிட்டால், அந்த ஆறுகளின் தண்ணீர் தேசமெங்கும் தாராளமாய் ஓடிப்பாயும். அத்தேசத்திலே இரும்பு, செம்பு, இரசம் முதலிய லோகங்கள் திரளாயிருக்கிற சுரங்கங்களும், அங்குள்ள தொடர்ச்சியான மலைகளில் பித்தளை உண்டாகிற பதிவுநிலங்களும் உண்டு. இத்தனை ஏராளமான ஐசுவரியங்களெல்லாம் ஒன்றுகச் சேர்ந்திருக்கப் பெற்ற ஸ்பானியதேசத்திற்குச் சமானம் எங்குமில்லை. அங்கே செல்வவிர்த்திக்கும், செழிப்புக்கும் ஆதாரமாகிய இத்தனை வழிவகைகள் இருந்தும், சென்ற ௩00 வருஷகாலவரையில் ஸ்பானியசாதியார் அணு அளவும் முயற்சிப்படவில்லை. அது மிகவும் துக்கப்பாடான காரியம். முற்காலத்திலே செவ்வையாகச் செய்யப்பட்டிருந்த சாலைகள், பாலங்கள், கால்வாய்கள், கப்பல் தங்கும் துறைகள் இவையெல்லாம் விசாரணையில்லாமல், இடிந்து சிதைந்துபோயிருக்கின்றன.

இராஜதானியாகிய மெடிறீட்பட்டணத்திற்குச் சமீபத்திலே சில சிறப்பான சாலைகள் உண்டு: மற்றப்படி அங்கங்கே இருக்கிற சாலைகளில் ஒன்றுவது உபயோகமுள்ளதாய் இருக்கவில்லை. அங்குள்ள நதிகளிற் படவுகள் ஓடுவதற்கான வசதியுமில்லை; கால்வாய் வெட்டி அவைகளின் நீரைப் பெருகவிட்டிருக்கவுமில்லை. அப்போதப்போது அந்த ஆறுகள் பெருக்கெடுத்துக் கன சேதத்தை உண்டுபண்ணுவதும், சில காலத்தில் வற்றி வறண்டு வெறுந்தரையாய்க் கிடப்பதும் வழக்கம். அங்குள்ள சுரங்கங்களில் இருக்கும் உலோகங்கள் பாதியாவது வெட்டியெடுக்கப்படவில்லை; தேசத்தின் பாதி நிலமாவது பயிரிடப்படவில்லை. நீர் பாய்ச்சுவதினால் விளைநிலமாகத்தக்க விஸ்தாரமான மாகாணங்களிலே குடியிருப்பாருமில்லை; அவைகளைப் பண்படுத்திப் பயிரிடுவாருமில்லை. அந்த மாகாணங்கள் வேனிற்காலத்திலே வறட்சியான பாலைவனங்களாகவும், ஒழுங்கற்ற காடுகளாகவும் இருக்கின்றன: எஸ்ற்றிறேமதூரா என்னும் மாகாணம் எவ்வளவும் ஜனசஞ்சாரமில்லாமல் ஏகத்திற்குப் பாழடைந்து கிடக்கின்றது. ஸ்பானியதேசத்தில் அங்கங்கே வாசமாயிருக்கிற சனங்கள் பாஷை, நடை, உடை, பாவனை முதலிய விஷயங்களில் ஒருவருக்கொருவர் முழுமையும் வேறுபட்டிருக்கிறார்கள். தேசத்தின் சௌக்கியமும், நிலவளமும், நீர்வளமும் இடத்திற்கிடம் பேதமாயிருக்கின்றன. ஸ்பானிய சாதியார் ஆதியிலே வெவ்வேறு இராச்சியங்களை ஏற்படுத்தியிருந்தார்கள். ஆதலால் அவர்கள் இன்னும் ஒருமைப்பாடில்லாமல், ஒருவர்மேல் ஒருவர் பொறாமை கொண்டு, விரோதஞ்சாதித்து நடக்கிறார்கள். அப்படி நடப்பது அவர்களுடைய செல்வத்திற்குப் பெரிய தடையாயிருக்கின்றது; ஆகிலும் காரியாகாரியங்களைப் புத்தியாய் விசாரித்து

ஒழுங்குபடுத்தினால், மேற்சொல்லிய வேறுபாடுகள் எளிதாக நீங்கும்.

அத்தேசத்தின் சௌக்கியம் அங்கங்கே பேதப்பட்டிருப்பதுபோல, விளைவுகளும் வெவ்வேறு வகைப்படும். கரையிலிருந்து போகப் போக உள்நாட்டின் நிலம் படிப்படியாய் உயர்ந்திருக்கின்றது. நடுநாடு முழுமையும் சமுத்திர மட்டத்திற்குமேல் உ000, ௩000 அடிவரைக்கும் உயர்ந்த மேட்டுத் தரவைநிலமாய் இருக்கின்றது. அங்கிருந்து தொடர்ச்சியான அநேக மலைகள் மேகமண்டலத்தை அளாவத்தக்கவைகளாய் உயர்ந்திருக்கின்றன. அவைகளின் கொடுமுடிகள் எப்பொழுதும் பனியால் மூடப்பட்டிருக்கும். ஆதலால், ஸ்பானியதேசம் மிகவும் நெருக்கமாயிருந்தும், அதின் சௌக்கியம் இத்தனை பேதமுள்ளதாய் இருக்கின்றது. மேற்சொல்லியபடி அங்குள்ள மலைச்சிகரங்களிற் பனிமூடியிருக்க, அவைகளின் அடிவாரத்தைச் சார்ந்த நிலத்திலோ, வெப்பம், குளிர்ச்சி இரண்டும் சமமாயிருக்கிற தேசப்புறங்களில் சாதாரணமாய் விளைகிற தானியவகைகள், காய் கறிகள், பலவிதப் பழம் தரும் மரங்கள், பூஞ்செடி முதலானவைகள் அதிக செழிப்பாய் உண்டாகின்றன. கடற்கரையை அடுத்திருக்கிற பள்ளநிலத்திலே வெப்பமான தேசப்புறங்களுக்கு உரிய நெல், பலவகைக் கரும்பு, இலவு இவைகளும், கிச்சிலி, நாரத்தை, இலுப்பை, மாதளை, எலுமிச்சை, அத்தி, வாதுமை முதலான எவ்வகையான பழம்தரும் மரங்களும், பூஞ்செடிகளும் உண்டாகின்றன. எப்படியும் முன்பு சொல்லிய பிரகாரம் ஸ்பானிய சாதியாருக்குத் திராட்சபானத்தைப் போல் அத்தனை முக்கியமானது வேறு ஒன்றுமில்லை. திராட்சக்கொடி தென்மாகாணங்களிலும் கீழ்மாகாணங்களிலும் திரளாய் உண்

டாகின்றது. அண்டெலூசியா, வெலென்ஷியா, என்னும் மாகாணங்களில் உண்டாகிற திராட்சத்திலே செய்யப்படும் பானம் மிகவும் மதுரமானது. அந்த மாகாணங்களில் திராட்சம் அல்லாமல், வேறு அனேக கனிவர்க்கங்களும் புஷ்ப சாதிகளும் உண்டு. அங்குள்ள ஜனங்கள், ஆஸ்ற்றூறியஸ் என்னும் வட மாகாணம் ஒன்று தவிர, மற்ற மாகாணங்களில் வாசமாயிருக்கிற ஜனங்களைப் பார்க்கிலும், அதிக ஆடம்பரமும் ஐக்கமுமுள்ளவர்களாய் இருக்கிறார்கள். ஆஸ்ற்றூறியஸ் மாகாணத்தார் மூஅர்ஸ் என்னும் சாதியாரால் ஒருபொழுதும் ஜெயிக்கப்பட்டவர்களுமல்ல; ஸ்பானியதேசத்துக்குப் படையெடுத்துப்போன வேற்றரசர் கையால் மற்ற ஸ்பானிய சாதியார்கள் பட்ட அவதிகளுக்கு அவர்கள் அகப்பட்டவர்களுமல்ல. ஆதலால், அவர்கள் ஒருவருக்கொருவர் சந்தேகம், அச்சம் இல்லாமல், ஒருமைப்பட்டுச் சுயாதீனராய் வாழ்ந்திருக்கிறார்கள்.

ஸ்பானியதேசத்திலுள்ள வட பகுதிகளின் சௌக்கியத்திற்கும், தென்பகுதி, உள் நாட்டிலுள்ள மேட்டுப் பகுதியாகிய அவைகளின் சௌக்கியத்திற்கும் மிகவும் பேதம் உண்டு. வட பகுதியில் மழை எப்பொழுதும் குறைவில்லாமற்பெய்கிறது. அங்கே அதிக வெப்பமுமில்லை, குளிர்ச்சியுமில்லை: ஆதலால் அங்கே விளைகிற பயிர்கள் விசேஷித்திருக்கின்றன. மலைகளுக்கு இடையேயுள்ள பள்ளத்தரைகளில் ஆடு மாடுகளுக்கு உபயோகமாய் அதிக புல் உண்டாகின்றது: ஆனதினால் அங்கே பாலும் வெண்ணெய்யும் அதிகம். முன் சொல்லியபடி எஸ்ற்றிறேமதூரா மாகாணம் ஜனசஞ்சாரமில்லாமல் பாழடைந்திருப்பது மெய்யே: ஆகிலும் அந்த மாகாணத்தில் நெசவுக்குத் தகுந்த மயிருள்ள உயர்ந்த சாதியான கம்பளி ஆடுகள் உண்டு. மேலும் ஸ்பானியதேசத்தில் எங்கும் உயர்ந்த சாதியான பன்றிகள்

ஏராளமாய் வளர்க்கப்படுகின்றன. அங்கே முயலும் வெள்ளை முயலும் அதிகமாய் உண்டு. ஸ்பானியதேசம் பிரதானமாய்க் கோவேறுகழுதைகளால் விசேஷித்திருக்கின்றது; அவைகள் மிகவும் சிறப்பான மிருகங்கள்; பெரும்பாலும் குதிரைகளைப்போல் அத்தனை வளர்ச்சியும், குதிரைகளைப் பார்க்கிலும் அதிக உபயோகமுமுள்ளவைகளாய் இருக்கின்றன. எவ்வகையான வியாபாரச் சரக்குகளையும் கோவேறுகழுதைகளில் ஏற்றி, அவைகளை நிரைநிரையாய்ச் செலுத்திக்கொண்டு அங்கங்கே போக்குவரவு பண்ணுவார்கள். அந்த வேலையிற் சேர்ந்த ஜனங்கள் ஆண்மையும் உண்மையுமுள்ளவர்கள்.

கொஞ்சச் செலவிலே பிரயாணம்போகிறவர்களுக்கு குதிரைகளும் கோவேறுகழுதைகளும் உத்தமமான வாகனங்களாம். அங்குள்ள சாலைகள் பெரும்பாலும் இடிந்து தகர்ந்து மேடும் பள்ளமுமாயிருக்கிறதினால், கால்நடையாய்ப் பயணம்பண்ணுவது கடுமை. அத்தேசத்தில் வழங்கிய பண்டிகள் எவ்வளவும் சௌக்கியமானவைகளுமல்ல; வேலைப்பாடுள்ளவைகளுமல்ல; அவைகள் பரும்படியாய்ச் செய்யப்பட்டவைகள்; சில வேளை அந்தப் பண்டிகளில் கூ௦ கோவேறுகழுதைகளைச் சோடுசோடாய்ப் பூட்டிச் செலுத்துவார்கள். எப்படியும் ஸ்பானியதேசத்திலே எளிதாகப் பயணம் போவதற்கு அடுத்த வசதி அதிகம் இல்லை. பல இடங்களிலும் சத்திரங்கள், சாவடிகள் இருக்கின்றன; இருந்தும் அவைகள் மிகவும் வசதியற்றவைகளாய் இருப்பதினால், பயணக்காரருக்கு அதுவும் ஒரு சங்கடம். அப்படி இருப்பதற்கு ஒரு காரணம் என்னவென்றால், ஸ்பானியர் அவசியமான அலுவல் முகாந்திரமாகவேயொழிய, வேறு முகாந்தரமாகப் பயணம்பண்ணுகிறதில்லை. ஆதலால் மறு தேசத்தார்கள்

உல்லாசத்திற்காகவும், அறிவுவிர்த்திக்காகவும் பயணம் பண்ணுவதினால் உண்டாகும் பிரயோசனங்களை இன்னவென்று ஸ்பானியசாதியார் எவ்வளவும் அறியமாட்டார்கள். அந்த அறியாமையே அவர்கள் மனத்திர்ப்தியாயிருப்பதற்குக் காரணமாம். பிற தேசங்களிலுள்ள விஷயங்களைப் பார்த்தறியும்படி போவது அவர்களுக்கு மலை எடுப்பது போலப் பாரமாகத் தோன்றுகிறது. அப்படியிருப்பதினால், அவர்கள் தங்களுக்கும் பிறருக்குமுள்ள தாரதம்மியத்தை அறியார்கள். சென்ற ௫00 வருஷகாலத்தில் ஐரோப்பிய சாதிகள் அனைவரும் பல விதக் கைத்தொழில்களிலும், சாஸ்திரத் தேர்ச்சியிலும், மற்றுள்ள கல்விகளிலும், சுக அனுபவங்களிலும், செல்வதிலும், நற்குண நற்செய்கைகளிலும் அதிக விர்த்தியடைந்திருக்கிறார்கள். ஸ்பானியரோ அந்த விஷயங்களில் எவ்வளவும் தேற்றமில்லாதவர்களாய் வரவரச் சிறுமைப்படுகிறார்கள். இதற்கு ௩00 வருஷத்திற்குமுன்பு கைத்தொழில் முயற்சி, தேசாசாரஉபசாரம், நாகரிகம் முதலிய விஷயங்களிலே ஸ்பானியருக்கு உண்டான திருத்தம் அதிகமாயிருந்தது. அப்பொழுது அவர்கள் மற்றெந்த ஐரோப்பிய சாதியாரைப் பார்க்கிலும் அதிக வல்லமையும், செல்வமும், கல்வித்தெளிவுமுள்ளவர்கள். இப்பொழுதோ, அவர்களைப் போலப் பலவீனரும், ஏழைகளும், மூடரும் ஐரோப்பாவில் எங்குமில்லை. முன் குறித்த காலத்தில் அவர்கள் சிற்பத்தொழிலிலும், சித்திரவித்தையிலும் இற்றலி, நெதர்லண்ட்ஸ் என்னும் தேசங்களிலுள்ள வித்துவான்களுக்குச் சமானமானவர்கள். அவர்களுக்குள் இருந்த வித்துவான்களும் நூலாசிரியர்களும் அனேகர். அவர்களிற் சிலர் செய்திருக்கிற காவியம் முதலான பிரபந்தங்கள் இந்நாள்வரைக்கும் உத்தமமென்று மதிக்கப்ப

டுகின்றன. இக்காலத்திலோ, அவர்களுக்குள்ளே சிற்ப சாஸ்திரிகளாவது, கவிவாணராவது, வித்துவான்களாவது ஒருவருமில்லை. அத்தேசத்தில் இடிந்து தகர்ந்துபோன பழைய பட்டணங்களில் இந்நாள்வரைக்கும் உருவழிந்திருக்கிற கட்டடங்களும் சித்திரங்களுமே இப்பொழுது அங்கே பிரயாணம்போகும் பிற தேசத்தார்களுக்கு அலங்காரமாகத் தோன்றுகிற காட்சிகளாம். அந்த விசித்திரமான வேலைப்பாடுகளை அத்தேசத்தவர்களே தங்கள் அழியாத பொக்கசமாய் மதித்துப் பாராட்டுவது தகுதியாயிருக்க, அவர்கள் அவைகளைக்குறித்து அணுவளவாவது நினையாமலும், விசாரியாமலும் இருக்கிறார்கள்.

---

## போர்ட்யுகல்தேசம்.

கிறிஸ்து அவதரிக்க ௩௦௦ வருஷத்திற்குமுன்பு போர்ட்யுகல்தேசத்தை உரோமைத் துரைத்தனத்தார் கைவசப்படுத்தினபொழுது, அவர்கள் அந்தத் தேசத்திற்கு லூசிற்றுனியாவென்று பெயரிட்டார்கள். முற்காலத்திலே பினேஷியர் என்னும் சாதியார் அத்தேசத்திற் குடியேறினார்களென்று உத்தேசிப்பதற்கு இடம் உண்டு. வட தேசத்தில் வாசமாயிருந்த கோத்தியர் என்னும் மிலேச்சர் கிறிஸ்து அவதரித்தபின் ரு-ம் நூற்றுண்டில் உரோமை இராச்சியத்திற்குப் படையெடுத்துப்போய், சண்டைசெய்து, அதின் அதிகமான பங்கைப் பிடித்துக்கொண்டபோது, போர்ட்யுகல்தேசத்தையும் உரோமைத் துரைத்தனத்தாருடைய கையிலிருந்து பறித்துக்கொண்டார்கள். அதுவரையில் அந்தத் தேசம் உரோமருக்கே ஆதீனமாயிருந்தது. அப்புறம் மகமதீயராகிய சரஸேனியசாதியார் ஸ்பானியதேசத்தைப் பிடித்த காலத்தில் போர்ட்

யுகல் தேசத்தையும் பிடித்தார்கள். அதன்மேல் ௧,௧௧0-ம் ஆண்டில் அங்கிருந்த கிறிஸ்தவர்களான குடிகள் அத்தேசத்தைச் சரஸேனியரிடத்தினின்றும் மீட்டு, அதைச் சுயாதீன இராச்சியமாய்க் கட்டி ஆண்டார்கள்.

போர்ட்யுகல்தேசத்தின் குடிகளில் ஒருவனாகிய வாஸ்கொடிகாமா என்பவன் ௧,௪௯௭-ம் ஆண்டு ஆபிரிக்காதேசத்தின் தெற்கு முனையாகியாகிய "கேப் அவ் குட் ஹோப்பை" சுற்றிச் சமுத்திரவழியாய் இந்தியாதேசத்திற்குப் போகும் வழியைக் கண்டான். ௧,௫00-ம் ஆண்டு அங்குள்ள குடிகளில் வேறு ஒருவனாகிய பீடிரோ அல்வாரெஸ் என்பவன் தென் அமெரிக்காவிலுள்ள பிராசீல்நாட்டைக் கண்டான். அவ்வண்ணமாய்க் கண்ட முக்கியமான ஏதுக்கள் இரண்டின் மூலமாய்ப் போர்ட்யுகேசியருக்கு வெகு திரவியச் சேர்க்கையும், அதிகாரவிருத்தியும் வல்லமையும் உண்டாயின; ஆகிலும் அவைகள் நெடுநாளளவும் நிலைப்பட்டிருக்கவில்லை. ௧,௫௮0-ம் வருஷம் போர்ட்யுகல் இராச்சியத்தை ஸ்பானிய சாதியார் பிடித்துக்கொண்டபொழுது, போர்ட்யுகேசியர் அங்கங்கே குடியேறியிருந்து அரசாண்ட தேசப்பகுதிகளில் அனேகம், விசாரணையற்று வேற்றரசருடைய கையாட்சிக்குள்ளாயின. பிரதானமாய் போர்ட்யுகேசியர் இந்தியாதேசத்தின் மேற்குக் கரையில் இராச்சியபாரம் செய்த நாடுகளை ஒன்றின்பின் ஒன்றாய் முன்பு உலாந்த சாதியாரும், அப்புறம் அங்கிளோ துரைத்தனத்தாரும் பிடித்துக்கொண்டார்கள். கடைசியாய் கோவைப்பட்டணமும், அதைச் சார்ந்த சிறு நாடும் தவிர, மற்றெல்லாம் அவர்கள் கையினின்று நீங்கி, அங்கிளோ துரைத்தனத்தார் வசமாயின. ௧,௬௪0-ம் வருஷத்திலே போர்ட்யுகேசியர் ஐரோப்பாவிலே ஸ்பானிய துரைத்தனத்தாருடைய

ஆக்கினேயைக் கடந்து, தங்கள் தேசத்திலுள்ள பிரேகெ ன்ஸா மாகாணத்தின் டியூக் பிரபுவாயிருந்த ஜோன் எ ன்பவரைத் தங்களுக்கு அரசனுகத் தெரிந்து ஏற்படுத் தினுர்கள். அவருடைய குடும்பத்தார்தானே இந்நாள் வரைக்கும் அரசாண்டுவருகிருர்கள். உலாந்த சாதியார் முன்பு போர்ட்யுகேசியரிடத்திலே தென் அமெரிக்காதே சத்திற் பிடித்திருந்த பிராசீல்நாட்டை அந்த அரசன் அ வர்கள் கையினின்று மீட்டுக்கொண்டார். அதினுல் "போ ர்ட்யுகல்தேசத்திற்கும் பிராசீல்நாட்டிற்கும் அரசன்" எ ன்பதாய் அவருக்குப் பட்டஞ்சூட்டப்பட்டது. பிராஞ் சிய சக்கரவர்த்தியாகிய முதல் நப்போலியனவர்கள் ஐ ரோப்பாதேசத்திற் படையெடுத்து யுத்தஞ்செய்த காலத் திலே, போர்ட்யுகல்தேசம் மிகவும் தாழ்வுபட்டிருந்தது. அவர் ஸ்பானியதேசத்திலே சர்வ அதிகாரம் பெற்று, த ம்முடைய சகோதரனுக்கு மகுடாபிஷேகம்பண்ணி, அவ ரை அங்கே அரசாளும்படி வைத்தபின்பு, போர்ட்யுகல் தேசத்திற்குப் படையெடுத்துப்போய், அதின் அரசனே யும் அவர் குடும்பத்தையும், அங்கிருந்து அப்புறம் துர த்திவிட்டார்; அவர்கள் பிராசீல்நாட்டுக்குத் தீவிரமாய்ச் சென்று, அங்கே அடைக்கலம் பெற்றுர்கள்.

சில வருஷகாலவரையில் போர்ட்யுகல்தேசத்தில் அங் கிளோசாதியாருக்கும் பிராஞ்சியருக்கும் அதிக விரோ தமும் போராட்டமும் உண்டாயின. போர்ட்யுகல்தேச த்தைக் கைவசப்படுத்தி அரசாண்ட பிராஞ்சியரை அங்கி ருந்து அகற்றும்படி, அங்கிளோ சாதியார் போர்ட்யுகே சியருக்கு உதவிபண்ணி, பிராஞ்சியரை ஓட்டிவிட்டபின்பு, அங்கிளோ சாதியாருக்கும் ஸ்பானியருக்கும் பிராஞ்சியது ரைத்தனத்தாருடனே மிகவும் கொடிய யுத்தம் உண்டான து: அப்பொழுது போர்ட்யுகேசியர் அந்த இரண்டு பட்

சுத்தாருக்கும் இராணுவ சகாயம் பண்ணினார்கள். கூ – ம் ஜோன் என்னும் போர்ட்யுகேசிய அரசன் தன் தேசத்திற்குத் திரும்பாமல், கஅஉ0 – ம் ஆண்டளவும், பிராசீல் நாட்டிலே இருந்து, அப்புறம் தன்னுடைய ராஜதானிக்கு வந்து, அங்கே தேச நியாயப்பிரமாணத்தின் முறைப்படியே அரசாண்டான். அக்கலாத்தில் போர்ட்யுகேசியர், மேற்சொல்லிய அரசனுடைய மூத்த குமாரனும் பட்டத்திற்குப் பாத்தியஸ்தனுமாகிய டொன் பீடிரோ என்பவனைப் பிராசீல்நாட்டின் சக்கரவர்த்தியாய் ஏற்படுத்தி, அந்த நாட்டைச் சுயாதீன இராச்சியமாய் இருக்கும்படி திட்டஞ் செய்தார்கள். தகப்பன் மரணமடைந்த பின்பு, டொன் பீடிரோ என்பவனும், அவனுடைய சகோதரனும் இராசரீக விஷயத்தில் ஒருவருக்கொருவர் முற்படப் பார்த்ததினால், தேசத்திலே மிகுந்த கலகம் உண்டாயிற்று: அதினிமித்தம் போர்ட்யுகல்தேசத்திலே பல வருஷகாலமாய் உள்ளூர்ச்சண்டை நடந்தது; அந்தச் சண்டையினால் மிகுந்த சீரழிவும் சேதமும் உண்டாயின. கடைசியில் அங்கிளோ துரைத்தனத்தார் செய்த சகாயத்தினால், டொன் பீடிரோ என்பவனே வெற்றியடைந்து, கஅஙடு-ம் வருஷத்தில் தன் குமாரத்தியாகிய டொன்னா மரீயா என்பவளுக்கு முடிசூட்டி, அவளை அரசாளும்படி வைத்தான். இப்பொழுது அங்கே ஆளுகைசெய்கிற வாலிப அரசன் அந்த இராக்கினியின் குமாரனும்.

அசோஅர்ஸ், கேப்டிவெர்ட், கினி என்னும் தீவுகள், சிறப்பும் சவுக்கியமுமுள்ளதாகிய மதிராதீவு, ஆபிரிக்காக் கண்டத்தில் அங்கோலா, மொசம்பிக் என்னும் குடியேறிய நாடுகள், ஆசியாக்கண்டத்தில் கோவைநாடு, சீனதேசத்தைச் சேர்ந்த மகேளவுதீவு முதலான பல அன்னிய இடங்கள், இன்னும் போர்ட்யுகேசியருக்கு ஆதீனமாயிருக்

கின்றன; இருந்தும் முற்காலத்தில் அவர்களுக்கு உண்டா
யிருந்த வல்லமையும் மகிமையும் ஒழிந்துபோயின. அவர்
கள் தங்களுக்குப் பூர்வத்தில் உண்டாயிருந்த மேன்மையா
ன நிலைமையை இனி அடையமாட்டார்களென்று தோன்று
கிறது. ஸ்பானியரைப் போல போர்ட்யுகேசியரும் கிறிஸ்
துமார்க்கத்தின் உண்மையான கோட்பாடுகளைத் தள்ளி,
மிகுந்த அறியாமையிலும் வீண்பத்தியிலும் முழுகியிருக்
கிறார்கள். அவர்கள், ஸ்பானியரைப் பார்க்கிலும், அதிக
துன்மார்க்கர். "ஸ்பானியன் ஒருவன் தன் துன்மார்க்கத்
துடனே மாயகுணத்தையும் கொள்வானாகில், அவன் போ
ர்ட்யுகேசியன் ஆவான்" என்பதாய் ஒரு வித்துவான் எழு
தினார். அங்கே கல்விப்பயிற்சி மிகவும் தாழ்ச்சியாயிரு
க்கின்றது. வேளாண்மைமுயற்சி ஸ்பானியதேசத்தில் இ
ருக்கிறது போலும் அல்ல; அதை எல்லாரும் அலட்சி
யமாய் விட்டுவிடுகிறார்கள்; நெசவு முதலிய கைவேலைக
ளும் வியாபாரமும் அப்படியே கைவிடப்பட்டன; அரசா
ட்சி பலவீனப்பட்டிருக்கின்றது; எவ்வகையான உத்தி
யோகஸ்தர்களும் நெறி தப்பி நடக்கிறார்கள்; கொலை முத
லிய பாரமான பாதகங்கள் அங்கே சாதாரணமாய் நட
க்கின்றன: முன் இருந்த சீருக்கு இவை எவ்வளவோ பே
தம். முன்பு அதிக கல்வித்திறமுள்ள வித்துவான்கள் இ
ருந்தார்கள்; அவர்களில் கேமூஎன்ஸ் என்னும் புலவன்
எங்கும் கீர்த்திபெற்றவன்: அல்லாமலும் அத்தேசத்தில்
முதன்மையான இரண்டு மூன்று சர்வகலாசாலைகளும் இ
ருந்தன. கிறிஸ்துமார்க்கத்தின் உத்தமமான உபதேசங்க
ளைப் போர்ட்யுகேசியர் தள்ளிவிட்டார்கள். பதிதரென்று
குற்றம் சுமத்தப்பட்ட கிறிஸ்தவர்களை விசாரித்துத் தண்
டிக்கும்படியாக, கடுஉகூ-ம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட
சமய விசாரணைச்சபையார் மூலமாய், அத்தேசத்தவர்க
ளுக்கு உண்டாயிருந்த சுயாதீனமும் விவேகமும் குறை

வுபட்டன. அதற்குமுன்பு கரு-ம் நூற்றுண்டிலே மேற்சொல்லிய மேன்மைகள் போர்ட்டுகலிலே சாதாரணமாய் இருந்தன. இப்பொழுதோ, அந்த மேன்மைகள் எல்லாம் ஒழிந்துபோயின.

போர்ட்டுகல்தேசத்தின் தன்மை ஸ்பானியதேசத்தின் தன்மைக்கு ஒப்பாய் இருக்கின்றது. எப்படியும் அது நெடுந்தூரமளவும் கடல் சூழ்ந்த பூமியாயிருப்பதினுல், அங்கே ஸ்பானியதேசத்தில் இருக்கிறது போல அவ்வளவு வெப்பம் இல்லை. நில வளம், தேச சவுக்கியம், இட வசதி முதலியவைகளில், ஸ்பானியதேசத்திலுள்ள சவுக்கியம் போர்ட்டுகல் தேசத்திலும் உண்டு. அத்தேசத்தில் உண்டாகிற விளைவுகள் அனேகம்; திராட்சம், கிச்சிலி, இலுப்பை, எலுமிச்சை இவைகள் முக்கியமானவைகளாம்; இவைகளும், விசேஷமாய்த் திராட்சமும் பிற தேசங்களுக்கு அனுப்பப்படுகிற பிரதான வியாபார வஸ்துக்களாம். அங்கே ஒருவகைக் கருமையான திராட்சபானம் உண்டு; அது, மிகவும் உருசிகரமாயிருப்பதினுல், உயர்ந்த விலைக்கு விற்கப்படுகின்றது; அது போர்ட்டுகல்தேசத்திலுள்ள ஒபோர்ட்டோநகரத்திலே செய்யப்படுகின்றது; ஆதலால் அது "போர்ட்" என்னப்படும். லிஸ்போன் என்னும் பட்டணம் போர்ட்டுகல்தேசத்தின் இராஜதானியாம்: அல்லாமலும் ஒபோர்ட்டோ, கோயிம்பிரா, ஏல்வஸ், எவோரு என்னும் பட்டணங்களும் பிரதானமானவைகளாய் இருக்கின்றன: அவைகளில் கோயிம்பிராநகரத்திலே முன் ஒரு காலத்தில் கீர்த்தி பெற்ற ஒரு சர்வகலாசாலை இருந்தது. அங்குள்ள விசேஷமான நதிகள் தேகுஸ், டௌரோ, மின்ஹோ என்பவைகளே; அவைகளெல்லாம் ஸ்பானிய மலைகளில் உற்பத்தியாகி, அத்லந்திக் சமுத்திரத்திற் போய் விழுகின்றன.

# இற்றலிதேசம்.

இற்றலிதேசமானது ஐந்து இராச்சியங்களாகப் பகுக்கப்பட்டிருக்கின்றது. அந்தத் தேசத்தை ரு-ம் நூற்றுண்டிலே அனேக மிலேச்சவமித்தார்கள் ஒன்றுகத் திரண்டு, உரோமர் வசத்தினின்று பிடித்துக்கொண்டபின்பு, அது ஒருபொழுதும் ஒரே இராச்சியமாகச் சேர்க்கப்படவில்லை. கோத்தியர் என்னப்பட்ட சனங்கள் இற்றலிதேசத்திற்குப் படையெடுத்துப்போய், அங்கே குடியேறி, அதைக் கட்டிக்கொண்டார்கள். பின்பு சு-ம் நூற்றுண்டிலே, லோம்பார்டியர் என்னப்பட்ட மிலேச்சர், அவர்களிடத்தினின்று வடமாகாணங்களைப் பறித்துக்கொண்டு, அந்த மாகாணங்களுக்கு, தங்கள் சாதிப்பெயரின் பிரகாரம், லோம்பார்டியென்று பெயரிட்டார்கள்; அந்தப் பெயரோ அதற்கு இந்நாள்வரையில் வழங்கிவருகின்றது.

அதின்பின் இற்றலிதேசத்திலே அனேக மாறுதல்கள் நடந்தன. அதை ஐரோப்பிய துரைத்தனத்தாரிற் பலர் பல தரம் ஜெயித்து, திரும்பவும் இழந்துபோனுர்கள். அப்புறம் அது அனேக சிறு மாகாணங்களாகவும், துரைத்தனங்களாகவும், பிரபுகளின் ஆளுகைக்குட்பட்ட இடங்களாகவும், சுயாதீன நகரங்களாகவும் பிரிக்கப்பட்டது. அத்தேசத்தவர்கள் ஒரு பொழுதாகிலும் ஒருமைப்பாடாய் இருந்ததுமில்லை; தங்களுக்கு உள்ளது போதுமென்று எண்ணி மனத்திர்ப்தி அடைந்ததுமில்லை. முன் சொல்லியபடி இற்றலிதேசம் இப்பொழுது ஐந்து இராச்சியங்களாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அதின் தெற்குப் புறத்திலே நப்பொலி என்னும் இராச்சியம் இருக்கின்றது. ஸிஸிலிதீவும் அதற்குள் அடங்கும். நடுத் தேசத்திலே பாப்பு மதஸ்தருடைய சபைக்குரிய நாடுகள் இருக்கின்றன; அவைகள் பாப்புவின் அதிகாரத்தில் இருக்கின்றன; பாப்பு

வானவர் ஆசாரியனும் அரசனுமாய் ஆளுகைசெய்கிறார். மேலும் அவர், உலகத்தில் எங்கும் ஆளுகைசெய்கிற அரசர்கள் எல்லாருக்கும் வைதிக காரியங்களில், தாமே விசாரணைத்தலைவர் என்பதாகச் சாதிக்கிறார். சிரேஷ்ட பிரபு ஒருவருடைய அதிகார விசாரணையில் இருக்கிற தஸ்கெனி இராச்சியமும், சர்தீனியதீவும் லோம்பார்டியின் ஒரு பகுதியும் அடங்கிய சர்தீனிய இராச்சியமும், ஆஸ்த்திறிய இராச்சியத்தைச் சேர்ந்த வெனிஸ்பட்டணமும் லோம்பார்டியின் மற்றப் பகுதியும் உள்ளிட்ட வேறொரு இராச்சியமும், ஆக மூன்று இராச்சியங்கள் இற்றலிதேசத்தின் வட புறத்தில் இருக்கின்றன. வெனிஸ்பட்டணம் முற்காலத்திலே சுயாதீனம் பெற்றிருந்து, லோம்பார்டி மாகாணத்தின் அதிகமான பகுதியைக் கட்டி அரசாண்டது. அது அதிக மாட்சிமை பெற்றுப் பலத்திருந்த ஐரோப்பிய இராச்சியங்களில் ஒன்றாயிருந்தது. போ என்னும் நதியின் முகத்துவாரத்திலுள்ள பல சிறு தீவுகளிலே, ரு-ம் நூற்றாண்டில் அந்தப் பட்டணம் கட்டுவதற்கு அஸ்திவாரம் போடப்பட்டது; அது மிகவும் விசித்திரமாய்க் கட்டப்பட்ட அரமனைகளும், பல வகை உத்தியோகங்கள் நடக்கும் சிறந்த கட்டடங்களும் நிறைந்திருக்கின்ற சிங்காரமான பட்டணம்; கால்வாய்களே அதின் வீதிகளும், அவைகளில் ஓடும் படவுகளே வாகனங்களுமாம். கஉ-ம், கங-ம், கச-ம் நூற்றாண்டுகளில் வெனிஸ் பட்டணத்தார், கப்பல் ஓட்டும் வித்தையிலே சமானஞ்சொல்வதற்கு அருமையான சாமர்த்தியமுடையவர்களாய் இருந்தபடியால், அவர்களுடைய நகரி "கடலின் தலைவி" என்று மறு பெயர் பெற்றது. நெதர்லண்ட்ஸ்தேசத்திலுள்ள விஸ்தாரமான பட்டணங்களிலே சில காலத்திற்குமுன் இருந்த ஜனங்களைப் போல, வெனிஸ்பட்டணத்திலே வாசமாயிருந்த பிரதான குடிகளெல்லாரும் பெரிய வர்த்தகராயிருந்தார்கள். அவர்கள் பிரபுகளுக்கும்

இராஜகுமாரர்களுக்கும் நிகரான செல்வராயிருந்தார்கள். அப்பொழுது ஐரோப்பாவின் தெற்குப் புறத்திலுள்ள தேசங்களில் நடந்த வியாபாரத்தொழில் முழுமையும் அவர்களுக்குள் அடங்கியிருந்தது. அவர்களுடைய கப்பல்கள் அக்காலத்தில் அறியப்பட்டிருந்த எந்தெந்தத் தேசங்களுக்கும் போக்கு வரவாய் இருந்தன; ஆகிலும் கசு-ம் நூற்றுண்டு தொடங்கி அவர்களுடைய அதிகாரம் வரவரக் குறைவுபட்டது. கரு௦அ - ம் வருஷத்தில் பாப்பு, ஜெர்மானிய அதிபதிகள், ஸ்பானிய, பிராஞ்சிய அரசர்கள் இவர்கள் யாவரும் ஒரு கையாகச் சேர்ந்து, மேற்சொல்லிய வெனிஸ் பட்டணத்தாருக்கு விரோதமாய், கெம்பிரோ என்னும் இடத்தில், உடம்படிக்கை ஒன்று சித்தஞ்செய்தார்கள். அதின்மேல் அவர்கள் அதி சீக்கிரத்திலே பலவீனம் அடைந்தார்கள். சென்ற நூற்றுண்டின் முடிவிலே ஆஸ்ற்றிய சக்கரவர்த்தி, அவர்களை முறியடித்து, வெற்றிகொண்டார். சில வருஷங்களுக்குமுன்பு அவர்கள் திரும்பவும் சுயாதீனராகும்படி பிரயத்தனம் பண்ணியும், அநுகூலம் பெறுமல் முழுமையும் கீழ்ப்படுத்தப்பட்டார்கள். இப்பொழுது வெனிஸ் என்னும் இடத்துக்குப் பிரயாணம் போகிற பிறதேசத்தார்கள், அங்கே நூதனமாகச் செய்யப்பட்டிருக்கின்ற யாதொன்றைப் பார்க்கிறதினலல்ல, பூர்வ காலம் தொடங்கி இருக்கிற மாட்சிமையான கட்டடங்களையும், கண்ணைப் பகட்டத்தக்க சித்திரங்களையும் காண்பதினாலும், அவர்களுக்கு முற்காலத்திலே உண்டாயிருந்த பிரபலத்தைக் குறித்து நினைப்பதினாலுமே, அதிக ஆச்சரியப்படுவார்கள். மேற்குறித்த வெவ்வேறு இராச்சியப் பகுதிகள் சில விஷயங்களில் ஒன்றுக்கொன்று ஒத்திருந்தும், துரைத்தன விஷயத்திலோ, பேதப்பட்டிருக்கின்றன. நப்பொலி இராச்சியம் நிர்ப்பந்தமான சீரில் இருக்கின்றது. அங்கே ஏகாதிபத்தியம் நடந்

துவருகின்றது. இப்போது அங்கே ஆளுகைசெய்கிற அரசனுக்குப் பெயர் பெர்டினண்ட் என்பது. அவன் ஒரு கொடியன். அவன், குடிகள்மேல் தயவு தாக்ஷிணியம் சிறிதும் இல்லாமல், தன் இஷ்டப்படி அவர்களைக் கட்டாயப்படுத்தி, அரசாளுகிறான். அங்குள்ளவர்கள் எந்த உபயோகமான விஷயத்திலாவது விர்த்தியடைவதற்குத் துரைத்தனத்தாரால் யாதொரு சகாய உபாயங்கள் செய்யப்படவில்லை; கல்வியின் அபிவிர்த்தி தடுக்கப்படுகின்றது. அந்த அரசன், சுயாதீனத்தையும் மன உற்சாகத்தையும் குடிகளுக்குள்ளே கொஞ்சமாவது தலையெடுக்க விடுகிறதில்லை. தேசமோ செழிப்பும், சவுக்கியமும், வர்த்தக முயற்சிக்கு வாய்ப்புள்ளதுமாய் இருக்கின்றது; இருந்தும், பிரயோசனம் ஒன்றுமில்லை. ஜனங்கள் நெடுங்காலமளவும் சிறைகளைப் போல் ஒடுக்கப்பட்டு, நீர்மூடராய்ப் போனதினால், அவர்கள் திரவிய பலமில்லாமல், முயற்சியிற் குறைந்து, நெறி தப்பி, நிர்ப்பந்தப்படுகிறார்கள். செல்வாக்குள்ள பெரியோர்கள் பெரும்பாலும் தேவ வழிபாடும் சிறந்த ஒழுக்கமும் இல்லாதவர்களாயிருந்தும், ஏராளமான குருக்கள்மாரையும் சன்னியாசிகளையும் ஆதரிக்க இடங்கொடுக்கிறார்கள். அந்தக் குருக்களும் சன்னியாசிகளும் பொதுவாய் அங்குள்ள ஸ்திரிகள் அனைவரையும் தங்கள் சொற்கேட்டு நடக்கும்படி செய்கிறார்கள். மேற்படி குருக்கள் எவ்விதச் சீர்திருத்தத்துக்கும் கல்வி விர்த்திக்கும் விரோதிகளாயிருப்பதுமல்லாமல், அதிக தீமைகளுக்குக் காரணருமாயிருக்கிறார்கள். ஜனங்கள் முயற்சியில்லாதவர்களாய், எப்பொழுதும் மூட நிலைமையில் இருப்பார்களானால், தங்கள் அதிகாரமும் செல்வாக்கும் விர்த்தியாகுமென்று, அந்தக் குருக்கள்மார் அறிந்து, ஜனங்களுக்கு கல்வித் தெளிவும் முயற்சியும் உண்டாகும்படி, வகைதேடுகிறதில்லை.

அந்த இராச்சியத்தின் நிலவளமும், வெப்பம் குளிர்ச் இரண்டினால் உண்டாகும் சவுக்கியமும் இற்றலிதேசத்திலுள்ள மற்ற இராச்சியங்களுக்கு வேறல்ல. நிலத்தைப் பக்குவமாய்ப் பண்படுத்திப் பயிரிட்டால், எவ்வகைப் பயிரும் எளிதாய் விர்த்தியாகும். இப்பொழுது அங்கே உண்டாகிற முக்கியமான விளைவுகள் திராட்சம், இலுப்பை, பட்டு * இவைகளே. பழ வகைகளும் கோதுமைமாவினாற் செய்யப்படுகிற "மக்கிரோனி" என்னும் ஒருவகைப் பணிகாரமுமே அங்குள்ள ஜனங்களுக்கு முக்கியமான ஆகாரங்களாம். ஜனங்கள் அந்தப் பணிகாரத்தை அதிகமாய்ச் செய்து, பிற தேசங்களுக்கு அனுப்புவார்கள். ஸிஸிலிதீவிலே கோதுமை விஸ்தாரமாய் உண்டாகின்றது. வெஸ்ஸூவியஸ் மலையிலே மிகுதியான கந்தகம் வெட்டியெடுக்கப்படுகின்றது. அத்தேசத்தவர்களின் ஐசுவரியத்துக்கு உபயோகமான வஸ்துக்களில் அதுவும் ஒன்று. அங்கே நெசவு முதலிய கைவேலைகள் அதிகமாய் நடக்கவில்லை. மேற்சொல்லிய வெஸ்ஸூவியஸ் என்னும் அக்கினிமலை மிகவும் ஆச்சரியமான ஒரு காட்சியாம். அந்த மலையிலிருந்து அப்போதப்போது நெருப்புக் கல்லுகளும், நெருப்பு நீரும் கக்கப்பட்டு, அதின் நாலு பக்கங்களிலும் அடிவாரத்திலும் விழுவதினாலே, அங்குள்ள தானிய வயல்களிலும், திராட்சத் தோட்டங்களிலும், கிராமங்களிலும் உண்டாகிற பயிர், பூண்டு, கொடிகளெல்லாம் எரிந்து, புகைந்து, சாம்பராய்ப் போகின்றன. முன் இரண்டு முறை அந்த மலைகள் உக்கிரமாகச் சீறி, அக்கினி முதலானவைகளைக் கக்கினபோது, அதற்குச் சமீபமாய் இருந்த பொம்பியை, ஹெர்கியுலேனி

* பட்டுப்பூச்சிகள் ஸிஸிலிதீவிலே முதல முதல் கஉ-ம் நூற்றாண்டில் விர்த்தியாகத் தொடங்கின. இற்றலிதேசத்தில் உண்டாக்கப்படுகிற வியாபார வஸ்துகளுக்குள்ளெல்லாம் பட்டுநூலே முக்கியமானது.

யம் என்னும் பெரிய பட்டணங்கள் அந்த நெருப்புப் பிரளயத்தில் முழுகிப்போயின. அப்புறம் அனேக நூற்றுண்டளவும் அவைகளின் அச்சு அடையாளமும் தெரியவில்லை. அந்தப்பட்டணங்கள் இருந்த இடங்களைக் கொஞ்சக் காலத்திற்குமுன் வெட்டிப் பிரித்துப் பார்த்தபொழுது, அங்கே வீதிகளும், வீடுகளும், வேறு பல கட்டடங்களும், மனுஷருடைய எலும்புகளும் காணப்பட்டன. பூமிக்குள்ளே முழுகியிருந்த அந்தப் பட்டணங்களின் கட்டடங்கள் இப்பொழுது அங்கே பிரயாணம்போகும் பிறதேசத்தவர்களுக்கு அதிக சிறந்த காட்சிகளாகத் தோன்றும். மேற்சொல்லிய அக்கினி மலையைப் பார்க்கிலும் அதிக உயரமுள்ள வேறு ஒரு மலை ஸிஸிலிதீவில் இருக்கின்றது; அதின் பேயர் எத்னு என்பது.

நப்பொலி இராச்சியத்தார், சில வருஷங்களுக்குமுன் தங்கள் அரசனுக்கு விரோதமாய் எழுந்து கலகஞ்செய்து, இராச்சியத்தில் உண்டான சீர்ப்பிழைகளைத் திருத்தித் தங்களுக்குச் சகாயம் செய்யவேண்டுமென்று, அவரைக்கேட்டார்கள். அவர் அதற்கு உடன்படாமல், அவர்களை ஒடுக்கிக் கீழ்ப்படுத்திக்கொண்டார். அவர்கள் அவருக்கு அடங்கியிருந்தும், யாதொரு சகாயமும் பெறவில்லை. நப்பொலி இராச்சியத்தைக் குறித்து மேற்சொல்லப்பட்ட வரலாறுகள் அனைத்தும் பாப்புவின் அதிகாரத்துக்குள் இருக்கிற குருநாடுகளுக்கும ஒருவாறு பொருந்தும். அங்கேயும் சமயத்திற்குரிய நடக்கைகள் முழுமையும் சீர்த்தாழ்வாயிருக்கின்றன. குருக்களுடைய குருட்டுக் கொள்கையினுலும் கொடுமையினுலும் உண்டாகிற தீமைகள் அனேகம். துரைத்தனத்தார் குடிகளுக்கு நன்மை செய்யாமல், அவிவேகிகளாய் ஆளுகை செய்கிருர்கள். அவர்கள் எவ்வகைச் சீர்த்திருத்தங்களையும் தடுத்து, கல்வியைத் தலையெடுக்க ஒட்

டாமற் பலாத்காரமாய் விலக்குகிறார்கள். எவ்வித நூலை யாவது, சமாசார பத்திரிகையையாவது துரைத்தன அதிகாரம் பெற்ற உத்தியோகஸ்தர் ஒருவருடைய அனுமதியில்லாமல், அச்சிட்டுப் பகிரங்கம்பண்ண உத்தரவில்லை. உத்தியோகஸ்தரால் அங்கீகரிக்கப்படாத எந்த நூலையும் சமாசார பத்திரிகையையும், எவர்களாவது வாசித்தார்களென்று அறியப்பட்டால், அவர்களை முற்காலத்தில் மாத்திரமல்ல, இக்காலத்திலும் பிடித்துச் சிறைச்சாலையிற் போடுவார்கள். உரோமாபுரியிலுள்ள சனங்கள், சில வருஷங்களுக்குமுன் தங்கள் அதிபதியாகிய பாப்புவுக்கு விரோதிகளாய் எழுந்து, கலகஞ்செய்தபொழுது, அவர் அவர்களுக்குப் பயந்து, இராஜதானியாகிய உரோமாபுரியைவிட்டு யாருக்கும் தெரியாமல் ஓடிப்போனார். அப்பொழுது பிராஞ்சிய துரைத்தனத்தார் அவருக்குத் துணைசெய்யும்படி தங்கள் இராணுவங்களை அனுப்பினார்கள். அந்த இராணுவங்களுடைய உதவியினால், அவர் இராஜதானிக்குத் திரும்பிப்போய்த் தமது இராச்சியத்தைக் கட்டிக்கொண்டார்.

ஆதிகாலத்திலே மாட்சிமைபெற்றிருந்த உரோம இராச்சியத்திற்கு இராஜதானியாகிய உரோமைநகரமானது குருநாட்டின் தலைப்பட்டணமாயிருக்கின்றது. அங்குள்ள மிதமான வெப்பம், குளிர்ச்சி இரண்டினால் உண்டாகும் சவுக்கியத்திற்காகவும், விசேஷமாய் அங்கே பாழாய்க் கிடக்கிற பூர்வ கட்டடங்களின் சிறப்பையும், தற்காலத்திலே தலைமையாயிருக்கிற சிங்காரமான சாதாரண கட்டடங்கள், உத்தியோகசாலைகள், தேவாலயங்கள், அரமனைகள் முதலிய கட்டடங்களின் சிறப்பையும் தரிசித்துக் கொண்டாடும்படியாகவும், பிறதேசத்தார்கள் அந்த நகரத்திற்கு அப்போதப்போது கூட்டங்கூட்டமாய்ப் போய்வருவார்கள். உரோமைநகரத்திலுள்ள "ஸேண்ட் பீற்றர்ஸ்" என்னும் அ

த்தியட்சகுருவின் ஆலயமானது உலகத்தில் இருக்கிற மா ட்சிமையான கட்டடங்கள் அனைத்திலும் அதிக சிறப்பு ள்ளதாய் இருக்கின்றது. அது கசு-ம் நூற்றுண்டிலே கட்டப்பட்டு முடிந்தது. சிற்பநூல் மாணுக்கர், சித்திரம் எழுதுவோர், கொத்துவேலை செய்வோர் முதலிய எண் ணிறந்த சனங்கள், பல பல தேசங்களிலிருந்து, உரோமை நகரத்திலுள்ள சிற்பசாலைகளிலே தொழில் பழகும்படி, போவார்கள். அந்தச் சிற்பசாலைகளில் வைத்திருக்கிற சித்திரங்களுக்கும், சிலைகளுக்கும் சமானமாகச் சிறப்பு ள்ளவைகள் எங்குமில்லை. கரு-ம், கசு-ம் நூற்றுண்டு களில் இற்றலிதேசத்தில் இருந்த சித்திரகாரரைப் போல அத்தனை சாமர்த்தியமுள்ளவர்கள் உலகத்திலே ஒரு இட த்திலும் இருந்ததில்லை. அங்கிருந்த கொத்துவேலைகார ரை வெல்லத்தக்க கைச்சமர்த்துள்ளவர்கள் பூர்வ கால த்திலே கிரேக்கதேசத்தில் இருந்த கொத்துவெலைகாரரோ யொழிய, வேறில்லை. அந்தக் காலத்தின்பின் மேற்சொல் லிய சிற்பசாலையிலே தொழில் பழகினவர்களுக்குள், சித் திரம் எழுதும் வித்தையில் அதிகமாய்க் கைதேர்ந்தவர் களான சிலர் இருந்ததுண்டு. அவர்கள் விசேஷமாய்ப் பிற தேசத்தவர்களேயல்லாமல், சுதேசிகளல்ல.

சிறப்பிலும் பிரதாபத்திலும் உரோமைநகரத்துக்கு இர ண்டாந் தரமான நகரங்கள் தஸ்கேனிய இராச்சியப் பகு தியில் இருக்கின்றன. தஸ்கேனி என்னும் இராச்சியப் பகுதி ஒரு மஹாபிரபுவினுடைய ஆளுகைக்கு உட்பட்டிரு க்கின்றது; அது கo-ம் நூற்றுண்டு முதல் இதுவரையில் சுயாதீனமாயிருக்கின்றது; அது தெற்கேயுள்ள மாகாண ங்களைப் பார்க்கிலும் அதிக செழிப்பாய் இருக்கின்றது; அதில் பயிர் செய்யும் தொழில் அதிகமாய் நடக்கின்றது. தேசத்தில் எங்காவது நீர்ப்பாய்ச்சல் குறைவாயிருக்கவி ல்லை. அங்கே நன்றுகச் செப்பனிடப்பட்ட அனேக சா

லைகள் உண்டு; பெரிய கால்வாய்கள் வெட்டப்பட்டிருக்கின்றன; சில இருப்புப்பாதைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன; அனேக உபயோகமான திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன: அத்தேசத்தின் நிலம் கொழுப்பானது; அங்குள்ள வெப்பமும் குளிர்ச்சியும் பலவிதப் பயிர்கள் உண்டாவதற்கு பக்குவமாயிருக்கின்றன. துரைத்தனத்தாரிடத்திலே சில குறைகள் இருந்தும், அவர்கள் நப்பொலி, உரோமை என்னும் இடங்களின் துரைத்தனத்தாரைப் பார்க்கிலும், அதிக விவேகிகளும் பரோபகாரிகளுமாயிருக்கிறார்கள்: ஆகிலும் அவர்களிற் சிலர் ஜனங்களிடத்திலே கைக்கூலி வாங்கி, நெறி தவறி நடக்கிறார்கள். பட்டு, இலுப்பெண்ணெய், பல வகையான பழங்கள், சோளம், சணல் முதலியவைகள் அத்தேசத்திலே அதிகமாய் உண்டு: அல்லாமலும் சிறப்பான வெண்கல்லும், கந்தகமும் மிகுதி. மேற்சொல்லிய வஸ்துக்களையெல்லாம் வர்த்தகர் பிறதேசங்களுக்கு ஏற்றுமதி பண்ணுவார்கள். நெசவு முதலிய கைத்தொழில்கள் அத்தேசத்திலே குறைவாயிருப்பதினால், அங்குள்ளவர்கள் தொழிற்பட்ட வஸ்துக்களை பிற தேச வர்த்தகரிடத்தில் கிரயத்துக்கு வாங்குவார்கள். அத்தேசத்தின் கரையை அடுத்த லெக்ஹோர்ன் என்னும் பட்டணத்திலே ஆண்களுக்கும் பெண்களுக்கும் தொப்பிகள் செய்வதற்கு உபயோகமான ஒருவகை வைக்கோற் பின்னல் செய்யப்படுகின்றது. பிலோரென்ஸ் என்னும் நகரமானது தஸ்கெனி மாகாணத்துக்குத் தலைப்பட்டணம்; அது அதிக விசித்திரமாய்க் கட்டப்பட்டிருக்கின்றது; அதிலுள்ள விநோதமானவைகளைப் பார்க்கும்படி எண்ணிறந்த ஜனங்கள் போய்வருகிறார்கள். அங்கே பிற தேசத்தார்கள் அனேகர் வாசமாயிருக்கிறார்கள். அங்குள்ள கட்டடங்களும் விசித்திரமான படிகளையுடைய உப்பரிகைகளும் அதிகமாட்சிமையானவைகள். அதுவிஷயத்திலே உரோமை

நகரமும் வேறு சில ஐரோப்பிய பட்டணங்களும் தவிர, அ
தை வெல்லத்தக்க பட்டணங்கள் எங்கும் இல்லை. அந்த நக
ரங்களில் ஒன்று ஜிநோவா என்பது. அது ஸர்தீனிய இரா
ச்சியத்திலுள்ள பட்டணங்களுக்குள்ளே தலைமையானது.
அதற்கு அரமனை நகரமென்றும், அழகிய ஜிநோவாவென்
றும் பெயராம். அது முன் ஒரு முறை பெயர்பெற்ற குடிய
ரசு நகரமாகவும், மேன்மையிலே வெனிஸ்நகரத்திற்கு மு
ற்படத்தக்கதாகவும் இருந்தது. இப்பொழுதோ, அது ஸர்
தீனியவரசனுச்கு ஆதீனமாயிருக்கின்றது. தியூரின் என்பது
சர்தீனியாவின் இராஜதானியாம். அந்தப் பட்டணத்தில் இ
ராஜாவின் அரமனை இருக்கின்றது. அது ஒரு பழைய பட்
டணம்; மிகவும் விசித்திரமாகக் கட்டப்பட்டது. ஸர்தீனிய
இராச்சியத்தின் துரைத்தனம் ஏகாதிபத்தியமாயிருக்கின்ற
து. இற்றலிதேசத்தில் அதற்கு ஒப்பான துரைத்தனம் வே
று இல்லை. இப்பொழுது அங்கே ஆளுகை செய்கிற அரசன்
பெயர் விக்டோறியா இம்மானுவேல் என்பது. அவர் தே
சத்திலே அனேக திருத்தங்கள் செய்து, இலக்கண இலக்
கியங்களை அபிவிர்த்தியாக்கிவருகிறார்; மத விஷயங்களி
லே அவரவர் தங்களுக்கு இஷ்டமான கொள்கைகளைப்
பேசவும், எழுதவும் இடங்கொடுக்கிறார்; அத்தேசத்திலே
சாதாரணமாய் ஏற்பட்டிருக்கிற சமயத்தை அனுசரிக்கிற
வர்களுக்கு எப்படியோ, அப்படியே மற்றெந்தச் சமயத்
தையும் அனுசரிக்கிறவர்களுக்கு யாதொரு இடுக்கண் செ
ய்யாமல், அவரவர் இஷ்டத்தின்படி நடக்க விடுகிறார்.
அவர் மற்றும் அரசர்களைப் போலக் குருக்கள்மாருடைய
சொல்லை மதித்து நடக்கிறவரல்ல. ஸர்தீனிய இராச்சிய
த்திலுள்ள பிரபுகளும் மேன்மக்களும், மறு இராச்சியங்க
ளிலுள்ளவர்களைப் பார்க்கிலும், அதிக உத்தமமானவர்கள்:
அவர்களில் அனேகர் அங்கிலோதேசத்துப் பெண்களை வி

வாகஞ்செய்திருக்கிறார்கள். அந்தப் பெண்கள் கல்விப் பயிற்சியுள்ள கிறிஸ்தவர்களாயிருப்பதினால், அவர்களுடைய நாயகரும் புத்திரரும் அவர்கள்மூலமாய்ச் சன்மார்க்கராகிறார்கள். அந்த இராச்சியத்தார்கள், இற்றலிதேசத்திலுள்ள மற்ற இராச்சியத்தார்களைப் பார்க்கிலும், அதிக தர்மக்கருத்தும், விவேகமும், உண்மையும், கனமுமுள்ளவர்கள். பொதுவான ஜனங்கள் உற்சாகமும், முயற்சியும், நேர்மையுமுள்ளவர்கள். அங்கே பல நூல்கள் அச்சடித்துப் பிரசித்தம்பண்ணப்படுகின்றன. பல பல வித்தைகள் அபிவிர்த்தியாகின்றன. கல்விகளும் கைத்தொழில்களும் பயிற்சி பண்ணப்படுகின்றன. அங்குள்ள துரைத்தனத்தார் போர்க்கப்பல்களைச் செப்பனிடுவித்து, கப்பல் இராணுவங்களைச் சேர்த்திருக்கிறார்கள். அந்தத் தேசம் அங்கங்கே சம நிலமும், மேட்டு நிலமுமுள்ளதாய் இருக்கின்றது. மலைகளுக்கு இடையில் இருக்கிற பள்ளத்தரைகள் புல் உண்டாவதற்கும் பயிரிடுவதற்கும் உபயோகமானவைகளாய் இருக்கின்றன. பொதுவாய் அத்தேசத்திலே வெப்பமும், குளிர்ச்சியும் சரீர சவுக்கியத்திற்கு அளவாய் இருக்கின்றன: ஆகிலும், அவைகள் எங்கும் எக்காலத்திலும் ஒரே அளவாய் இல்லை. மேட்டுப் புறங்களில் மாரிகாலத்திலே குளிர் அதிகம்; அப்பொழுது நீர் உறைந்துபோம்; நிலம் கட்டிப்பனியால் மூடப்படும். மேற்சொல்லிய பள்ளத் தரைகளில் பலவகையான பயிர்கள் விளையும்; அவைகளில் சோளம் முக்கியமானது. அதுவே சாதாரண ஜனங்களுக்கு எப்பொழுதும் வழக்கமான உணவு. அதுவல்லாமல், அவர்கள் பல வகையான பழங்களையும், செஸ்னட் என்னும் கொட்டையையும் புசிப்பார்கள். கோதுமை, சணல், கினா முதலான கறி பதார்த்தத்துக்கு வேண்டியவைகள், நெல், இலுப்பை இவைகளும், பட்டுப்பூச்சிகளை வளர்த்து விர்த்தி

யாக்கத்தக்க கம்பளிகொண்டான்செடியும் அங்கே செய்கைபண்ணப்படுகின்றன. சிறப்புள்ள பலநிறக்கல் திரளாய் உண்டு. அதுவும் அத்தேசத்தாருடைய திரவிய விர்த்திக்கு உபயோகமாயிருக்கின்றது. நெசவு முதலிய கைத்தொழிலால் ஆகிய வஸ்துக்கள் அதிகம் இல்லை; ஆகிலும் பட்டு, சூரியகாந்திப்பட்டு இவைகளாற் செய்த வஸ்திரங்களும், பல வகை ஆபரணங்களும் குறைவில்லாதிருக்கின்றன. அவைகளை வர்த்தகர் அங்கிருந்து பிற தேசங்களுக்கு ஏற்றிக்கொண்டுபோய் விற்பார்கள். ஸர்தீனியதீவிலே கோதுமை விளைவு அதிகமும், புகையிலை சொற்பமுமாய் இருக்கின்றன. மேற்சொல்லிய இராச்சியங்களில் சிறந்த பெரும்பட்டணங்கள் அனேகம் உண்டு. அவைகளுக்குள் தியூறின், ஜிஞேவா, நீஸ், றிவோலி என்பவைகளும், ஸர்தீனியதீவிலுள்ள காக்லியாரியென்னும் பட்டணமும் பிரதானமானவைகளாம். இற்றலிதேசத்திலுள்ள பகுதிகளில் இங்கே குறிக்கப்படாதவைகள் ஆஸ்ற்றிறிய இராச்சியத்திற்கு ஆதீனமாயிருக்கின்றன.

இற்றலிதேசமானது உலகத்திலுள்ள மற்றெல்லாத் தேசங்களிலும் அதிக வளப்பமும், சிறப்புமுள்ளதாயிருக்கின்றது. அதில் வெப்பம், குளிர்ச்சி இரண்டும் சரீர சௌக்கியத்திற்குத் தகுதியாயிருக்கிறன. அத்தேசத்திலே போ, அடீசு, ஆர்ஞோ, தைபர் முதலான பெரிய ஆறுகளும், வேறு அனேக சிறிய ஆறுகளும், பல விசாலமான சிறந்த மடுக்களும் இருப்பதினால், அது அதிக நீர்வளமுள்ள தேசமாம். அப்பினைன்ஸ் என்னும் தொடர்ச்சியான மலைகள், அதின் தென் திசையினின்று வட திசையாகச் சென்று, தேசத்தின் நடுவிலே செறிந்திருக்கின்றன. அந்தமலைகளுக்கு இடையிலே சிறப்பும் செழிப்புமான பள்ளத்தரைகள் உண்டு. ஆதலால், வெப்பம், குளிர்ச்சி இரண்டும்

அங்கங்கே வேறுபட்டிருக்கும். வடக்கே இற்றலிதேசத்திற்கும், ஸுவிற்ஸர்லண்ட் தேசத்திற்கும் இடையில் அல்ப்ஸ் என்னும் மலை இருக்கின்றது; அது அப்பினைன்ஸ்மலைகளிலும் அதிகம் உயர்ந்ததும், பலவிதச் சிறந்த காட்சியுள்ளதுமாயிருக்கின்றது. அத்தேசத்தில் எங்கும் திராட்சக்கொடியும், கம்பளிகொண்டான்செடியும், இலுப்பை, கொளுமிச்சை, அத்தி, செஸ்நற், இலந்தை முதலிய மரங்களும் செழித்து, ஓங்கித் திரளாய உண்டாகின்றன. அங்கில்லாத பழங்கள், புஷ்ப ஜாதிகள் எங்கும் இல்லை. அங்குள்ள காடுகள், வனங்கள், பசுமையான வெளிகள், சிங்காரமான வீடுகள், வளமான இடங்களில் விசித்திரமாய்க் கட்டப்பட்டிருக்கிற விஸ்தாரமான பட்டணங்கள், இவைகள் அனைத்தும் சிறந்தவைகளாய் இருக்கின்றன. இவைகளுக்குச் சமானமானவைகள் எங்கேயாவது இருந்தாலும், இவைகளிலும் அதிக மேன்மையுள்ளவைகளோ, எங்கும் இல்லை. இவ்வளவு சிறப்பெல்லாம் இருந்தும் என்ன - காரியத்தளவில் பயன் ஒன்றும் இல்லை. ஸ்பானியதேசத்தில் நடந்துவருகிறது போல, அங்கேயும் சீர்த்தாழ்வான அரசாட்சியும், மதமும் மேலிட்டிருக்கின்றன. அவைகள் மூலமாய் ஜனங்களுக்கு உண்டாகின்ற இடையூறுகள் அனேகம். அந்த ஜனங்கள் வறியரும், மூடரும், சோம்பரும், நாகரிகமில்லாதவர்களுமாய் இருக்கிறார்கள். பிரபுகளும் உத்தியோகஸ்தரும் பொருளாசைக்காரர், நிர்மூடர், மனத்திர்ப்தியில்லாதவர்கள், நெறி தப்பினவர்கள். ஸர்தீனிய இராச்சியத்தில் மாத்திரம் சற்றே சீர்த்திருத்தம் உண்டாயிருக்கிறதாகத் தோற்றுகின்றது. அங்குள்ளவர்கள் முற்காலத்திலே குருக்கள்மாருடைய கட்டுப்பாடுகளைக் கடந்து, திருத்தம் அடைந்தார்கள் இற்றலிதேசத்திலே ௧௩-ம், ௧௪-ம், ௧௫-ம் நூற்றாண்டுகளில் கல்வியிலே

தேர்ந்தவர்களான அநேக புலவர்களும், சித்திரத்திலும் கொத்துவேலயிலும், சிற்பத் தொழிலிலும் சாமர்த்தியமுள்ளவர்களும் இருந்தார்கள். உலகத்தில் வேறு எங்கேயாவது அவர்களை வெல்லத்தக்கவர்கள் இருந்ததில்லை. அவர்கள் எல்லாரும் ஒழிந்துபோய் இப்போது நெடுங்காலம் ஆயிற்று. ஆகிலும், அத்தேசத்தின பூர்வ சரித்திரங்களிலே அவர்கள் நாமங்கள் நட்சத்திரங்களைப் போலப் பிரகாசிக்கின்றன. அந்தத் தேசம் இப்பொழுது சிதைந்து சீரழிந்திருந்தும், அவர்கள் நாமங்களின் மூலமாய் அது பெருமை அடைந்திருக்கின்றது. ௧௯ - ம் நூற்றுண்டுமுதல், அத்தேசத்தின் ஜனங்களில் ஒருவனாவது, சிறப்பான படங்களைச் சித்திரிக்கும் தொழிலில், முன் இருந்த சமர்த்தருக்குச் சமானமாகத் தோன்றவுமில்லை; எவ்வளவும் தெளிவு பெறவுமில்லை. இற்றலிதேசத்திற் கல்வியிலே தேர்ந்தவர்கள் கவிசெய்யும் புலவராம். சரித்திரவிஷயத்திலும், சித்திரவேலை கொத்துவேலை முதலிய விஷயங்களிலும், அருமையான நூல்கள் அநேகம் அவர்களுக்குள் உண்டு. அவர்கள் இக்காலத்திலே நூதனமாக யாதொரு இலக்கண இலக்கியங்களைச் செய்யவில்லை.

---

## ஸுவிற்ஸர்லண்ட்.

ஸுவிற்ஸர்லண்ட்தேசம், ஐரோப்பாக்கண்டத்திலுள்ள எல்லாத் தேசங்களிலும், அதிக சிறிதாய் இருக்கின்றது: ஆகிலும் நற்சீரிலும், அலங்காரத்திலும் அதற்கு மேற்பட்ட தேசம் எங்கும் இல்லை. அத்தேசத்திலே ௨௨ மாகாணங்கள் உண்டு. அந்த மாகாணங்கள் ௨௨-க்கும் "ஸுவிற்ஸிய ஐக்கிய அரசாட்சி" என்று பெயராம். அங்கே நடக்கிற அரசாட்சி குடியரசு. அந்தந்த மாகாணத்தின்

பிரதிநிதிகள் ஒரு இடத்திலே சபைகூடி, ஆலோசித்து, அப்போதப்போது அவசியமான சட்டதிட்டங்களை ஏற்படுத்துவார்கள். ஆதிகாலத்திலே ஹெல்வீஷியா என்று பெயர்கொண்ட அந்தத் தேசம், கிறிஸ்து அவதரிக்கமுன்னமே உரோம அரசாட்சியாரால், ஜெயித்துக்கொள்ளப்பட்டது. இப்பொழுது அங்குள்ள பட்டணங்களில் அனேகம் முற்காலம் தொடங்கிப் பெருமை அடைந்துவருகின்றன. அங்கே இருக்கிற பழைய பட்டணங்கள் அனேகமாம்: அவைகளுக்குள்ளே ஜெனேவ், பேர்ன், லூஸேர்ன், பால், லோஸேன் என்பவைகள் பிரதானமானவைகளாம். உரோமை இராச்சியம் சிதைந்து சீர்குலைந்துபோனபின்பு, மேற்சொல்லிய நகரங்களும் வேறு சில நகரங்களும் சில நூற்றாண்டளவும் சுயாதீனமாயிருந்தன. அங்கே பிரபுகளும் அத்தியட்ச குருக்கள்மார்களும் அரசாண்டார்கள். ௧௩-ம் நூற்றாண்டிலோ, ஆஸ்த்திரிய சாதியார் கொஞ்சம் குறைய முழுமையும் அத்தேசத்தை ஜெயித்தார்கள். அவர்கள் அங்குள்ள ஜனங்களை மிகவும் ஒடுக்கி, வருத்தப்படுத்தினார்கள். ஆதலால்; அந்தச் சனங்கள் கோபங்கொண்டு, தங்களுக்குள்ளே அதிவீரசூரனாயிருந்த உவில்யம் தெல் என்பவனை அண்டி, தங்கள் அரசருக்கு விரோதமாய்க் கலகஞ்செய்யத் தலைப்பட்டு, பல வருஷமளவும் அனேக முறை கொடிய யுத்தம் பண்ணினார்கள். கடைசியில் அவர்கள் ஜெயம் அடைந்து, தங்கள் தேசத்தைச் சுயாதீனப்படுத்தினார்கள். பின்பு ௧௫-ம் நூற்றாண்டின் நடுவில், அவர்கள் ஏற்படுத்தின ஸுவிற்ஸிய ஐக்கிய அரசாட்சி இந்நாளளவும் யாதொரு பேதமிலால்மல் நடந்துவருகின்றது. அதன்மேல் பல முறைகளில், ஜெர்மானியரும் பிராஞ்சியரும் அவர்களுடனே நெருங்கி யுத்தஞ்செய்து, அவர்களை வெல்லவகைபார்த்தும், அவர்கள் தளன்று பின்னிட்டு நில்லாமல்,

நெருங்கிப் போர்செய்து, முடிவிலே வெற்றியடைந்து, முன்போலச் சுயாதீனரானார்கள். அவர்கள் வீரமும், ஆண்மையும், மனோற்சாகமுமுடையவர்கள்; நேர்மையுள்ளவர்கள்; முயற்சி குன்றாதவர்கள்; கல்விப் பிரியர்; தெய்வபக்தியுள்ளவர்கள். இற்றலி சாதியாரும், பிராஞ்சியரும அவர்களை அனேக முறை மத விஷயத்திலே ஒடுக்கித் துன்பப்படுத்தினார்கள்: ஆனாலும், அவர்கள் தொய்ந்து சலித்துப்போகவில்லை. விசேஷமாய்ப் பிராஞ்சிய சாதியார், தங்கள் சமயஒழுங்கின்படி கடவுளை வழிபடாமல், விபரீதமானவிதங்களாய் வழிபடும் ஜனங்கள் ஆராரோ, அவர்களெல்லாரையும் பிடித்துக் கொன்றுபோடும்படியாகவும், சித்திரவதைசெய்து சிறைச்சாலையில் அடைக்கும்படியாகவும், இரண்டொரு முறை அனேக இராணுவ வீரவான்களை அனுப்பினார்கள். ஸுவிற்ஸியர் அதிக வீரமும், உண்மையும், ஆண்மையுமுள்ளவர்களென்பதை ஐரோப்பிய அரசரில் அனேகர் கண்டு, அவர்களைத் தங்கள் இராணுவங்களிற்சேர்த்துக் கொள்ளுகிறார்கள்; அல்லாமலும், முக்கியமாய் அவர்களையே தங்கள் மெய்காப்பாளராகவும் ஏற்படுத்துகிறார்கள். இந்தப்படி ஸுவிற்ஸியரில் பிற தேச இராணுவ சேவகத்திலே சேர விருப்பமுள்ளவர்கள் தங்கள் இளம் பருவத்திலே பிற தேசங்களுக்குப் போய், மாதம் ஒன்றுக்குச் சம்பளம் இவ்வளவென்று தீர்மானித்துக்கொண்டு, பட்டாளத்திலே சேருவார்கள். அவர்கள் போதுமான பணத்தைச் சேர்க்குமளவும் அங்கே இருந்து, பின்பு தங்கள் சுயதேசத்திற்குத் திரும்பி, சுகசெல்வராய் வாழுவார்கள். ஸுவிற்ஸியர் தங்ள் தேசம் மிகவும் விசேஷித்ததென்று எண்ணி, அதை மெச்சுவார்கள்.

ஸுவிற்ஸர்லண்ட்தேசம் மிகுந்த சிறப்பும் செழிப்புமுள்ளது. அத்தேசம் எங்கும் மலைகளும், மடுக்களும், ஆறு

களும், பசும் புல்லினாலும் பயிர்வகைகளினாலும் நிறைந்திருக்கிற பள்ள நிலங்களும் உண்டு. அங்கே இருக்கிற அல்ப்ஸ்மலைகளைப் போல அத்தனை உயர்ந்த மலை ஐரோப்பாக் கண்டத்திலே மற்றெங்கும் இல்லை. அங்கே மிகவும் பெரிய மடுக்கள் இருக்கின்றன. றைன், ரோன் என்னும் தலைமையான ஆறுகள் அந்த மலைகளுக்கு நடுவே பாய்கின்றன. அல்ப்ஸ்மலைகளின் அதிக உயரமான கொடுமுடிக்கு வெள்ளைமலையென்று பெயர். அது கரு,000 அடிவரையில் உயர்ந்திருக்கின்றது. கொஞ்சம் குறைய அவ்வளவு உயரமுள்ள கொடுமுடிகள் வேறும் அனேகம் உண்டு. அவைகளின் சிகரங்களையும் பக்கங்களையும், கட்டிப்பனியும் உறைந்த பனியும் எப்பொழுதும் மூடியிருக்கும். ஒரு இடத்திலே ஒரு மைல் அகலம், இருபத்துநாலு மைல் நீளத்துக்குக் கட்டிப்பனி மூடிய பரவை ஒன்று இருக்கின்றது. அதற்குப் "பனிக்கடல்" என்று பெயர். அந்த மலைகளில் மிகவும் பயங்கரமான செங்குத்துகளும், கட்டிப்பனியால் மூடப்பட்டிருக்கின்ற மலைப் புறங்களில் பல சிற்றாறுகளும் உண்டு: ஆகிலும், அங்கங்கே ஒதுக்குப் புறங்களில் இருக்கிற செழிப்பான பள்ள நிலங்கள் பண்படுத்திப் பயிரிடப்பட்டிருக்கின்றன. அவைளில் அனேக கிராமங்களும், தனித்தனியாய்க் கட்டப்பட்ட நேர்த்தியான சிறு வீடுகளும் உண்டு; அந்த வீடுகள் மரத்தினாற் கட்டப்பட்டவைகளாம். சில இடங்களிலே சிறந்த பெருங்காடுகள் உண்டு. அங்குள்ள தேவதாருக்கள் மலைகளுக்கு மேலே வானமளவிற்கு ஓங்கி வளர்ந்திருக்கின்றன. மலைகள் அடர்ச்சியாய் இல்லாத மாகாணங்களில் சோளம் பயிரிடப்படுகின்றது: ஆகிலும், அவைகளின் மிகுதியான பங்கு மேய்ச்சலுக்கேயல்லாமல், வேளாண்மை செய்வதற்குத் தகுந்த நிலமல்ல. நாட்டுப்புறத்துக் குடிகளுடைய முக்கியமான தொ

தேர்ந்தவர்களான அனேக புலவர்களும், சித்திரத்திலும் கொத்துவேலையிலும், சிற்பத் தொழிலிலும் சாமர்த்தியமுள்ளவர்களும் இருந்தார்கள். உலகத்தில் வேறு எங்கேயாவது அவர்களை வெல்லத்தக்கவர்கள் இருந்ததில்லை. அவர்கள் எல்லாரும் ஒழிந்துபோய் இப்போது நெடுங்காலம் ஆயிற்று. ஆகிலும், அத்தேசத்தின பூர்வ சரித்திரங்களிலே அவர்கள் நாமங்கள் நட்சத்திரங்களைப் போலப் பிரகாசிக்கின்றன. அந்தத் தேசம் இப்பொழுது சிதைந்து சீரழிந்திருந்தும், அவர்கள் நாமங்களின் மூலமாய் அது பெருமை அடைந்திருக்கின்றது. ௧௬ - ம் நூற்றாண்டுமுதல், அத்தேசத்தின் ஜனங்களில் ஒருவனாவது, சிறப்பான படங்களைச் சித்திரிக்கும் தொழிலில், முன் இருந்த சமர்த்தருக்குச் சமானமாகத் தோன்றவுமில்லை; எவ்வளவும் தெளிவு பெறவுமில்லை. இற்றலிதேசத்திற் கல்வியிலே தேர்ந்தவர்கள் கவிசெய்யும் புலவராம். சரித்திரவிஷயத்திலும், சித்திரவேலை கொத்துவேலை முதலிய விஷயங்களிலும், அருமையான நூல்கள் அனேகம் அவர்களுக்குள் உண்டு. அவர்கள் இக்காலத்திலே நூதனமாக யாதொரு இலக்கண இலக்கியங்களைச் செய்யவில்லை.

---

## ஸுவிற்ஸர்லண்ட்.

ஸுவிற்ஸர்லண்ட்தேசம், ஐரோப்பாக்கண்டத்திலுள்ள எல்லாத் தேசங்களிலும், அதிக சிறிதாய் இருக்கின்றது; ஆகிலும் நற்சீரிலும், அலங்காரத்திலும் அதற்கு மேற்பட்ட தேசம் எங்கும் இல்லை. அத்தேசத்திலே ௧௫ மாகாணங்கள் உண்டு. அந்த மாகாணங்கள் ௧௫-க்கும் "ஸுவிற்ஸிய ஐக்கிய அரசாட்சி" என்று பெயராம். அங்கே நடக்கிற அரசாட்சி குடியரசு. அந்தந்த மாகாணத்தின்

பிரதிநிதிகள் ஒரு இடத்திலே சபைகூடி, ஆலோசித்து, அப்போதப்போது அவசியமான சட்டதிட்டங்களை ஏற்படுத்துவார்கள். ஆதிகாலத்திலே ஹெல்வீஷியா என்று பெயர்கொண்ட அந்தத் தேசம், கிறிஸ்து அவதரிக்கமுன்னமே உரோம அரசாட்சியாரால், ஜெயித்துக்கொள்ளப்பட்டது. இப்பொழுது அங்குள்ள பட்டணங்களில் அனேகம் முற்காலம் தொடங்கிப் பெருமை அடைந்துவருகின்றன. அங்கே இருக்கிற பழைய பட்டணங்கள் அனேகமாம்; அவைகளுக்குள்ளே ஜெனேவ், பேர்ன், லூஸேர்ன், பால், லோஸேன் என்பவைகள் பிரதானமானவைகளாம். உரோமை இராச்சியம் சிதைந்து சீர்குலைந்துபோனபின்பு, மேற்சொல்லிய நகரங்களும் வேறு சில நகரங்களும் சில நூற்றுண்டளவும் சுயாதீனமாயிருந்தன. அங்கே பிரபுகளும் அத்தியட்ச குருக்கள்மார்களும் அரசாண்டார்கள். கங-ம் நூற்றுண்டிலோ, ஆஸ்த்திரிய சாதியார் கொஞ்சம் குறைய முழுமையும் அத்தேசத்தை ஜெயித்தார்கள். அவர்கள் அங்குள்ள ஜனங்களை மிகவும் ஒடுக்கி, வருத்தப்படுத்தினுர்கள். ஆதலால்; அந்தச் சனங்கள் கோபங்கொண்டு, தங்களுக்குள்ளே அதிவீரசூரனுயிருந்த உவில்யம் தெல் என்பவனை அண்டி, தங்கள் அரசருக்கு விரோதமாய்க் கலகஞ்செய்யத் தலைப்பட்டு, பல வருஷமளவும் அனேக முறை கொடிய யுத்தம் பண்ணினுர்கள். கடைசியில் அவர்கள் ஜெயம் அடைந்து, தங்கள் தேசத்தைச் சுயாதீனப்படுத்தினுர்கள். பின்பு கரு-ம் நூற்றுண்டின் நடுவில், அவர்கள் ஏற்படுத்தின ஸ்விற்ஸிய ஐக்கிய அரசாட்சி இந்நாளளவும் யாதொரு பேதமிலால்மல் நடந்துவருகின்றது. அதன்மேல் பல முறைகளில், ஜெர்மானியரும் பிராஞ்சியரும் அவர்களுடனே நெருங்கி யுத்தஞ்செய்து, அவர்களை வெல்ல வகைபார்த்தும், அவர்கள் தளன்று பின்னிட்டு நில்லாமல்,

நெருங்கிப் போர்செய்து, முடிவிலே வெற்றியடைந்து, முன்போலச் சுயாதீனராஞர்கள். அவர்கள் வீரமும், ஆண்மையும், மனோற்சாகமுமுடையவர்கள்; நேர்மையுள்ளவர்கள்; முயற்சி குன்றுதவர்கள்; கல்விப் பிரியர்; தெய்வபக்தியுள்ளவர்கள். இற்றலி சாதியாரும், பிராஞ்சியரும அவர்களை அனேக முறை மத விஷயத்திலே ஒடுக்கித் துன்பப்படுத்திஞர்கள்: ஆஞலும், அவர்கள் தொய்ந்து சலித்துப்போகவில்லை. விசேஷமாய்ப் பிராஞ்சிய சாதியார், தங்கள் சமயஒழுங்கின்படி கடவுளை வழிபடாமல், விபரீதமானவிதங்களாய் வழிபடும் ஜனங்கள் ஆராரோ, அவர்களெல்லாரையும் பிடித்துக் கொன்றுபோடும்படியாகவும், சித்திரவதைசெய்து சிறைச்சாலையில் அடைக்கும்படியாகவும், இரண்டொரு முறை அனேக இராணுவ வீரவான்களை அனுப்பிஞர்கள். ஸுவிற்ஸியர் அதிக வீரமும், உண்மையும், ஆண்மையுமுள்ளவர்களென்பதை ஐரோப்பிய அரசரில் அனேகர் கண்டு, அவர்களைத் தங்கள் இராணுவங்களிற் சேர்த்துக்கொள்ளுகிருர்கள்; அல்லாமலும், முக்கியமாய் அவர்களையே தங்கள் மெய்காப்பாளராகவும் ஏற்படுத்துகிருர்கள். இந்தப்படி ஸுவிற்ஸியரில் பிற தேச இராணுவ சேவகத்திலே சேர விருப்பமுள்ளவர்கள் தங்கள் இளம் பருவத்திலே பிற தேசங்களுக்குப் போய், மாதம் ஒன்றுக்குச் சம்பளம் இவ்வளவென்று தீர்மானித்துக்கொண்டு, பட்டாளத்திலே சேருவார்கள். அவர்கள் போதுமான பணத்தைச் சேர்க்குமளவும் அங்கே இருந்து, பின்பு தங்கள் சுயதேசத்திற்குத் திரும்பி, சுகசெல்வராய் வாழுவார்கள். ஸுவிற்ஸியர் தங்கள் தேசம் மிகவும் விசேஷித்ததென்று எண்ணி, அதை மெச்சுவார்கள்.

ஸுவிற்ஸர்லண்ட்தேசம் மிகுந்த சிறப்பும் செழிப்புமுள்ளது. அத்தேசம் எங்கும் மலைகளும், மடுக்களும், ஆறு

களும், பசும் புல்லினாலும் பயிர்வகைகளினாலும் நிறைந்திருக்கிற பள்ள நிலங்களும் உண்டு. அங்கே இருக்கிற அல்ப்ஸ்மலைகளைப் போல அத்தனை உயர்ந்த மலை ஐரோப்பாக் கண்டத்திலே மற்றெங்கும் இல்லை. அங்கே மிகவும் பெரிய மடுக்கள் இருக்கின்றன. றைன், ரோன் என்னும் தலைமையான ஆறுகள் அந்த மலைகளுக்கு நடுவே பாய்கின்றன. அல்ப்ஸ்மலைகளின் அதிக உயரமான கொடுமுடிக்கு வெள்ளைமலையென்று பெயர். அது கரு,000 அடிவரையில் உயர்ந்திருக்கின்றது. கொஞ்சம் குறைய அவ்வளவு உயரமுள்ள கொடுமுடிகள் வேறும் அனேகம் உண்டு. அவைகளின் சிகரங்களையும் பக்கங்களையும், கட்டிப்பனியும் உறைந்த பனியும் எப்பொழுதும் மூடியிருக்கும். ஒரு இடத்திலே ஒரு மைல் அகலம், இருபத்துநாலு மைல் நீளத்துக்குக் கட்டிப்பனி மூடிய பரவை ஒன்று இருக்கின்றது. அதற்குப் "பனிக்கடல்" என்று பெயர். அந்த மலைகளில் மிகவும் பயங்கரமான செங்குத்துகளும், கட்டிப்பனியால் மூடப்பட்டிருக்கின்ற மலைப் புறங்களில் பல சிற்றாறுகளும் உண்டு: ஆகிலும், அங்கங்கே ஒதுக்குப் புறங்களில் இருக்கிற செழிப்பான பள்ள நிலங்கள் பண்படுத்திப் பயிரிடப்பட்டிருக்கின்றன. அவைகளில் அனேக கிராமங்களும், தனித் தனியாய்க் கட்டப்பட்ட நேர்த்தியான சிறு வீடுகளும் உண்டு; அந்த வீடுகள் மரத்தினாற் கட்டப்பட்டவைகளாம். சில இடங்களிலே சிறந்த பெருங்காடுகள் உண்டு. அங்குள்ள தேவதாருக்கள் மலைகளுக்கு மேலே வானமளவிற்கு ஓங்கி வளர்ந்திருக்கின்றன. மலைகள் அடர்ச்சியாய் இல்லாத மாகாணங்களில் சோளம் பயிரிடப்படுகின்றது: ஆகிலும், அவைகளின் மிகுதியான பங்கு மேய்ச்சலுக்கேயல்லாமல், வேளாண்மை செய்வதற்குத் தகுந்த நிலமல்ல. நாட்டுப்புறத்துக் குடிகளுடைய முக்கியமான தொ

ழில் ஆடு மாடு மேய்ப்பதாம். அவர்கள் வேனிற்காலத்தில் தங்கள் மந்தைகளை மலைகளின் உயரமான பகுதிகளுக்கு நடத்திப்போய், அங்கே மேய்த்து, மழைக்காலம் வரும் பொழுது, அடிவாரத்திற்கு அவைகளை நடத்திவந்து, அங்கே மேய்ப்பார்கள்.

அத்தேசத்தார் ஆடுமாடுகளை அதிகமாய் வளர்ப்பார்கள்; அவைகளின் பாலில் வெண்ணெய் எடுத்தும், பாலடைகட்டி செய்தும் விற்பார்கள். அங்கே வெட்டுமரம், சிறப்புள்ள வர்னக்கல், படிகம், உப்பு முதலியவைகள் அதிகமாய் உண்டு. மலைச்சரிவின் ஒதுக்கிடங்களிலே திராட்சக்கொடி முயற்சியாகச் செய்கைபண்ணப்படுகின்றது. திராட்சப்பழத்தில் மதுரமான பானம் உண்டாக்கப்படுகின்றது. விசேஷமாய் ஜெனேவ் முதலிய நகரங்களில் பல வகை வேலைகள் நுட்பமாகவும் திறமாகவும் செய்யப்படுகின்றன. அங்கே செய்யப்படுகின்ற கடிகாரங்கள், மூக்குக் கண்ணாடிகள் முதலான பல வகைக் கருவிகளை, வியாபாரிகள் பிற தேசங்களிற் கொண்டுபோய் விற்பார்கள். அங்குள்ள மலைவாசிகளான ஏழை இடையர் மரக் கட்டைகளில் விதம்விதமான சிறந்த ரூபங்களைத் தங்கள் சிறு கத்திகளால் வெட்டி, கொத்தி, மெருகிட்டு, பிரயாணிகளுக்குப் பணத்துக்கு விற்பார்கள். அங்கே அதிகமாயிருக்கிற மாட்சிமையான காட்சிகளைப் பார்க்கும்படியாகவும், இற்றலி தேசத்துக்குப் போகும்படியாகவும், மறுதேசத்தார்கள் அனேகர் இடைக்கிடையே போவது வழக்கம். அங்குள்ள நகரங்கள் வருஷந்தோறும் பல மாசகாலவரையில் தேகத்திற்குச் சவுக்கியமுள்ளவைகளாய் இருப்பதினால், பிற தேசங்களிலிருந்து வெகு பெயர் அங்கே போய், வாசம் பண்ணுவார்கள். நோயாளிகளும் சவுக்கியமில்லாதவர்களும் அத்தேசத்தில் எங்கும் இருக்கின்ற ஔஷதத்தன்

மையான நீரூற்றுக்களின் இடங்களுக்குப் போய், ஸ்நாந பானம்பண்ணி, சொஸ்தம் அடையத் தேடுவார்கள். சில இடங்களில் கல்லூற்றிலிருந்து தண்ணீரும், சில இடங்களில் வெந்நீரும் சுரந்துவரும்- அந்த நீரிலே சில நிரச வஸ்துகள் சேர்ந்திருப்பதினால், அது வியாதிகளைப் பரிகரிக்கும் தன்மையுள்ளதாயிருக்கின்றது

அத்தேசத்திலே பிரயாணம் பண்ணுவது மிகவும் எளிதும் சவுக்கியமுமாயிருக்கும். அங்குள்ள மடுக்களில் அனேக புகைப் படவுகள் அந்தந்தப் பெரிய நகரங்களுக்குப் போக்கு வரவாயிருக்கின்றன. இடத்துக்கு இடம் அதிக வசதியான சத்திரங்கள் உண்டு: ஆகிலும், அல்ப்ஸ் மலைகளில் அளவிற்கு அதிகமான குளிரும், ஆழமான உறைந்த பனியும், புயலும், செங்குத்தும் இருக்கிறதினால், அதைத் தாண்டிச் செல்வது பல முறையும் மிகுந்த அபாயமாய் முடியும். ஸேண்ட் பெர்நாட் என்னும் மலையில் இற்றலிதேசத்திற்குப் போவதற்கு ஒரு வசதியான பாதை இருக்கின்றது. அதின்மேலுள்ள மற்றெல்லா வீடுகளிலும் அதிக உயர்ந்ததாக ஒரு சன்னியாசி மடம் கட்டப்பட்டிருக்கின்றது. அவ்வளவு உயர்ந்த வீடு ஐரோப்பா தேசத்தில் மற்றெவ்விடத்திலும் இல்லை. அந்த மடம் வெப்பமான வேனிற்காலத்திலும் பனியால் மூடப்பட்டிருக்கின்ற உயர்ந்த மலைச்சிகரத்தை அடுத்திருக்கின்றது. அதில் வாசமாயிருக்கிற புண்ணிய ஆத்துமாக்களாகிய சன்னியாசிகள் பனிக்குளிரால் விறைத்து, அன்னம் ஆதரவில்லாமல், வழி தப்பி, அந்தரித்து, அவ்விடத்திற்குச் செல்லும் ஏழைப் பிரயாணிகளுக்குப் பசி தீரப் போசனமும், விறைப்புத் தீர நெருப்பும் கொடுத்து, வெகு தர்மசகாயம் பண்ணுகிறார்கள். அதுவே அவர்கள் அங்கிருக்கும் நோக்கமாம். அவர்கள் ஒருவகை உயர்ந்த சா

தியான நாய்களை வளர்க்கிறார்கள்; அவைகள் அதிக கூர்மையும் விவேகமுமுள்ளவைகள்; அவைகளுடைய கழுத்திலே ஒரு புட்டி திராட்ச பானமும், கோதுமை அப்பத்துண்டும் கட்டிவிடுவார்கள்; அவைகள் அங்கிங்கு ஓடிப், பனியில் முழுகி விறைத்துத் திக்கற்றுக் கிடக்கும் மனுஷரைத் தேடி, அவர்களை மூடியிருக்கும் உறைந்த பனியைத் தங்கள் கால்நகத்தால் பறித்து, அவர்களை மடத்திற்கு நடத்திக் கொண்டுபோய்ச் சேர்க்கும்; சிறு பிள்ளைகளைக் கண்டால், அவர்களைத் தங்கள் முதுகின்மேல் ஏற்றி, மடத்திற் கொண்டுபோய் விடுவதும் உண்டு. பனியில் முழுகிய மனுஷர் எழுந்திருக்கக்கூடாதிருப்பாரானால், அந்த நாய்கள் தங்கள் எசமான்கள் இடத்திற்கு ஓடி, அதைப்பற்றி எப்படியோ அவர்களுக்குக் குறிப்பாய்த் தெரிவிக்கும்; உடனே அவர்கள் அந்த இடத்திற்குச் சென்று, அவர்களை எழுப்பி அழைத்துப்போவார்கள்: இப்படி வருஷந்தோறும் அவர்கள் கையால் உயிர்பிழைக்கும் மனுஷர் அனேகர். அத்தேசத்திலே வெயில் ஏற ஏற, கட்டிப்பனியும், உறைந்த பனியும் உருகும்; அந்த வேளையில் மலைச் சிகரத்திலும் சரிவிலுமுள்ள கட்டிப்பனி பிரமாண்டமான கண்டங்களாக வெடித்து, சடுதியிலே வேகமாய் உருண்டு, விசையாய்க் கீழே விழும்பொழுது, எதிரிலுள்ள வீடுகள், தோட்டங்கள், முழுக்கிராமங்கள் இவையெல்லாம் பாழாய்ப்போவதும், அங்குள்ள பிராணிகள் அனைத்தும் அபாயப்படுவதும் அடிக்கடி வழக்கம். முன் ஒருபொழுது மிகவும் அபூர்வமான பருமனுள்ள பனிக்கண்டம் ஒன்று மலைச் சிகரத்தினின்று உருண்டு, கீழிருந்த விசாலமான பள்ள நிலத்தில் விழுந்து, அதை முழுவதும் மூடிற்று. அதின் வீழ்ச்சியால் அந்தப் பள்ளநிலத்திலுள்ள கிராமங்கள் அனைத்தும் நொடிக்குள்ளே சேதமாய்ப்போயின. அவ்வண்ணமாய் இடைக்கிடையே விழும்

கட்டிகள் அங்கங்கே திட்டுகளாய்க் கிடக்கும். மேலும், மடுக்களும் ஆறுகளும் வரம்பு கடந்து பெருகுவதினாலும், மலையருவிப் பாய்ச்சலினாலும் அதிக சேதம் நேரிடுவதும் உண்டு: ஆகிலும், அப்படிச் சேதம் வராமல் வெள்ளப்பெருக்கைத் தடுக்கும்படிக்கு அனேகம் கட்டடங்கள் ஏற்பட்டிருக்கின்றன; இன்னும் அந்த வேலைகள் நடக்கின்றன. அங்கே நல்ல சாலைகளும் கால்வாய்களும் உண்டு. அங்குள்ள நகரங்களில் பல புஸ்தகசாலைகளும், வித்தியாசாலைகளும், வைத்தியசாலைகளும் இருக்கின்றன. அத்தேசத்தின் சனங்கள் தங்களுக்கு யுக்தமாய்த் தோன்றிய கொள்கைகளை அனுசரிக்கவும், பிறருக்கு உணர்த்தவும் இடம் பெற்றிருக்கிறார்கள்.

---

## ஜெர்மானியதேசம்

ஐரோப்பாக்கண்டத்தில் இருக்கிற ஜெர்மானியா என்னும் தேசத்திற்கு வடக்கு எல்லைகள், தென்மார்க்கும் வால்த்திக் கடலும்; கிழக்கு எல்லைகள் ருஷியாவும் ஹங்கெரியும்; தெற்கு எல்லைகள் ஹங்கெரியும் ஸுவிற்ஸர்லண்டும்; மேற்கு எல்லைகள் பிரான்ஸும் நெதர்லண்ட்ஸுமாம். ஜெர்மானியாவில் அனேக சுவாதீன இராச்சியப் பகுதிகள் இருக்கின்றன. அவைகளின் குடிகள் அனைவரும் சம்பந்தப்பட்டு, ஒருவருக்கொருவர் விரோதம் செய்யாதிருக்கும்படி உறுதிபண்ணியிருக்கிறார்கள். ஏதாவது பொதுவான நய நஷ்டங்களைக் குறித்து ஆலோசிக்கும்படி அங்குள்ள ஜனப்பிரதிநிதிகள் மகாசபை கூடுவது வழக்கம்.

பூர்வத்திலே ஜெர்மானியதேசம் ஓரே சாதியிலுள்ள பல வமிசத்தாராற் குடியேறப்பட்டது. அந்த வமிசத்

தார்கள் ஆதியிலே நிலத்தைப் பயிரிட்டு, நேர்த்தியான ந கரங்களைக் கட்டி, ஒரே இடத்திலே வாசம்பண்ணமல், தங் கள்ஆடுமாடுகளை அங்கும் இங்கும் நடத்திக்கொண்டு, விஸ் தாரமான காடுகளிற் சென்று, புல்லும் தண்ணீரும் கண்ட இடத்திலே தங்கி, வேட்டையாடுவதினுற் சீவனம்பண்ணி வந்தார்கள். அவர்கள் உரோமை இராச்சியத்தாரால் ஒரு பொழுதும் ஜெயிக்கப்பட்டவர்களல்ல. அவர்கள் வரவ ரத் தொகையிலும் பலத்திலும் அதிகரித்து, உரோமை இ ராச்சியத்தின் மாகாணங்களில் எங்கும் கூட்டம் கூட்ட மாய்ப் பரந்து, அங்கிளோ, பிராஞ்சிய, ஸ்பானிய தேசங் களிலும், இற்றலிதேசத்திலும் வாசமாயிருந்து, சுயாதீனம் பெற்று வாழ்ந்தார்கள். அப்படிப் பிற தேசங்களுக்குப் போகாமல் ஜெர்மானிய தேசத்திலே தங்கியிருந்தவர்க ளோ, அப்புறம் நெடுநாள்வரையில் நாடோடிகளாகத் திரி ந்து, பின்பு அ-ம் நூற்ருண்டில் கூட்டம் கூட்டமாய்ச் சே ர்ந்து, பல நகரங்களைக் கட்டி வாசம் பண்ணினுர்கள். அ ப்பொழுது அவர்கள் வமிசத்துக்கு ஒருவராகப் பல பெய ர்களைத் தெரிந்து, அவர்களைப் பிரதானிகளாய் ஏற்படுத்தி, அந்தப் பிரதானிகளுடைய அதிகாரத்துக்கு உட்பட்டி ருந்தார்கள். அப்படி இருந்த காலத்தில் அவர்கள் ஒரு வருக்கொருவர் முற்பட நினைத்து, ஓயாமல் எப்பொழு தும் சண்டைபண்ணிக்கொண்டு வந்தார்கள். சண்டையி டுவதும் வேட்டையாடுவதுமே அவர்களுக்கு முக்கியமான தொழில்களாயிருந்தன. சீர்திருந்திய ஜனங்கள் செய்கிற தொழில்களைக் குறித்தாவது, நல்லொழுக்கத்தைக் குறித் தாவது அவர்கள் கனவிலும் நினைத்தவர்களல்ல.

ஏ-ம் நூற்ருண்டின் தொடக்கத்திலே மகிமையுள்ள பிரா ஞ்சிய அரசனுகிய ஷார்லிமான் என்பவன் ஒருவாறு ஜெர் மானிய தேசமுழுவதையும் ஜெயித்து, அதைப் பிரான்ஸ்

தேசத்துடன் சேர்த்து, ஏகாதிபதியாய் அரசாண்டான். அவன் மரணமடைந்தபின் அங்குள்ள பிரதானிகள், இராஜ குடும்பத்தைச் சேர்ந்த பிரபுகள் அனைவரும் ஒரு மனப்பட்டு, தங்களுக்குச் சக்கரவர்த்தி ஒருவனைத் தெரிந்து ஏற்படுத்தினார்கள். ஆகிலும், அப்புறம் அந்த இரண்டு தேசங்களும் ஒன்றோடொன்று சம்பந்தமில்லாமற் பிரிந்துபோயின. பின்பு சுயாதீன சக்கரவர்த்திகள் அப்போதப்போது தெரிந்து ஏற்படுத்தப்பட்டார்கள். அவர்கள் பெயரளவிற் சக்கரவர்த்திகளாயினும், அதிகாரமும் செல்வாக்கும் இல்லாதவர்களாய் இருந்தார்கள். அங்கிருந்த அனேக பிரபுகளும், பிரதானிகளும், அந்தந்தப் பிரதான பட்டணத்தாரும் சுயாதீனம் பெற்று, சக்கரவர்த்திக்கு மனப்பூர்வமாய் அடங்காமல், அடக்கமுள்ளவர்கள் போலக் காண்பித்தார்கள். மேலும், அவர்கள் அவசியமானபோது தங்கள் சக்கரவர்த்திக்கு இராணுவத்துக்குரிய ஊழியம் ஒன்று செய்வதே தங்கள் மேற் பொறுத்த கடமையென்று எண்ணிக்கொண்டார்கள். அந்தப் பிரதானிகள் ஒருவரோடொருவர் ஓயாமற் பிணக்காயிருந்தார்கள்; அவர்களுக்குள் உண்டான சண்டைகளும், விரோதங்களும், பலவிதக் குழப்பங்களும் தேசத்தாருடைய ஒழுக்கத்தைக் குலைத்து, மனப்பாக்கியத்தையும் க்ஷேமத்தையும் விலக்கி, நாகரிக விர்த்தியைத் தடுத்தன. முன்பு பிரபுகள், பிரதானிகள், சுயாதீனத்துக்குரிய நகரங்களின் ஜனப் பிரதி நிதிகள் ஆகிய யாவரும் கூட்டங்கூடி, தீர்க்காலோசனை செய்து, தகுதியான சக்கரவர்த்திகளைத் தெரிந்து ஏற்படுத்துவார்கள். பிற்பாடு அங்கிருந்த பிரபுகளில் மேலான அதிகாரமுள்ள ஏழு பெயர்கள் சக்கரவர்த்திகளைத் தெரிந்து ஏற்படுத்தும் உரிமையை வரவரத் தங்கள் வசப்படுத்திக்கொண்டதினால், அவர்களுக்குத் "தெரிந்தேற்படுத்துவோர்" என்று பெயர் உண்டாயிற்று.

௧௩ - ம் நூற்றாண்டிலே சுயாதீனராயிருந்த அநேக பிரதான பட்டணத்தார்கள் மனது ஒத்து, இராச்சிய சம்பந்த உடம்படிக்கை ஒன்று செய்து, அந்த உடம்படிக்கைக்கு "ஹென்ஷியாற்றிக் லீக்" என்று பெயரிட்டார்கள். ௧௩ - ம், ௧௪ - ம் நூற்றாண்டுகளில் அந்தப் பட்டணத்தார்கள் பெருமையிலும் வல்லமையிலும் அதிகரித்து, வட ஐரோப்பாவின் வர்த்தகத்தை முழுமையும் தங்களுக்குள் அடக்கிக்கொண்டார்கள். மேற்சொல்லிய சம்பந்த உடம்படிக்கையிற் சேர்ந்த ௬௦, ௭௦ நகரங்களுக்குள்ளே தலைமையானவைகள் ஹெம்பெர்க், லூபெக் என்பவைகளாம். ஆகிலும், மறு தேசத்தார்கள் வர்த்தகத்தின் மேன்மையைக் கண்டறிந்து, அதைக் கைபிட்டுக்கொண்டபொழுது, அந்த நகரங்களின் வல்லமையும் பெருமையும் ஒடுங்கிப்போயின. அங்கிளோ, உலாந்த தேசங்கள் வர்த்தக விஷயத்தில் மேற்சொல்லிய உடம்படிக்கையிலே சம்பந்தப்பட்ட நகரங்களுக்குச் சமானமுள்ளவைகளாகி, அப்புறம் வரவர அவைகளுக்கு மேலாயின. எப்படியிருந்தும், மேன் என்னும் ஆற்றங்கரையிலே கட்டப்பட்டிருக்கின்ற பிராங்க்போர்ட், லூபெக், ஹெம்பெர்க், பிரீமென் என்னும் நாலு நகரங்கள் இன்றளவும் முன்போலவே சுயாதீனமும் * முக்கியமுமுள்ளவைகளாயிருந்து, ஜெர்மானிய இராச்சியசம்பந்த உடம்படிக்கையிற் சேர்ந்திருக்கின்றன. அந்த உடம்படிக்கை நாகரிக விர்த்திக்கு அதிக உதவியாகவும், குடிகளுக்குள்ளே சமாதானத்தையும், அதினால் உண்டாகும் சுக அனுபவங்களையும் விர்த்தியாக்குவதற்கு உபயோகமாகவும் இருந்தது.

அங்கிளோதேசத்தின் குருக்கள்மாரில் ஒருவராகிய வொ

* மேற்சொல்லிய சுயாதீன நகரங்களிலே குடியரசாட்சி நடந்துவருகின்றது.

னிபேஸ் என்பவர் ௲-ம் நூற்ருண்டில் ஜெர்மானியதேசத்திற்குப் போய், அங்குள்ள இராச்சியப்பகுதிகளிலே கிறிஸ்துமார்க்க உபதேசங்களைப் பிரசங்கம்பண்ணினர். ஆகிலும், அக்காலத்திலே அங்கிருந்தவர்களிற் சில கீழ்ப்படியில்லாத துஷ்ட ஜனங்கள், அந்தக் குருவானவர் தங்களுக்கு அறிவித்த மேலான உபதேசங்களைத் துரும்பளவும் மதியாமல், அவரை மிகவும் துன்பப்படுத்தினர்கள். அவரோ, தமக்கு அவர்களால் நேரிட்ட பிராண சங்கடங்களை எவ்வளவும் பாராட்டிப் பின்வாங்கிப்போகவில்லை. தாம் அவர்களுக்கு அறிவித்த சத்திய உபதேசங்களின் மூலமாய்ப் பூர்வத்திலே அவர்கள் அனுசரித்த கொடிய வீண்பத்திகளும், துன்மார்க்கங்களும் வரவர ஒழிந்துபோக, அவர்கள் யாவரும் ஏகமாய்ச் சுவிசேஷமார்க்கத்தை அனுசரித்துக்கொண்டதினல், அவர் அதுவே தமது பிரயாசத்திற்குத் தகுதியான கைம்மாறென்பதாக நினைத்து, களிகூர்ந்தார். கடைசியில் அங்கிருந்த குணப்படாத ஜனங்களிற் சிலர் அந்தக் குருவானவரைக் கொலைசெய்தார்கள். அவர் தாம் பிரசங்கித்த சத்திய சுவிசேஷ மார்க்கத்திற்கு இரத்தசாட்சியாக இறந்துபோனர்.

௧௬-ம் நூற்ருண்டிலே ஜெர்மானிய இராச்சியம் அதிக பெருமையும் மகிமையும் அடைந்திருந்தது. ஆஸ்த்திரிய இராசவமிசத்திற் பிறந்த விவேகமும் வல்லமையுமுடைய சக்கரவர்த்தியாகிய ரு-ம் கரோலஸ் என்பவர் அக்காலத்திலே ஜெர்மானியதேசத்தை அரசாண்டார். அப்பொழுது அந்த இராச்சியத்துக்கு உண்டாயிருந்த மகிமைக்கும் வல்லமைக்கும் சமானமாக முன்னும் இருந்ததில்லை, பின்னும் இல்லை. மேற்சொல்லிய சக்கரவர்த்தி ஜெர்மானியதேசத்துக்கேயல்லாமல், ஸ்பானியா, நெதர்லண்ட்ஸ் முதலிய இராச்சியங்களுக்கும் அரசனுயிருந்தார். அக்கா

லத்திலே அவரைப் பார்க்கிலும் அதிக மாட்சிமையுடைய அரசன் ஐரோப்பாதேசத்தில் இருக்கவில்லை. அப்பொழுது துருக்கியதேசத்திலே மிகுந்த கீர்த்திபெற்ற சுல்த்தானுகிய ஸொலிமான் என்பவன் அரசாண்டான். அவனுடைய அரசாட்சியின் காலத்தில், துருக்கிய சாதியார் அதிக வல்லமையும் பயங்கரமுமுள்ளவர்களாய் இருந்தார்கள். ஆதலால், ஜெர்மானியர் அந்தத் துருக்கியர் கையில் அகப்படாமல், தங்களைக் காக்கும்படியாக, கரோலஸ் என்னும் சக்கரவர்த்தியைத் தங்களுக்கு அரசனுக ஏற்படுத்தினுர்கள். கரோலஸ் சக்கரவர்த்தியானவர் அவர்களுக்கு நேரிட்டிருந்த அபாயத்தை விலக்கினதுமன்றி, பல இராசாக்களுக்கும், விசேஷமாய்ப் பிராஞ்சிய அரசனுக்கும் விரோதமாக யுத்தம்செய்து ஜெயம் அடைந்தார். மேலும் அவர் அரசாண்ட இராச்சியத்திலேதான் "றெபர்மேஷன்" என்னும் சமயத்திருத்தம் உண்டாயிற்று. அது உலகத்துக்கு மிகவும் விசேஷமான நன்மையாய் முடிந்தது. அதிலும் அதிக விசேஷமானது சுவிசேஷமார்க்கம் ஒன்றே தவிர, வேறில்லை. ஆதியிலே கிறிஸ்துநாதருடைய ஊழியகாரராகிய அப்போஸ்தலர்கள் சுவிசேஷமார்க்கத்தைச் சுத்தமும் உண்மையுமானதாகப் போதித்தார்கள். அப்புறம் ச-ம், ரு-ம் நூற்றுண்டுகளில் மனுஷருடைய சுபாபமான உள்ளத்தில் உண்டாகிற துர்யோசனைகளினுலும், ஜனங்கள் வேதத்தை வாசிக்கக்கூடாதென்று குருக்கள்மாராலே தடுக்கப்பட்டதினுலும், அந்தச் சுவிசேஷமார்க்கத்தின் சுத்தமும் உண்மையும் மறைந்துபோயின. கரு-ம் நூற்றுண்டுவரையில் வேத புஸ்தகத்திலே நாளாவர்த்தியிற் சேர்க்கப்பட்ட விபரீதங்கள் அதிகரித்ததினுலே, உண்மையான வேதப்பொருளைக் கண்டறிவது அரிதாயிருந்தது. அப்பொழுது ஸுவிற்ஸர்லண்ட் தேசத்தி

ளுள்ள மேட்டு நிலங்களிலும், பள்ள நிலங்களிலும் குடியிருந்த ஏழைச் சனங்கள் மாத்திரம் உண்மையான வேதப் பொருளை அறிந்து, மெய் விசுவாசிகளாயிருந்தார்கள். ௧௬-ம் நூற்றாண்டில் ௫-ம் கரோலஸ் என்பவர் அரசாண்ட காலத்திலோ, ஐரோப்பாவிலுள்ள கிறிஸ்து சபையார் சத்தியமென்று எண்ணி அனுசரித்துவந்த பல தப்புகளை அவர்களுக்குப் பகுத்துக்காட்டவும், சுவிசேஷ மார்க்கத்தின் உண்மையான உபதேசங்களைத் தெரிவிக்கவும், லூத்தரென்னும் சந்நியாசி தேவனால் ஏவப்பட்டார். அவர் வேதாகமத்தை ஜெர்மானிய பாஷையிலே மொழிபெயர்த்து, அச்சிடுவித்து, இஷ்டமுள்ளவர்கள் வாசிக்கும்படி பிரசித்தம்பண்ணினார். அச்சடிக்கும் முறை அதற்குச் சில காலத்திற்கு முன்பு நூதனமாய் அறியலாயிற்று. அப்படியே பிரசித்தம்பண்ணப்பட்ட வேதபுஸ்தகத்தை வாசித்தவர்கள், அதிலே தெளியக் காட்டியிருந்த சத்தியங்களுக்கும், குருக்கள்மார் முன்பு சொல்லிக்கொடுத்த உபதேசங்களுக்கும் வெகு பேதம் உண்டாயிருக்கிறதென்று கண்டு, உரோமைச் சபைக்குத் தலைவராகிய பாப்புவும், அவரால் ஏற்படுத்தப்பட்ட குருக்கள்மாரும், தங்கள் மேல் ஏற்றிய பாரத்தைத் தள்ளி, விடுதலை பெற்றார்கள். பிரித்தானியர், உலாந்தர், ஸுவிற்ஷியர், சுவேதேனியர், நார்வேஜியர், தானியர் என்னும் தேசத்தார்களும் சமயாசாரத் திருத்தம் அடைந்தவர்களாய், குருக்கள்மாருடைய விபரீதங்களையும் தப்புப்போதனைகளையும் தள்ளி, சுவிசேஷமார்க்கத்தை மனப்பூருவமாய் அங்கீகரித்தார்கள். அதுமுதல் அவர்கள் தங்களுக்குக் கிடைத்த சுவிசேஷ மார்க்கம் எங்கும் பரவும்படி தகுதியான முயற்சிகளைப் பண்ணிவருகிறார்கள்: மேலும் பிராஞ்சிய, ஸ்பானிய, இற்றலிய, போலாந்திய தேசத்தார்களும் சுத்தமும் சத்தியமுமான சுவிசேஷ

மார்க்கத்தை ஒப்புக்கொண்டு அனுசரித்தார்கள். அதினிமித்தம் அவர்களுக்குக் கொடிய துன்பங்களும் அபாயங்களும் நேரிட்டன; அவர்கள் அந்த உபத்திரவங்களைச் சகித்துக்கொள்ளத் திராணியில்லாதவர்களாய், தங்கள் பழைய கோட்பாடுகளையே திரும்பவும் கைக்கொண்டார்கள்; ஆனதினால் சமயக் கொள்கைகளை ஆராயவும், உண்மை இன்னதென்று கண்டு இஷ்டத்தின்படி அதைப் பற்றிக்கொள்ளவும் தக்க மன ஊக்கம் அவர்களுக்கு இல்லாமற் போயிற்று. அந்த ஊக்கம் அவர்களுக்குள் அப்புறம் ஒரு பொழுதும் உண்டாகவில்லை. சத்தியவேதத்தை ஒப்புக்கொண்டு, அநுசரித்து, அதை எவர்களும் தாராளமாய் வாசிக்கும்படி இடங்கொடுத்திருந்த தேசத்தார்களோ, அதிகாரத்திலும், சுயாதீனத்திலும், கல்வியிலும், கல்வியினாலும் சத்திய மார்க்கத்தினாலும் உண்டாகிற சகல சுகப்பேறுகளிலும் வரவர விர்த்தி அடைந்தார்கள். விசேஷமாய் அங்கிலேயர் அதிக செல்வமும் செழிப்பும் பெற்றார்கள். விஸ்தாரமான உரோமை இராச்சியத்தின் மகிமை ஒழிந்த பின்பு, அங்கிலோ துரைத்தனத்தாரைப்போல் அதிகாரம் பெற்றவர்களும், பிற தேசங்களை அடக்கி ஆண்டு பெருமை அடைந்தவர்களும் வேறில்லை. முன் ஒரு காலத்தில் ஸ்பானிய இராச்சியத்தார் அதிக வலிமை பெற்று வெற்றி சிறந்திருந்தும், பின்பு அவர்கள் நாளுச்குநாள் ஆண்மை குலைந்து, ஐசுவரியம் இழந்து, அறிவு அழிந்து தாழ்ந்தவர்களானார்கள்.

ரு-ம் கரோலஸ் என்னும் சக்கரவர்த்தி மரணமடைந்த பின்பு, அவன் சகோதரனாகிய பெர்டினாண்ட் என்பவன் பட்டத்திற்கு வந்தான்; அவன் ஹங்கெரி, பொகிமியா இராச்சியங்களுக்கும் அரசனாயிருந்தான். அதின்பின் ஆஸ்ற்றிரிய இராச வமிசத்தார் அந்த இராச்சியத்தை ஆண்டுவந்தா

ர்கள். அப்புறம் க௮௦௬-ம் ஆண்டில் "ஜெர்மானிய சக்கரவர்த்தி" என்கிற பட்டப்பெயர் "ஆஸ்த்திரிய சக்கரவர்த்தி" என்பதாக மாற்றப்பட்டது. ஜெர்மானிய துரைத்தனத்துக்குட்பட்ட மறு இராச்சியங்களெல்லாம் ஜெர்மானிய துரைத்தன சம்பந்த உடம்படிக்கையிற் சேர்ந்திருந்தும், சுயாதீனம் பெற்றுக்கொண்டன. ஜெர்மானிய இராச்சியத்தில் நெடுங்காலமளவும் நடந்த பயங்கரமான யுத்தங்களினிமித்தம் கல்வி, சமாதானத்திற்கு உபயோகமான தொழில்கள், நாகரிகம் முதலானவைகள் மிகவும் குறைவுபட்டுப்போயின. முக்கியமாய் க௬க௮-ம் வருஷம் முதல், க௬ச௮-ம் வருஷம் வரையில், முப்பது வருஷகாலம் ஜெர்மானிய தேசத்திலே அதிக குரூரமான யுத்தம் ஒன்று நடந்தது; அந்த யுத்தத்திலே ஐரோப்பிய துரைத்தனத்தார் யாவரும் அதிக ஊக்கமாய் உடன்பட்டிருந்தார்கள்; அந்த யுத்தத்தினால் அங்குள்ள நாடுநகரங்கள் பாழாய்ப் போயின; வர்த்தகமும் வேளாண்மையும் தடைப்பட்டன; உயிருக்கும் பொருளுக்கும் அபாயம் நேரிட்டிருந்தது. அதின்பின்பு, கஎசக-ம் ஆண்டு முதல், கஎச௮-ம் ஆண்டு வரையில் வேறும் ஒரு யுத்தம் அந்த இராச்சியத்திலே நடந்தது; அதினாலும் மேற்சொல்லியபடி அநேக தீமைகள் விளைந்தன. அதின்மேல், கொஞ்சக் காலமளவும் சமாதானம் உண்டாயிற்று. அங்கே அரசாண்ட அதிபதிகள் விவேகிகளும் பரோபகாரிகளுமாயிருந்தார்கள்; தேசம் வரவரச் செழிப்பு அடைந்தது; வர்த்தகம், வேளாண்மை, நெசவு முதலான கைத்தொழில்கள், பலவித முயற்சிகள், கல்விப்பயிற்சி ஆகிய இந்த விஷயங்கள் எல்லாம் திரும்பவும் தலையெடுத்தன. ஆகிலும் சென்ற நூற்றாண்டின் முடிவிலும், இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலும் ஜெர்மானிய இராச்சியத்தார் தங்களுக்குள்ளும் புறத்தேசத்தாருடனும் யுத்தம் செய்ததினால், அவர்

கள் மிகவும் அபாயப்பட்டார்கள். ஜெர்மானிய இராச்சியத்தைச் சார்ந்த அந்தந்த மாகாணங்களின் குடிகள் தங்கள் துரைத்தனத்தாருக்கு விரோதமாய்க் கலகஞ்செய்யும்படி, அதிக மாட்சிமை பெற்றிருந்த பிராஞ்சிய சக்கரவர்த்தியாகிய நப்போலியன் என்பவன் அவர்களைத் தூண்டிவிட்டு, அப்புறம் அவர்களுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப்போய், அவர்களைச் சண்டையால் வென்று, அவர்கள் மாகாணங்களைக் கட்டி, ஒரு குடைக்கீழ் அரசாண்டான். அதைக் கண்டு, ஐரோப்பிய துரைத்தனத்தார் எல்லாரும் ஒருமனப்பட்டு, அந்தக் கொடிய அரசனுடன் எதிர்ந்து போர்செய்து, அவனைக் கீழ்ப்படுத்திக் காவலில் வைத்தார்கள். அதினால் ௧௮௧௫-ம் ஆண்டிலே ஐரோப்பாவில் எங்கும் சமாதானம் உண்டாயிற்று. அதுமுதல் இதுவரையில் ஜெர்மானிய இராச்சியமுழுவதும் சமாதானத்திற்குரிய தொழில்களும் சீர்த்திருத்தங்களும் விர்த்தியடைந்துவருகின்றன.

பொதுவாய் ஜெர்மானிய சாதியார் ஒழுக்கம், முயற்சி, சன்மார்க்கம், தெய்வபக்தி முதலிய இலட்சணங்களை உடையவர்களாம்; அவர்கள் சகல விஷயங்களிலும் சுயாதீனராய் இருக்கும்படி கருத்துக்கொண்டிருகிறார்கள்; ஏழைகளானாலும், செல்வரானாலும், யாவரும் சுயாதீனராகவே இருக்கிறார்கள்: அங்குள்ள அனேக இராச்சியப் பகுதிகளிலே துரைத்தனம் நீதித்தவறில்லாமல் நடந்துவருகின்றது; குடிகள் தங்கள் இஷ்டப்படியே எவ்வகைச் சமயங்களையும் அனுசரிக்க இடம்பெற்றிருக்கிறார்கள்; அங்குள்ள பிரபுகள் சாதாரண ஜனங்களுடனே கலந்து இஷ்டம் பாராட்டியும், தங்கள் குலாசாரத்துக்கு இழிவு வராமற்காத்து நடக்கிறார்கள். அங்கங்கே நியாயஸ்தலங்கள் அனேகம் இருப்பதினால், உத்தியோகஸ்தரும் அனேகர் உண்டு. அவர்கள் எல்லாரும் கல்வித்தெளிவும், பெருந்தன்மையும்,

நம்பப்படத்தக்க யோக்கியமும் உடையவர்களாய் ஒருமணப்பட்டு வாழ்ந்திருக்கிறார்கள். மறு தேசத்தாரைப் பார்க்கிலும் ஜெர்மானியர் கல்வியிலே தேர்ந்தவர்களாயிருக்கிறதினால், அவர்கள் ஒருவரோடொருவர் மனத்திர்ப்திகரமான ஐக்கத்தை அனுபவித்துவருகிறார்கள். தகுதியான பருவமுள்ள பிள்ளைகள் எல்லாரும் பாடசாலைக்குப் போய்ப் படிக்கவேண்டுமென்பதாகத் துரைத்தனத்தார் கட்டளைபண்ணியிருக்கிறார்கள். சாதாரண ஜனங்களின் வகுப்பிலுள்ள பெண்கள் மறு தேசங்களிலுள்ள உயர் குலத்துப் பெண்களைப் போல அத்தனை நாகரிகம் இல்லாதவர்களாய் இருந்தும், கல்வி விஷயத்திலே, அவர்களுக்குச் சமானமானவர்களாய் இருக்கிறார்கள். ஜெர்மானிய சாதியாருக்குள்ளே கீழ்த்தரமாய் இருக்கிற ஜனங்கள் யாவரும் கீதவாத்தியத்திலே தேர்ச்சியுள்ளவர்கள்; அது அவர்களுக்கு விசேஷமான ஒரு சிறப்பு. ஜெர்மானியசாதியார் குடும்ப ஆசாரமும் ஐக்கமுமுள்ளவர்களாய்ச் சுற்றத்தைத் தழுவி வாழ்வார்கள்; ஒருவரோடொருவர் உல்லாசமாய்க் கூடிக் கொண்டாடுவார்கள். அனேக பட்டணங்களில் வருஷத்துக்கு ஒருமுறை கூடும் பெரிய சந்தைகளிலே, ஜனங்கள் திரளாகச் சேர்ந்து, விற்பன கொள்வன செய்தும், ஆடிப் பாடியும், அனேக விநோதங்களைச் செய்தும் வருவார்கள். அத்தேசத்திலுள்ள செல்வர், சுகமில்லாதவர்களுக்குச் சௌக்கியம் தருவதற்கான தன்மையுள்ள நீரூற்றுகள் இருக்கும் இடங்களுக்கு வேனிற்காலங்களிற் போய், அங்கே கொஞ்சக் காலம் தங்கி, ஸ்நாந பானம்பண்ணிச் சுகம்பெற்றுத் திரும்புவார்கள். அனேக பிற தேசத்தார்களும் மேற்சொல்லிய இடங்களின் சௌக்கியத்தையும், ஸ்நாந பானத்தையும், சனசங்கத்தையும் விரும்பிப் போவது வழக்கம். ஜெர்மானியர் பொதுவாக அனேக

நற்குணங்களை உடையவர்களாயிருந்தும், சூதாட்டம் என்னும் கொடிய தீமையானது அவர்களுக்குள்ளே தலைப்பட்டிருக்கிறதினால், அதுதான் அவர்களுக்குப் பெரிய குறைவாயிருக்கின்றது.

நாட்டுப் புறங்களில் அங்கங்கே அநேக திறமான சர்வ கலாசாலைகள் உண்டு. அவைகளுக்குள் லயிப்ஸிக், பிரோக், கொற்றின்ஜென், வியனா, பெர்லின் என்னும் இடங்களிலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற சாலைகள் முக்கியமானவைகள்; அவைகளில் அநேக மாணாக்கர் படித்துத் தேறுகிறார்கள். ஜெர்மானிய சாதியார் கல்வியிலே திறமுடையவர்களாகத் தொடங்கினது சென்ற நூறு வருஷத்திற்குள்ளாகத்தான். ௧௭௪௮-ம் வருஷத்தில் அவர்களுக்குள்ளே சமாதான உடம்படிக்கை ஒன்று சித்தஞ்செய்யப்பட்டபின்பு, சாஸ்திரம், சரித்திரம், நியாயவிலக்கணம், கவித்துவம் முதலிய உயர்ந்த கல்விகளில் அநேக அருமையான நூல்கள் செய்யப்பட்டன. சித்திரம் எழுதும் வித்தையிலும், கொத்துவேலையிலும் சில பெயர்கள் மிகுந்த தேர்ச்சியுள்ளவர்களென்று கீர்த்திபெற்றார்கள். சங்கீதத் திறத்தில் அவர்களை வெல்லத்தக்கவர்கள் எங்கும் இல்லை. இப்பொழுது உலகத்தில் உபயோகப்பட்டு வருகின்ற வித்தைகள், கருவிகள், தொழில்களில் அநேகம் ஆதியிலே ஜெர்மானியருடைய யுத்திபுத்திகளாற் கண்டறியப்பட்டன. வித்தைகளுக்குள்ளெல்லாம் விசேஷமானதாகிய அச்சடிக்கும் வித்தை ௧௫-ம் நூற்றாண்டிலும், நாழிகை யந்திரம் சற்றேறக்குறைய அந்தக் காலத்திலும், வெடிமருந்து ௧௩௨௦-ம் வருஷத்திலும் முதல்முதல் அவர்களால் அறியப்பட்டன. அவர்கள் யூகித்து உண்டாக்கின வித்தைகளின் பெயர்களைத் தனித்தனி சொன்னால், அவை பெருகும்.

அவர்களுடைய கைத்தொழிலால் ஆகிய வஸ்துக்கள் அ

னேகமும் உத்தமமுமானவைகளாம். அவைகளில் பிரதானமானவைகள் சணல்நூற் புடைவை, பருத்திநூற்புடைவை, பதமிட்ட தோல், பல வகை மட்பாத்திரங்கள், பளிங்கு, பீர் என்னும் பானம் முதலியவைகளே. ஜெர்மானிய இராசிச்யத்திலே வெவ்வேறு இடங்கள் வெவ்வேறு விசேஷித்த வேலைகளாற்சிறந்திருக்கின்றன. ஸாக்ஸனி மாகாணம் அழகிய மட்பாண்டங்களை வனைகிற தொழிலாற் சிறந்தது; அவைகளுக்குள் முதன்மையான ஒரு பாண்டவகைக்கு "டிறெஸ்டென்" என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கின்றது; டிறெஸ்டென் என்பது அந்தமாகாணத்தின் இராஜதானியின் பெயராம்: பொஹீமியா மாகாணம் பளிங்குவேலையால் விசேஷித்தது. அங்குள்ள தொழிலாளிகள் பளிங்குக்கு நன்ருகச் சாயம் கொடுத்து, அதைச் சித்திரமாக வெட்டிச் செப்பனிடுகிருர்கள். ஜெர்மானிதேசத்திற் கைவேலைகள் எப்படியோ, அப்படியே வேளாண்மையும் விர்த்தியாகின்றது. சுதேசத்திலும் பிற தேசங்களிலும் ஜெர்மானியசாதியாருடைய வர்த்தகம் மேன்மேலும் அதிகரிக்கின்றது.

அத்தேசம் அதிக விசாலமுள்ளதாயிருக்கிறதினுல், அங்குண்டாகின்ற வகைவகையான விளைவுகளும் மிகுதியாயிருக்கின்றன. வேனிற்காலத்திலே வெப்பம் சரீர சௌக்கியத்திற்கு அளவாயிருக்கும்; மாரிகாலத்திலோ, குளிர் அதிகம். அங்குள்ள பெரிய ஆறுகள் அனேக முறை கல்லைப்போல் உறைந்துபோவது உண்டு. அத்தேசத்தின் தோற்றம் எங்கும் ஒரே தன்மையாய் இராமல், அங்கங்கே பேதப்பட்டிருக்கின்றது. நடுத்தேசங்களிலும், வடதேசங்களிலும் மலைகள் அனேகம். அங்கே சிறந்த பெருங்காடுகள் உண்டு. அங்கிருந்து வெட்டப்படுகிற மரங்கள் வேலைகளுக்கு உசிதமானவைகளும், உயர்ந்த விலையுள்ளவைகளுமா

யிருக்கின்றன. அங்குள்ள காட்சிகளுக்குள் செழிப்பான பள்ளத்தரைகளும், நன்ருகப் பயிரிடப்பட்ட சம நிலங்களுமே அதிகம் அழகியவைகள். டானியூப், றைன் என்னும் ஆறுகளை அடுத்திருக்கிற பள்ள நிலங்கள் விசேஷமான விதமாகச் சிறந்து செழித்திருக்கின்றன. அந்த மாகாணங்களிலுள்ள குன்றுகள் உயர்ந்தவைகளல்ல. அவைகளின் சரிவிலே திராட்சக்கொடி மிகவும் கருத்தாகவும் முயற்சியாகவும் செய்கைபண்ணப்படுகின்றது. அதின் பழ இரசத்திஞல் உண்டாக்கப்படுகிற விதம் விதமான பானம் அதிக மதுரமானது. ஸ்பானிய இராச்சியத்திலும், பிரான்ஸ்தேசத்திலுமுள்ள சில இடங்களில் உண்டாக்கப்படுகிற முதன்மையான திராட்ச பானமே தவிர, அதற்குமேற்பட்ட பானம் வேறு எங்கும் இல்லை. தானியவகைகள் அதிகமாய் விளைகின்றன. அத்தேசத்தின் சணலும், மரலும் உயர்ந்த தன்மையுள்ளவைகள். அங்குள்ள மலைகளில் உண்டாகும் வஸ்துக்கள் அனேகம். வெள்ளி, செம்பு, தகரம், நிலக்கரி, இரும்பு, இரசம், ஈயம், உப்பு, இவைகளின் சுரங்கங்களும், பலவர்ணக்கல்லும் கற்பலகைகளும் உண்டாகிற நிலங்களும் மிகுந்திருக்கின்றன. வடக்கே ஹார்ட்ஸ்மலையில் இருக்கின்ற இரும்புச் சுரங்கங்களுக்கும், உப்புச்சுரங்கங்களுக்கும் நிகர் இல்லை. ஆதலால், இரும்பு, வெட்டுமரம், தானியங்கள், சணல்நார் முதலிய வியாபாரச் சாமான்கள் அங்கிருந்து பிற தேசங்களுக்கு அனுப்பப்படுகின்றன. அங்குள்ள சில பகுதிகளில் புல் அதிக செழிப்பாய் உண்டாகிறதிஞல், ஆடு மாடுகள் விர்த்தியாகின்றன. முதன்மையான ஆட்டு மயிர் வியாபாரத்துக்காகப் பிற தேசங்களுக்கு அனுப்பப்படும். ஜெர்மானிய தேசத்திலே அனேக பெரிய ஆறுகள் உண்டு. அவைகளுக்குள், டானியூப், றைன், எல்வி, ஓடர், வீசர் முதலியவைகள் முக்கியமானவைகள்; றைனே மிகவும் சிறந்த ஒரு ஆறு; அது ஜெர்

மானிய சாதியாருக்கு எத்தனையோ அருமையாயிருப்பது. அதின் கரையிலே கோப்லான்த்ஸ், கொலோன், மாயான்ஸ் முதலிய முதன்மையான நகரங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. ஜெர்மானிய இராச்சியத்தின் எல்லைக்குட்சேர்ந்த முக்கியமான நகரங்கள் மூன்று.—முதலாவது ஆஸ்ற்றியாவின் இராஜதானியாகிய வியனு; இரண்டாவது புருஷிய தலைப்பட்டணமாகிய வேர்லின்; மூன்றாவது ஸக்ஸோனியாவின் பிரதான நகரமாகிய டிறெஸ்டென் என்பவைகளே.

புருஷியா, ஸக்ஸோனியா, ஹனோவர், பவாரியா, உவெர்ட்டெம்புர்க் ஆகிய இவ்வைந்து மாகாணங்களில் வெவ்வேறு அரசர் ஆளுகை செய்துவருகிறார்கள். ஆஸ்ற்றியா இராச்சியம் ஒரு சக்கரவர்த்தியின் ஆளுகைக்குட்பட்டிருக்கின்றது. இவைகளும், நாலு சுயாதீன நகரங்களும், பிரபுகள் முதலானவர்கள் அரசாளுகிற ௨௮ மாகாணங்களும் ஆகத் தொகை ௩௮; இந்த ௩௮ சுயாதீன ஆளுகைகளும், ௧௮௧௫-ம் வருஷத்திலே ஏற்படுத்தப்பட்ட ஜெர்மானிய உடம்படிக்கையிற் சேர்ந்திருக்கின்றன. ஜெர்மானிய இராச்சியத்திலே மிகுதியான இராணுவங்கள் ஆதரிக்கப்படுகின்றன. குடிகள் யாவரும் குறித்த ஒரு காலமளவும் இராணுவ சேவகம் செய்யவேண்டுமென்று துரைத்தனத்தார் கட்டளைபண்ணியிருக்கிறார்கள்; அல்லாமலும், துரைத்தனத்தார் அவசியமென்று கண்டு கட்டளைபண்ணும்பொழுதெல்லாம், அந்தக் குடிகள் இராணுவத்திற் சேர்ந்து, போர்செய்வது கடமை. விசேஷமாய் இந்த ஒழுங்குப்படி புருஷியாதேசத்தில் மாத்திரம் நடந்துவருகின்றது. அந்தத் தேசத்திலுள்ள இராணுவம் அதிக பலமுள்ளது. பார்க்குமிடத்தில் அங்குள்ள ஆண்பிள்ளைகள் அனைவரும் இராணுவ பரீட்சையுள்ளவர்கள். புருஷியதேசத்தின் துரைத்த

னத்தார் தங்கள் இராணுவவீரரைப் பட்சமாய் நடத்தி, அவர்களுக்குக் கல்வி போதிக்கும்படி திட்டம் செய்திருக்கிறார்கள். ஜெர்மானியதேசத்திலே பிரயாணம்பண்ணுவது மிகவும் எளிது; அங்குள்ள முக்கியமான நகரங்களுக்கெல்லாம் ஒன்றோடொன்று தொடர்ச்சியான இருப்புப்பாதைகள் செய்யப்பட்டிருக்கின்றன; நதிகளில் புகைப்படவுகள் ஓடுகின்றன; தேசமெங்கும் சாலைகளும், பாலங்களும், செவ்வையாகச் செய்யப்பட்டும், கால்வாய்கள் வெட்டப்பட்டும் இருக்கின்றன. ஜெர்மானியதேசத்தின் குடிஜனத் தொகை மத்தியமமாயிருக்கின்றது. அது இடத்துக்கு இடம் வேறுபட்டிருக்கும். பெரும்பாலும் குடிகள் எல்லாரும், பெரிதும் சிறிதுமான நகரங்களில் ஒன்றாய்க் கூடி, நெருங்கி வாசம்பண்ணுகிறார்கள்; மற்றத் தேசங்களிலோ, அப்படி இல்லை. ஜெர்மானியரில் அனேகர், விசேஷமாய் ருஷியா முதலிய பிறதேசங்களுக்குப் போய், அங்கே உபாத்திகளாகவும், வர்த்தகராகவும், பலவகைத் தொழில்செய்வோராகவும் ஏற்பட்டு, கணிசம் பெற்றிருக்கிறார்கள். அத்தேசத்திலுள்ள எவ்வகைத் தொழிலாளிகளாவது பிறதேசங்களுக்குப் போய், சில வருஷமளவும் தங்கி, அங்கங்கே கைத்தொழில் நடத்தும் வகையைக் கண்டறிந்து தெளிவுபெற்று வந்தாலொழிய, அவர்களுக்கு அந்தந்த வகுப்பில் உயர்ந்த நிலைக்கு வரும்படி உத்தரவு கொடுப்பதில்லையென்பதாக ஒரு திட்டம் செய்யப்பட்டிருக்கின்றது. ஆதலால், ஜெர்மானியர் அடிக்கடி பிரயாணம்பண்ணுவது வழக்கம். அந்தக் கட்டுப்பாடு ஜனங்களுக்கு அதிகம் உபயோகமாய் இருக்கின்றது: அதினால் இப்பொழுது உண்டாயிருக்கின்ற பிரயோசனம் அதிகம். அவர்கள் யாதொரு தேற்றமில்லாதவர்களாய் எப்பொழுதும் ஒரே சீரில் இராமல், வரவர அதிக திறமையும் தெளிவும் பெற்றிருக்கிறார்கள்; அன்னிய தேசங்களில் அப்போ

தப்போது நடக்கிற திருத்தங்களையும் நுட்பங்களையும் நன்றாய்க் கிரகித்துக்கொள்ளுகிறார்கள். மற்ற அனேக சாதியார்களோ அப்படி அல்ல; அவர்கள் தங்கள் முன்னோர் நடந்த முறையை விட்டு விலகாமல், தாங்களும் அதின்படி நடப்பதே தகுதியென்று எண்ணி, கல்வி விர்த்திக்கும் நுட்ப விசாரணைகளுக்கும் விரோதிகளாயிருக்கிறார்கள். அதினால் அவர்கள் சீர் அன்று இருந்தபடியே இன்றும் இருக்கின்றது.

ஜெர்மானிய இராச்சிய சம்பந்த உடம்படிக்கையிற் சேர்ந்த பகுதிகளில் ஆஸ்ற்றிறிய இராச்சியமும், புருஷிய இராச்சியமும் விசேஷித்தவைகளாம். ௧௫-ம் நூற்றாண்டில் ஹெப்ஸ்வேர்க் மாகாணத்தின் பிரபுவாகிய றொடோல்ப் என்பவன் ஜெர்மானிய சக்கரவர்த்தியாகத் தெரிந்து ஏற்படுத்தப்பட்ட காலத்திலே, ஆஸ்ற்றிறிய இராஜவமிசம் பிரபலமாகத் தொடங்கிற்று. ஒருவன் இராஜகுலத்திற் பிறவாதிருந்தும், மற்றவர்களைப் பார்க்கிலும் அதிகமாய்க் குண அதிசயங்களிற் சிறந்திருப்பானாகில், அவனையே முடிசூட்டி அரசாள வைப்பது அத்தேசத்தின் வழக்கம். எப்படியும், ௧௮௦௬-ம் ஆண்டளவும் மேற்சொல்லிய றொடோல்ப் என்பவனுடைய வமிசத்தினின்று இராஜரிகம் நீங்கவில்லை. பின்பு அவர்களுடைய சக்கரவர்த்தியான ௨-ம் பிரான்ஸிஸ் என்பவன் தனது இராஜபட்டத்தை "ஆஸ்ற்றிறிய சக்கரவர்த்தி" என்பதாக மாற்றினான். ஆஸ்ற்றிறிய இராச்சியத்தைச் சேர்ந்த ஐரோப்பிய நாடுகள் அனேகம். விசேஷமாய் ஆஸ்ற்றிறியா, ஹங்கெரி, பொஹிமியா, கிரோவேஷியா, டெல்மேஷியா, கல்லீஷியா, திரொன்ஸில்வேனியா, லோம்பார்டியின் அதிகமான பகுதி, திரல், முன் ஒரு காலத்திலே வெனிஸ் இராச்சியத்திற் சேர்ந்த மாகாணங்கள், இவைகள் அனைத்தும் அதின் பகுதிகளாம். இத்தனை

ஐரோப்பிய நாடுகள் ஒன்றாகச் சேரப்பெற்ற இராச்சியம் அது ஒன்றே தவிர, வேறில்லை.

ஜெர்மானிய சாதியாருடைய தேசாசார வழக்கம், நடை, உடை, பாவனைகளைக் குறித்து மேற்சொல்லிய பொது இலட்சணங்கள் பெரும்பாலும் ஆஸ்ற்றிரிய சாதியாருக்கும் பொருந்தும். துரைத்தனத்திற்குரிய விஷயங்களிலோ, ஆஸ்ற்றிரியாவுக்கும் மற்ற இராச்சியங்களுக்கும் அதிக பேதம் உண்டு. அங்கே நிலைப்பட்டு வழங்கிய சமயம் கிறிஸ்து மார்க்கம்; அது சுவிசேஷ மார்க்கத்தின் சுத்த உபதேசங்களுக்கு வேறாகி, மிகவும் சீரழிந்திருக்கின்றது. சத்திய வேதத்தின் கொள்கைகளை அனுசரிக்கும் பெயர்களை எல்லாம் அநியாயமாகத் தண்டிக்கும்படி கட்டாயமான சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அங்கே துரைத்தனத்தாருடைய பரிசோதனை இல்லாமல், எந்த விஷயத்தையாவது அச்சிட்டுப் பகிரங்கஞ்செய்வதற்கு உத்தரவு இல்லை. தற்காலத்தில் அரசாளுகிற சக்கரவர்த்தி தேச நியாயப்பிரமாணங்களுக்குப் பொருந்த இராஜரிகஞ்செய்வதாக உறுதிசொல்லியிருந்தும், காரியத்தளவில் தமது சுவேச்சைப்படிக்கே நடந்துவருகிறார். அவர் தமது குடிகளுக்கு நியாயமான சட்டங்களை நிரூபித்து, அவர்களைக் கிரமமாய் நடத்துவோமென்று பிரமாணிக்கம் செய்து கொடுத்ததின்மேல், முன் அரசாண்ட தன் சிற்றப்பனைப் பட்டத்தினின்று பலாத்காரமாய் விலக்கி, தான் அரசாளத் தலைப்பட்டவர்; பின்பு அவர் தமது வாக்குத்தத்தத்தை மறந்து, குடிகளை வதைத்து, கொடுங்கோல் செலுத்துகிறார். அத்தேசத்தில் யுத்தஞ்செய்யப் பழகின இராணுவங்கள் அதிகம் உண்டு. அந்த இராணுவங்களை நிருவகிக்கும்படியாகச் சக்கரவர்த்தி குடிகளுக்கு அடாவரி விதித்து, அநியாயஞ்செய்கிறார். இதினால் அவருடைய இராச்சியத்துக்கு உள்ளிட்டிருக்கும் சனங்களும், அதைச்

சார்ந்த மாகாணங்களின் சனங்களும் அப்போதப்போது கலகஞ்செய்வது உண்டு. இந்தப்படி உண்டாகிற கலகங்களைச் சக்கரவர்த்தி மேற்சொல்லிய இராணுவங்களால் அடக்கி, தமது ஆளுகையிற் சேர்ந்த அரசரைப் பயமுறுத்தி, கீழ்ப்படுத்திவருகிறார்.

இற்றலிதேசத்திலுள்ள குடிகள் அந்தச் சக்கரவர்த்தி செய்த கொடுமையைச் சகிக்கமுடியாமல், அவருடைய ஆணையைக் கடந்து கலகஞ்செய்தபொழுது, அவர் அவர்களைத் தலையெடுக்க ஒட்டாமல், அடக்கினார். ஹங்கெரி மாகாணத்தின் குடிகளும் அந்தப்படி அரசனுடைய ஆணைக்கு அடங்காமல், அவருடன் யுத்தம் செய்யத் துணிந்தபொழுது, அவர் தமது இராணுவத்தைக் கொண்டு அவர்களை அடக்கும்படி தம்மால் ஆனமட்டும் பார்த்தும், முடியாமல், ருஷிய அரசனைத் தமக்குத் துணைநிற்கும்படி கேட்டு, அவருடைய உதவியினால் அவர்களை மேற்கொண்டு, வெற்றியடைந்தார். அவர் இப்பொழுது தமது குடிகளை நன்றாய்க் கீழ்ப்படுத்தி, ஆஸ்ற்றிறிய ஜனங்களையே துரைத்தனத்துக்குரிய உயர்ந்த உத்தியோகங்களில் ஏற்படுத்தி வருகிறார். அந்த உத்தியோகஸ்தர்களுக்குத் தகுதியான சம்பளம் இல்லாமையால், அவர்கள் நெறி தப்பி, தங்கள் விசாரணைக்கு உட்பட்ட ஜனங்களுக்கு அநியாயம்பண்ணி, அவர்களிடத்திலே கைக்கூலி வாங்குகிறார்கள். ஆஸ்ற்றிறிய துரைத்தனத்தைச் சார்ந்த நாடுகளில் அங்கங்கே போலீஸ் அதிகார விசாரணையின் கட்டாயத்தினால் உண்டாகிற சங்கடங்கள் அனேகம். போலீஸ் அதிகாரிகள், ருஷிய இராச்சியத்தில் வழங்கியபடி உளவுபார்த்து அறிவிப்பதற்காக, அங்கங்கே ஆட்களை வைக்கிறதும் உண்டு. அத்தேசத்திலே பிரயாணம்பண்ணுவது மிகவும் எளிது: ஆகிலும், சில இடங்களில் நின்று, வழிச்செல்லும் பிரயா

ணிகளைத் தடுத்து, அவர்களுடைய சாமான்களைப் பரிசோதித்து, அவர்களுக்கு வெகு தொந்தரவு செய்கிறவர்கள் அனேகர்.

ஆஸ்த்திரிய சக்கரவர்த்தி, தமது இராணுவங்களுக்கு யாதொரு தாழ்ச்சி வராமல், அவர்களைக் கருத்தாய் ஆதரித்துவருகிறார். அதினிமித்தம் கல்வியை அபிவிர்த்திசெய்யும் விஷயத்திலே அவருடைய முயற்சிகள் குறைந்துபோகவில்லை. இருப்புப்பாதைகள், கால்வாய்கள், சாலைகள் பலவகைச் சிறந்த கட்டடங்கள் ஆகிய இவையெல்லாம் செவ்வையாகச் செய்யப்பட்டிருக்கின்றன. அங்குள்ள அநேக நகரங்களில் நெசவு முதலிய கைத்தொழில்கள் நேர்த்தியாக நடக்கின்றன. ஆகிலும் கடற்கரையை அடுத்த பட்டணம் திரீயெஸ்த் என்பது ஒன்று தவிர, வேறு இல்லாமையால், பிற தேச வியாபாரம் மத்தியமமாய் இருக்கின்றது. மலைகள் செறிந்திருக்கின்ற ஹங்கெரிமாகாணம் முதல், சம பூமியாகிய லோம்பார்டிமாகாணம் இருகப் பரந்திருக்கிற ஆஸ்த்திரிய தேசத்திலே, வெப்பம் குளிர்ச்சி இரண்டும் வெவ்வேறு அளவாயிருப்பதினால், அங்கங்கே உண்டாகிற தானிய முதலியவைகள் ஒன்றுக்கொன்று மிகவும் பேதமானவைகளாயிருக்கும். திராட்சம், மரவகைகள், தானியவகைகள், புகையிலை, பல பல நிரசவஸ்துகள், இரும்பு, செம்பு, ஈயம் முதலான லோகங்கள், உப்பு இவை யாவும் ஆஸ்த்திரியா தேசத்தில் மாத்திரம் உண்டாகின்றன. அங்கே பண்படுத்திப் பயிரிடப்பட்டிருக்கின்ற விசாலமான சம நிலங்களும், விதம் விதமான மரங்கள் செறிந்த காடுகளும், பயிர்வளம் நீர்வளம் பொருந்திய பள்ளநிலங்களும், சிங்காரமாய்க் கட்டப்பட்ட பல நகரங்களும் உண்டு. டானியூப் என்னும் சிறந்த ஆற்றின் பாய்ச்சலினால் தேசம் எங்கும் செழித்திருக்கின்றது. அங்கே அனேக சிற்றாறுகளும் உண்டு.

புருஷியா—புருஷியாவென்பது மேன்மையினால் ஆஸ்ற்றிரியாவுக்கு இரண்டாம் தரமானது; அதுவும் ஆஸ்ற்றிரியாவுமே, ஆஸ்ற்றிரிய இராச்சிய சம்பந்த உடம்படிக்கைக்குட்பட்ட பகுதிகளில், முக்கியமானவைகள். பிராண்டென்புர்ச்மாகாணத்தின் உத்தியோக நியம அதிகாரிகளில் ஒருவராகிய பிரொட்றிக் என்பவர் ௧௭௫-ம் ஆண்டில் தாமாக மகுடஞ்சூட்டிக்கொண்டு, புருஷிய இராச்சியத்திற்குத் தாமே அரசன் என்று விளம்பரம்பண்ணினார். அப்பொழுதே அது ஒரு தனித்த இராச்சியமாகப் பெயர் வழங்கத் தொடங்கிற்று. பிரான்ஸ்தேசத்திலே பாப்புமதஸ்தரால் வேதாகமத்தில் நூதனமாகச் சேர்க்கப்பட்ட விபரீதங்களைத் தள்ளி, சுவிசேஷமார்க்கத்தின் சுத்த உபதேசங்களை அனுசரித்த புரோடெஸ்டாண்ட் கிறிஸ்தவர்கள், அங்குள்ள குருக்கள்மார்மூலமாய்த் தங்களுக்கு நேரிட்ட சங்கடங்களையும் துன்பங்களையும் சகிக்க ஆற்றாமல், புகலிடம் தேடி, புருஷிய இராச்சியத்திற்கு ஓடினபோது, மேற்படி பிரொட்றிக் அரசனுடையதந்தை, அவர்களை ஆதரவாய் அணைத்து, அவர்கள் அங்கே அடைக்கலமாயிருப்பதற்கு இடங்கொடுத்தார். முன்பு அவர்கள் பழகியும் அறிந்துமிருந்த வித்தைகள், கைவேலைகள், தொழில்முயற்சிகள், கலைக்கியானங்கள் யாவும், அவர்களால் அந்த இராச்சியத்திலே அபிவிர்த்தியாயின. இந்தப்படி புருஷிய இராச்சியத்தில் உண்டான செல்வத்துக்கும் செழிப்புக்கும் அவர்களே ஏதுக்களாய் இருந்தார்கள். ௧௭௪௦-ம் ஆண்டிற் பட்டத்திற்குவந்து, கொஞ்சங்குறைய ௫௦ வருஷமளவும் அரசாண்ட அவன் குமாரனும், "பெரியவர்" என்று மறுநாமம் பெற்றவனுமாகிய பிரொட்றிக் அரசன், புருஷிய இராச்சியத்தை ஐரோப்பிய துரைத்தனங்களுக்குள்ளெல்லாம் முதன்மை பெற்றிருக்கும்படி பிரபலமாக்கினான். அவன் பிதிரார்ஜிதமாகப் பெற்ற இராச்சியங்களுடனே,

தன்முயற்சியாற் பிடித்த வேறு விஸ்தாரமான மாகாணங்களையும் சேர்த்து, இராச்சியபாரம்பண்ணினன். அந்த மாகாணங்களுக்குள்ளே, ஸிலிஷியாவும், போலாண்டின் ஒரு பகுதியும் முக்கியமானவைகள். அவன் துரைத்தனம் செய்யத் தொடங்கியபொழுது, இராஜதானியாகிய பேர்லின் என்பது ஒரு சிறு பட்டணமாயிருந்தது; ஆதலால், அவன் அதை விஸ்தாரமாய்க் கட்டி, விசித்திரமான வேலைப்பாடுகள் செய்து, சிற்ப அலங்காரமான அரமனைகளையும் உத்தியோகசாலைகளையும் செப்பனிடுவித்தான். இப்பொழுது அந்த நகரம் ஜெர்மானிய இராச்சியத்திலுள்ள சிறந்த நகரங்களில் ஒன்றுயிருக்கின்றது. அவனுக்குப்பின் பட்டத்திற்கு வந்த அரசர்களும், அவன் செய்தபடி, அந்தப் பட்டணத்தை அலங்கரித்து, அதில் ஒரு சிறந்த சர்வகலாசாலையை ஸ்தாபித்தார்கள். அவன் அரசாளத்தொடங்கினபொழுது, அங்குள்ள குடிச்சனங்கள் ௩௦ இலட்சம் பெயர்; அவனுடைய அரசாட்சியின் முடிவிலோ, அ௦ இலட்சம் பெயர். அந்த அரசன் கல்வியை ஆதரித்து அபிவிர்த்திசெய்தான். எங்கும் கீர்த்திபெற்ற கல்விமான்களும், கவிஞரும், பலவித நுட்பமான கைவேலைகளிலும் சங்கீத வித்தையிலும் பாண்டித்தியமுள்ள ஜனங்களும், இராஜ அரமனையில் இடம்பெற்று, எப்பொழுதும் கலைக்கியான விநோதஞ்செய்வார்கள். எப்படியிருந்தும், "பெரியவர்" என்று மறுநாமமுள்ள பீற்றர் என்பவர் செய்தபடிக்கு, அந்த அரசனுடைய கருத்து பிரதானமாய் இராணுவத்தைச் சீர்திருத்தும் விஷயத்திலே சென்றது. ஆண்மையிலும் வீரத்திலும் அவனுடைய இராணுவத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஒப்பானவர்கள் ஐரோப்பாவில் எங்கும் இல்லை. புருஷிய இராச்சியத்திலுள்ள ஆடவர் அனைவரும், கட்டாயமாய் மூன்று வருஷகாலமளவும் இராணுவத்திற் சேர்ந்து, யுத்த பரீக்ஷை பண்ணுவது வழக்கம். அவசியமான பொழு

தெல்லாம், அரசன் உத்தரவின்படி, அவர்கள் ஆயுதம் எடுத்து யுத்தஞ்செய்வது கடமை: ஆதலால், அங்கே அளவிற்கு அதிகமான இராணுவத்துக்குச் சம்பளம் கொடுத்து ஆதரிக்கவேண்டுவதில்லை. இப்பொழுது புருஷிய இராச்சியத்திலே யுத்தம் செய்யத் திறமுள்ளவர்களாயிருக்கிற இராணுவவீரர் ௬ இலட்சம்பெயர். மேற்சொல்லியபடி, "பெரியவர்" என்று மறு நாமமுள்ள பிரொட்றிக் என்பவர் அரசாண்ட காலத்தில், அவருடைய இராணுவங்களுக்கும், ஆஸ்ற்றிய, ருஷிய, பிராஞ்சிய, சுவேதேனிய இராணுவங்களுக்கும், ஏழு வருஷமளவும் யுத்தம் நடந்தது. அந்த நாலு இராச்சியங்களிலுமிருந்து திரளாகச் சேர்ந்த சேனைகளுடனே, புருஷிய இராணுவங்கள் எதிர்த்து, மிகுந்த வீரத்தன்மையாகப் போர் செய்து, கடைசியில் அவைகளை முறியடித்து, ஓட்டிவிட்டன. அப்புறம் புருஷிய இராச்சியத்திலே சமாதானம் நிலைபெற்றது. அக்காலத்திலேதான் புருஷிய அரசன் அதின் வல்லமையை நிலைப்படுத்தினார். அது இந்நாள்வரைக்கும் விர்த்தியாகிவருகின்றது. அந்த இராச்சியத்தையும், ருஷிய இராச்சியம் ஒன்று நீங்கலாக, மற்றெல்லா ஐரோப்பிய இராச்சியங்களையும், முதல் நப்போலியன் என்னும் பயங்கரமான சக்கரவர்த்தி ஜெயித்தான். ஆகிலும் புருஷிய இராச்சியத்தார், அவனுடைய ஆக்கினையை அதிசீக்கிரத்திலே கடந்து, ஆஸ்ற்றிய ருஷிய துரைத்தனத்தார்களுடனே சேர்ந்து, அந்த நப்போலிய சக்கரவர்த்தியை எதிர்த்து, ௧௮௧௩-ம் ஆண்டு லயிப்ஸிக் பட்டணத்திற்குச் சமீபத்தில் மிகுந்த ஆண்மையுடன் யுத்தம்பண்ணி, அவனுடைய இராணுவத்தை முறியடித்து, நிலைகுலையச்செய்தார்கள். அப்பொழுதே ஐரோப்பியதேசம் அவன் செய்த கொடுங்கோல் அரசிலிருந்து நீங்கலாயிற்று.

இப்பொழுது புருஷிய இராச்சியம் விர்த்தியடைந்து நன்ருய் அரசாளப்படுகின்றது; அங்கே வழங்கிய சமயம் சுவிசேஷமார்க்கமாம். மற்றும் சமயங்களையும் அவரவர் இஷ்டத்தின்படி அனுசரிப்பதற்கு இடம் உண்டு. ஆஸ்ற்றிறிய இராச்சியத்தில் இருக்கிறது போல, புருஷிய இராச்சியத்திலும் இராணுவ சம்பந்தமான ஏகாதிபத்தியம் நடந்து வருகின்றது. ஆகிலும், ஜனங்களுக்கு அதிஞல் எவ்வளவும் கஷ்டமும் இல்லை; சிலாக்கிய நஷ்டமும் இல்லை; அதிக சகாயம் உண்டு. ஆஸ்ற்றிறிய இராச்சியத்திலோ, அப்படி அல்ல. புருஷியாவிலே அந்தந்த வகுப்பிலுள்ள ஜனங்களுக்கு அவரவர் உரிமைப்படியே சகாயம் செய்யப்படுகின்றது; நீதிவிசாரணையிற் சற்றுவது தாழ்வு இல்லை; யாவரும் தேசநியாயப்பிரமாணங்களுக்கு அமைந்து நடக்கிருர்கள்; துரைத்தனத்தார் பாரபட்சம் இல்லாமல் எவர்களுக்கும் நன்மைசெய்கிருர்கள். ஆஸ்ற்றிறிய இராச்சியத்திலும், ருஷிய இராச்சியத்திலும் சாதாரணமாய் நடக்கிறபடி, களவாய் உளவுவைத்துக் காரியவிசாரணை செய்யும் வழக்கமாவது, சமய விஷயத்திலே கட்டாயப்படுத்துகிற வழக்கமாவது அங்கில்லை; கல்வி கருத்தாய் அபிவிர்த்திசெய்யப்படுகின்றது; சிறுவர் எல்லாரும் அவசியம் பாடசாலைக்குப்போக வேண்டும்; இராணுவத்துக்குரிய தொழில் பழகும் சேவகருக்குக் கல்வியும் உணர்த்துவதற்கு இடம் செய்யப்பட்டிருக்கின்றது.

அங்குள்ள அனேக நகரங்களில் பல சர்வகலாசாலைகள் இருக்கின்றன. இராஜதானியாகிய வேர்லின் நகரத்தில் இருக்கிற கல்விச்சபை முதன்மை பெற்றிருக்கின்றது. கீர்த்தியும் விவேகமுமுள்ள வித்துவான்களை அரமனையில் வைத்து ஆதரித்து விநோதங் கொண்டாடுவது அரசனுக்கு அதிக இஷ்டம்.

புருஷியா இராச்சியத்திலே அதிக செழிப்பும் செல்வமுமுள்ள மாகாணங்கள் றைன் என்னும் ஆற்றுப்போக்கை அடுத்திருப்பவைகளாம். அந்த மாகாணங்களில், வர்த்தகமும் கைத்தொழில்களும் விஸ்தாரமாய் நடக்கின்ற பெரிய நகரங்கள் அனேகம் உண்டு; அவைகளில் ஒன்று கொலோன் என்பது; அதில் மிகுந்த அலங்காரமான ஒரு அத்தியட்சர்தேவாலயம் இருக்கின்றது. அந்தப் பட்டணம் மேற்சொல்லிய தேவாலயத்தினாலும், அங்கே செய்யப்படுகிற பரிமளத்தினாலும் விசேஷித்து, எங்கும் கீர்த்தி பெற்றிருக்கின்றது. மற்றொன்று ஏக்ஸ்லாஷபேல் என்பது; அது ஒரு பழமையான பட்டணம்: அங்கே விசேஷமாய் நெசவுவேலையும், தையலுக்கு உபயோகமான ஊசிகளும் செய்யப்படுகின்றன. கொப்லான்த்ஸ், மெயான்ஸ், திரீவ் என்னும் பட்டணங்களும் முக்கியமானவைகள்தான். மேற்சொல்லிய மாகாணங்கள் அதிகம் சிறந்து, செழித்திருக்கின்றன. அவைகளில் வகை வகையான தானியங்கள் விஸ்தாரமாய் விளைகின்றன. மேலும் பல சுரங்கங்களும், துத்தநாகம், நிலக்கரி, இரும்பு, செம்பு இவைகளும் உண்டு. அங்கே இரும்பு, உருக்கு, பித்தளை இவைகளிற் செய்யப்படுகிற நேர்த்தியான கருவிகளுக்குச் சமானம், அங்கிளோதேசத்திலொழிய, வேறு எங்கும் இல்லை. நீர்வளம் பொருந்திய றைன், மொஸெல் என்னும் ஆறுகளின் போக்கை அடுத்திருக்கிற சிறு மலைச்சரிவுகளில் திராட்சக்கொடி திரளாகச் செய்கைபண்ணப்படுகின்றது. அதின் பழத்தினால் விலை உயர்ந்த பானம் உண்டாக்கப்படும்.

புருஷிய இராச்சியத்தில் எங்கும் இருப்புப்பாதைகளும், அங்கங்குள்ள முக்கியமான பட்டணங்களுக்குப் போகிற தொடர்ச்சியான கிளைச்சாலைகளும், புகைப்படவுகளும் அதிகமாய் இருப்பதினால், அங்கே பிரயாணம் பண்ணுவதும்,

சமாசாரப் போக்கு வரவு செய்வதும் எளிதாயிருக்கும். புருஷியாவிலும், அதற்குச் சம்பந்தமான ஸிலிஷியா நாட்டிலுமுள்ள முக்கியமான நகரங்கள், இராஜதானியாகிய பெர்லின், பிறெஸ்லௌ, துறை அடுத்த நகரங்களாகிய டான்த்ஸிக், கொனிஸ்புர்க் இவைகளாம். இவையல்லாமல், சுதேச வியாபாரமும் பிறதேச வியாபாரமும் மலிந்து நடக்கின்ற வேறு அனேக பெரிய பட்டணங்களும் உண்டு.

அத்தேசத்தின் ஒரு பங்கு மலைகளும் சுரங்கங்களும் செறிந்திருக்கின்ற நிலம்; மற்றப் பங்கு ஹீத் என்னும் தாழ்வான செடி ஒன்று தவிர, வேறு பயிர் விளையாத விஸ்தாரமான பரவை நிலமாம். பெர்லின் நகரம்தானும் யாதொரு இயற்கையான சிறப்பும் இல்லாத மணல் நிலத்திற் கட்டப்பட்டிருக்கின்றது. அந்த நகரத்திலே அலங்காரமான நூதன பண்டசாலைகளும், நடனசாலைகளும், சித்திரமண்டபங்களும், கைத்தொழில் விர்த்தி வித்தியாசாலைகளும், எங்கும் கீர்த்தி பெற்ற ஒரு சர்வகலாசாலையும் இருக்கின்றன. மேலும் இரும்பை உருக்கி வேலைசெய்யும் ஒரு பெரிய கம்மியசாலையும் உண்டு; அதிலே அதிக விசித்திரமான வேலைகள் செய்யப்படுகின்றன: விதம் விதமான சிறந்த நகைகளைச் சீனைச்சட்டியினுற் செய்து, கறுப்பு வர்ணம் கொடுத்து, மெருகிட்டு மினுக்கி விற்பார்கள்; அவைகளுக்கு "பெர்லின் நகரத்தின் இருப்புநகை" என்று பெயர் வழங்கும். புருஷியாவின் அரசனுக்கும், நபோலிய சக்கரவர்த்திக்கும் முன்பு யுத்தம் நடந்தபொழுது, அதின் செலவுக்காக அங்குள்ள ஸ்திரிகள் அனைவரும் தங்கள் நகை நட்டுக்களையெல்லாம் அரசனிடத்திற் கொடுத்தார்கள். அவர் அவைகளை வாங்கி, யுத்தத்திற்காகச் செலவிட்டு, வெற்றியடைந்தார். அரசன், அத்தனை தேச அபிமானமுள்ள ஸ்திரிகளுக்கு, அவர்கள் உத்தம குணத்தின் முத்திரையாகத் தகுதியான பதி

னுபகாரம் செய்ய நினைத்து, மேற்படி இருப்புநகைகளை முதல்முதற் செய்வித்துக் கொடுத்தாராம். புருஷிய தேசத்திலுள்ள ஆட்டுமயிர் மிகவும் உசிதமானது. அதற்கு பெர்லின் ஆட்டுமயிர் என்று பெயர் வழங்கும்; அது பஞ்சுபோல மிருதுவானதும், நன்முகச் சாயம் பிடிக்கத்தக்கதுமாயிருக்கின்றது: ஆதலால், அதினுற் செய்யப்படும் சித்திரப்பட்டாடைகள் ஐரோப்பிய துரைசாணிகளுக்கு அதிக இஷ்டமாயிருக்கும். மேலும், புருஷியா இராச்சியத்தின் ஐசுவரிய விர்த்திக்கு அனுகூலமாயிருக்கின்ற வேறு ஒரு வஸ்து அம்பர் என்பது; அது வால்த்திக்கடலை அடுத்த புருஷிய கரையிலே திரளாய் விளைகின்றது; அதினுல் துரைத்தனத்தாருக்கு வருகிற இறைப்பணம் அதிகம். ஐரோப்பாதேசத்தில் கொஞ்சக் காலத்திற்கு முன் நடந்த யுத்தத்திலே, புருஷிய இராச்சியத்தார் ஒரு பட்சத்தையும் சாராதவர்களாய் இருந்தார்கள்.

ஹங்கெரி—ஹங்கெரியென்பது ஆஸ்ற்றிறிய இராச்சியத்திற் சேர்ந்திருந்தும், அது அதிக விசாலமும் மேன்மையுமுள்ள மாகாணமாயிருக்கிறபடியினுலே, அதைச் சார்ந்த வரலாறுகளைத் தனிமையாகச் சொல்வது தகுதி. அதின் வடக்கு, மேற்கு, கிழக்கு எல்லைகள் கார்பாதிய மலைகளும், மார்ச்சு நதியுமாம்; தெற்கு எல்லைகள் ஸாவ், டானியூப் என்னும் ஆறுகள். அங்கே முற்காலத்தில் இருந்த குடிகள் மிலேச்சர். இரண்டாம் நூற்முண்டின் தொடக்கத்தில் அந்த மாகாணத்தின் அதிகமான பாகத்தை உரோம இராச்சியத்தார் ஜெயித்து, ஒரு நூற்முண்டளவும் அரசாண்டார்கள். அப்புறம் வால்த்திக்கடலின் வடகரைப்பகுதியிலிருந்து படையெடுத்துப்போன காத்தியர் என்னும் மிலேச்சர் அதை உரோமர் கையிலிருந்து பறித்தார்கள். பின்பு ச-ம் நூற்முண்டிலே மிகவும் கொடிய மூர்க்கமுள்ள மி

லேச்சராகிய ஹூணர் என்பவர்கள் காத்தியரை வென்று, அவர்களை அங்கிருந்து ஓட்டிவிட்டார்கள். அந்த ஹூணச்சாதியார் சீனதேசத்தின் எல்லையிலிருந்து போனவர்கள்; அவர்கள் தருத்தாரிய சாதியைச் சார்ந்த வமிசத்தார்கள்; அவர்கள் வரவர விஸ்தாரமான பூமியைக் கட்டி அரசாண்டு, அதற்கு ஹங்கெரியென்று பெயரிட்டார்கள். ரு-ம் நூற்ருண்டில், அதிக இராணுவ சமர்த்தும் ஆண்மையுமுள்ள அரசனுயிருந்த அற்றிலா என்பவன்கீழ், அவர்கள் வல்லமையில் அதிகரித்தார்கள். அந்த அரசன் உரோமை இராச்சியத்தில் எங்கும் படையெடுத்துப்போய், ஜனங்களைச் சொல்வதற்கு அரிய நிஷ்டூர வதை செய்து, எதிர்ப்பட்ட கோட்டை, கொத்தளம், நாடு, நகரம் யாவையும் நாசப்படுத்தி, தனக்கும் தன் குலத்துக்கும் என்றும் அழியாதிருக்கத்தக்க பெயரைப் பெற்ருன். அதினுல் அவனுக்குக் "கடவுள் அனுப்பிய மிலாறு" என்று மறுநாமம் உண்டாயிற்று. அவன் மரணமடைந்தபின்பு, ஹூணச்சாதியாருக்கு உண்டாயிருந்த ஆண்மையும் வலிமையும் ஒழிந்துபோயின. பிற்பாடு அவாறீஸ் என்னும் வேறு ஒரு கோத்திரத்தார், தருத்தாரி தேசத்திலிருந்து போய், அந்த ஹூணச்சாதியாரை எளிதாய்க் கீழ்ப்படுத்தினுர்கள். அப்புறம் கூ-ம் நூற்ருண்டில், மேகர்ஸ் என்று பெயர்கொண்ட மற்றொரு வகுப்பான மிலேச்சர், அவாறீஸ்சாதியாரைக் கீழ்ப்படுத்தி, ஒடுக்கி, இந்நாள்வரைக்கும் அவர்களே ஹங்கெரிமாகாணத்தைக் கட்டி ஆளுகிருர்கள். அவர்களுக்கு இப்பொழுது ஹங்கேரியர் என்று பெயர் வழங்குகிறது. அவர்கள்துரைத்தனம் ஆதியிலே ஏகாதிபத்தியமாயிருந்தது. அங்குள்ள நிலத்தலைவராகிய பிரபுகள் சுயாதீனராகி, சிலாக்கியம்பெற்று வாழுகிருர்கள். மற்றப் பொதுவான ஜனங்களும், பூர்வ சாதிகளின் வமிசத்திலே தப்பிப் பிழைத்திருந்த பெயர்களுமோ, வாரக்குடிகளாகவும் அடிமைகளாகவும் இருந்து, வருத்தப்

பட்டு, நாள்கழிக்கிறார்கள். ஆதியிலே அவர்களை ஐரோப்பா தேசத்திற் கொண்டுபோன மகா பிரதானியாகிய ஆர்பாத் என்பவனுடைய குடும்பத்தார்களே இராசரிகம் செய்துவருகிறார்கள்: ஆகிலும், ஒரு அரசன் இறக்கும்பொழுது, அவனுடைய சிரேஷ்ட புத்திரனுக்கே பட்டாபிஷேகம்பண்ணவேண்டும் என்கிறதாய், யாதொரு திட்டமும் செய்யப்பட்டிராததினால், மேற்படி குடும்பத்தைச் சார்ந்த பாத்தியஸ்தர்கள் பலர், எனக்கு உனக்கு என்று இராஜபட்டத்திற்காக வழக்காடி, ஓயாமற் சண்டையிட்டுக்கொண்டுவந்தார்கள். இந்தப்படி அவர்கள் தங்களுக்குள்ளே சண்டையிட்டதும் தவிர, துருக்கர், ஆஸ்ற்றிரியர் முதலான புறச்சாதியாருடனேயும் அடிக்கடி யுத்தம் செய்தார்கள்: ஆதலால், அந்த நாட்டிலே நாகரிக விர்த்தியாவது, வாழ்வுக்கேற்ற கைத்தொழில் விர்த்தியாவது சிறிதும் இல்லை.

௧௦-ம் நூற்றாண்டில் உரோமாபுரியில் இருந்த கிறிஸ்துமார்க்கக் குருக்கள்மாரிற் சிலர், ஹங்கெரி நாட்டாருக்கு வேத உபதேசம்பண்ணினதினாலும், அங்கிருந்த அரசரில் ஒருவன் கிறிஸ்தவளான ஒரு பெருமாட்டியை மனைவியாய்க் கொண்டதினாலும், அங்கே கிறிஸ்துமார்க்கம் பரவிற்று. பின்பு ௧௧-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அந்த அரசனுடைய குமாரனாகிய பரிசுத்த ஸ்தேவான் * என்பவன் ஆளுகைசெய்த காலத்தில், கிறிஸ்துமார்க்கம் விர்த்தியாகி, நிலைப்பட்டது. அவன் வேறும் பல திருத்தங்களையும், விசேஷமான சட்டங்களையும் ஏற்படுத்தினான். அந்தச் சட்டங்களினால் வாரக்குடிகள் சுயாதீனராயிருக்க இடம்பெறவில்லை: ஆகிலும், தேசத்தின் வாழ்வுக்கு ஏற்ற கைத்

* ஆதியிலே பரிசுத்த ஸ்தேவான் என்பவனே அரசனென்று பட்டம்பெற்றவன்; அந்த இராச்சியத்தை ஸ்தாபித்ததும் அவனென்றே யாவரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

தொழில்களும், செல்வமும் விர்த்தியாயின. அப்படி முன் ஒருபொழுதும் இருந்ததுமில்லை, பின் இருந்ததுமில்லை. ௧௬-ம் நூற்றாண்டளவில் ஆர்பாத் அரசனுடைய வமிசம் கட்டோடே அற்றுப்போனது. அப்புறம் ஹங்கெரி நாட்டார் அன்னிய தேசங்களிலுள்ள இராஜகுமாரரில் ஒருவனைத் தங்களுக்கு அரசனாகத் தெரிந்துகொள்ள எத்தனப்பட்டார்கள். அது கண்டு, இராஜபட்டத்திற்குப் போட்டிக்காரர் பலர் அப்போதப்போது எழுந்து, சண்டை செய்யத் தலைப்பட்டதினால், அங்கே முன்போல நெடுநாளாகக் கலகமும் குழப்பமும் அதிகரித்து நடந்தன. வரவர ஹங்கெரி நாட்டார் தங்களுக்குள் ஐக்கபேதமுள்ளவர்களாய், புறச்சாதியாருடனே ஓயாமற் சண்டையிட்டு, தங்கள் செல்வத்தையும், பெருமையையும், வலிமையையும் இழந்து, கடைசியில் ௧௬-ம் நூற்றாண்டிலே, ஜெர்மானிய அரசாட்சியிற் சேர்க்கப்பட்டார்கள். அப்போது ஹங்கெரி நாட்டை அரசாண்ட பெர்டினண்ட் என்பவர், ஜெர்மானிய இராச்சியமுழுமைக்கும் சக்கரவர்த்தியானார். பின்னும் நெடுங்காலமளவும் அந்த ஹங்கெரி நாட்டாருடைய அரசாட்சியில் அவர்களுக்குச் சொந்தமான துரைத்தனச் சட்டங்களே நிலைப்பட்டிருந்தன. சுயாதீன அரசர் ஆளுகைசெய்த காலத்தில், பிரபுகளுக்கு உண்டாயிருந்த சுயாதீனமும் சிலாக்கியங்களும் ஒழிந்துபோகவில்லை. சக்கரவர்த்தியின் வக்கணைகளில் "ஹங்கேரிய அரசன்" என்பதும் ஒன்று; ஆதலால், அந்த இராச்சியம் ஜெர்மானிய இராச்சியத்திற்கு வேறாய் இருப்பதற்கான உரிமை அழியவில்லை: ஆகிலும், இப்பொழுது அதின் சீர் மிகவும் பேதமாயிருக்கின்றது. எட்டு வருஷத்திற்குமுன்பு, ஆஸ்ற்றிய இராச்சியத்தார், தங்கள் அரசாட்சிக்குட்பட்டிருந்த ஜெர்மானிய இராச்சியத்தில், அடாவரி வாங்கி,

ஜனங்களை ஒடுக்கி, சிரமப்படுத்தினதினால், ஹங்கேரியர்கள மூர்க்கத்துடன் கலகஞ்செய்யத் தலைப்பட்டு, சில மாதவரையில் தங்களால் ஆனமட்டும் நெருங்கி யுத்தஞ்செய்தும், கடைசியில் ஒடுங்கி, வீரம் குலைந்தார்கள். சனங்கள் தரித்திருந்த யுத்தாயுதங்களைச் சத்துருவின் கையிற் பறிகொடுத்து ஓடினார்கள்; இராணுவத் தலைவர்களிற் சங்கரிக்கப்படாமல் மீதியாயிருந்தவர்கள் தடுமாறி, புறங்காட்டி, புகலிடம் தேடி, பிற தேசங்களுக்குச் சென்றார்கள். இந்தப்படி ஹங்கெரி இராச்சியத்தார் தங்கள் பிரதானிக்கத்தை இழந்து, தோற்பு அடைந்து, அன்னிய அரசாட்சிக்கு உட்பட்டார்கள். அவர்களுக்குள் இருந்த பிரபுகள் ஆண்மையும் வீரமுமுள்ளவர்களென்பது மெய்யே; ஆகிலும், அவர்கள் தங்களுக்குக் கீழ்ப்பட்ட வாரக்குடிகளை அநியாயமாய் ஒடுக்கி, சிறைகளைப் போலச் சிறுமைப்படுத்தி, அவர்களைக்கொண்டு குற்றேவல் செய்வித்துவந்ததினால், அந்த வாரக்குடிகள் மனம் சோர்ந்தவர்களாகி, ஆர் ஆண்டாலுமென்னவென்று எண்ணி, மேற்படி பிரபுகளை அலட்சியம்பண்ணினார்கள். அந்தப் பிரபுகள் செய்த அநியாயத்தினாலேதான் அவர்கள் ஆஸ்த்திரியருடைய கொடுங்கோல் அரசாட்சியில் இருந்து வருந்தும்படிநேரிட்டது.

ஹங்கெரியென்பது நிலவளம் நீர்வளமுள்ள செழிப்பான நாடு. அங்குள்ளவர்கள் முக்கியமாய் ஆடு மாடுகளையும் குதிரைகளையும் நன்றாய்ப் பராமரிக்கிறார்கள். பயிர்ச்செய்கையில் அவ்வளவு முயற்சியில்லை. வெப்பம் குளிர்ச்சியால் உண்டாகும் சௌக்கியத்தில் யாதொரு தாழ்ச்சியில்லை. அவ்விரண்டும் அங்கங்கே வேறுபட்டிருக்கும். அந்த நாட்டிலே பல வகையான தானியங்கள் விளைகின்றன; திராட்சம் செய்கைபண்ணப்படுகின்றது; திராட்ச இரசத்தினால் நல்ல பானம் உண்டுபண்ணப்படுகின்றது. அங்குள்ள திரான்சில்

வேனியா முதலிய பகுதிகளில் மலைகளும் சிறந்த பெருங் காடுகளும் அனேகம். ஆகிலும் பொன், வெள்ளி, இரும்பு, இரசம் முதலிய லோகங்கள் உண்டாகும் சுரங்கங்களே அத்தேசத்தின் பிரதான செல்வமாம். அங்கே சில சிறந்த வர்ணக்கற்களும் உண்டு. முற்காலத்திலே பிரெஸ்புர்க் என்னும் பட்டணம் அதற்கு இராஜதானியாயிருந்தது. இப்பொழுது அதின் இராஜதானி புத்தர்பெஸ்த் என்பது; அது இரண்டு நகரங்கள் ஒன்றாகச் சேர்ந்தது. அத்தேசத்தில் அனேக பிரதான நகரங்களும் பெரிய நதிகளும் உண்டு. அவைகளுக்குள்ளே டானியூப், டீயிஸ், டிரேவ், மார்ச்சு என்னும் நதிகள் முதன்மையானவைகள். அற்றிலா அரசனுடைய இராச்சியபாரம் ஒழிந்தபின்பு, ஹங்கெரி இராச்சியமானது ஐரோப்பிய துரைத்தனங்களுக்குள் ஒருபொழுதும் தலைமை பெற்றிருக்கவில்லை.

---

## துருக்கியதேசம்.

ஐரோப்பாவைச் சேர்ந்த துருக்கியதேசத்தின் ஒரு பங்கானது, முற்காலத்திலே கிரேக்க இராச்சியத்தின் விசேஷமான ஒரு மாகாணமாயிருந்தது. கிறிஸ்து அவதரிக்க நூறு வருஷங்களுக்குமுன், அதுவும், கிரேக்க இராச்சியத்தைச் சேர்ந்த மற்றப் பகுதிகளும் உரோமைத் துரைத்தனத்தாரால் ஜெயிக்கப்பட்டன. அல்லாமலும், இப்பொழுது துருக்கியா என்று பெயர் வழங்குகிற தேசத்தை, முன்பு முழுமையும் அவர்களே கைவசப்படுத்தியிருந்தார்கள். அது சில நூற்றாண்டளவும் அவர்களுக்குள் கட்டுப்பட்டிருந்தது. மாட்சிமையுள்ள உரோமைச் சக்கரவர்த்தியாகிய கொன்ஸ்றன்தையின் என்பவன் ௩உ௰-ம் ஆண்டில் அங்கே அலங்காரமான பட்டணம் ஒன்றைக் கட்டி, அதற்குத் தன் நாமத்தின்

படியே கொன்ஸ்ற்றன்திஞேபல் * என்று பெயரிட்டான். அவனுடைய காலத்தின் பின் அது முன்னிலும் அதிக பெரிதாய்க் கட்டிச் சிறப்பிக்கப்பட்டது. அதுவே இப்பொழுது துருக்கிய தேசத்தின் இராஜதானியாம். பின்பு வேறு ஒரு சக்கரவர்த்தி மேற்சொல்லிய மாகாணங்களை உரோமை இராச்சியத்தினின்று பிரித்து, அவைகளைக் கிறீஸ், சின்ஞசியா என்னும் தேசங்களுடனே ஓரே இராச்சியமாகச் சேர்த்து, அதற்குப் பைசன்தையின் இராச்சியமென்று பெயரிட்டான் அந்த இராச்சியம் ௫-ம் நூற்றுண்டு தொடங்கி, க௫-ம் நூற்றுண்டுவரையில் எவ்வளவும் ஒழுங்குத் தாழ்வில்லாமல் நிலைத்திருந்தது. பின்பு துருக்கியர் † என்னும் சாதியார் அதைப் பிடித்து நாசப்படுத்திஞர்கள். அவர்கள் முன்னமே ஆசியாக்கண்டத்தில் வீரமும் இராணுவ பலமுமுள்ளவர்களாயிருந்து, அப்புறம் சீரியா, சின்ஞசியா, பலஸ்தீஞ, அராபியா, எகிப்து முதலான தேசங்களை ஜெயித்தார்கள்: பின்பு அந்தத் துருக்கியர் ஐரோப்பாக்கண்டத்திற் சென்று, பைசன்தையின் இராச்சியத்தைச் சார்ந்த சில மாகாணங்களிலே வாசமாயிருந்தார்கள்; அப்பால் அவர்கள் கொன்ஸ்ற்றன்திஞேபல் நகரத்தைப் பிடித்து, அதையே தங்கள் இராஜதானியாக ஏற்படுத்தி, துருக்கிய இராச்சியத்தை ஸ்தாபித்தார்கள். அந்த இராச்சியத்திற்கு அவர்களுடைய மகா பிரதானியாகிய ஒத்மன் என்பவனுடைய பெயர் கொடுக்கப்

---

* துருக்கியசாதியார் கொன்ஸ்ற்றன்திஞேபல் நகரத்தை "எஸ்ற்றும்புல்" என்பார்கள்.

† துருக்கியசாதியாருடைய பூர்வோத்தரத்தைக்குறித்து நிச்சயமாக ஒன்றும் தெரியவில்லை. அவர்கள் இன்ஞரொன்று முதல் முதல் கூ-ம் நூற்றுண்டில் அறியப்பட்டார்கள். அப்போது அவர்கள் அல்த்தாய் மலைகளிற் குடியிருந்ததாகத் தெரியவருகின்றது. கந-ம் நூற்றுண்டுக்கு முன்பு அவர்கள் அதிக வல்லமையுடையவர்களாய் இருக்கவில்லை.

யட்டது. கசு-ம் நூற்றுண்டில் ஒத்மன் என்பவன் அரசாண்ட காலத்தில், அவர்கள் பெருமையிற் சிறந்தவர்களாயிருந்தார்கள். அந்நாள் முதல் இந்நாளளவும் அந்த ஒத்மனுடைய குடும்பத்தார்களே இராசரிகம்பண்ணிவருகிறுர்கள்.

ஐரோப்பாக்கண்டத்தைச் சேர்ந்த துருக்கியதேசத்தின் எல்லைகள் - கருங்கடல், மார்மோராகடல், ஆர்க்கிப்பெலெகோ, அதிரியாற்றிக்கடல், ஆஸ்ற்றிய இராச்சியம, டானியூப் நதி இவைகளே; ஆசியாக்கண்டத்திலுள்ள சின்ஞுசியா, சீரியா, பலஸ்தீனு என்னும் நாடுகளும் துருக்கிய அரசாட்சியைச் சேர்ந்த பகுதிகளாம். மேலும், ஆர்க்கிப்பெலெகோவிலுள்ள அனேக தீவுகளும், சீப்புறு, கண்டியா என்னும் தீவுகளும் அதற்கே ஆதீனமாம். எகிப்துதேசம் அதற்குப் பகுதி கொடுக்கின்றது; அங்கே பாக்ஷா என்னும் அரசன் வமிசபாரம்பரையாகச் சுயாதீனம் பெற்று அரசாளுகிறுர். முன்பு கிரேக்கதேசமும் துருக்கிய இராச்சியத்திற்கே ஆதீனமாய் இருந்தது. இந்த நூற்றுண்டிலோ, அங்குள்ள குடிகள் கலகஞ்செய்து, ஐரோப்பாவிலுள்ள பிரதான துரைத்தனங்களின் உதவியினுல் சுயாதீனராகி, கஅ௩௩-ம் வருஷத்திலே தங்களுக்கு ஒரு அரசனைத் தெரிந்து ஏற்படுத்தினுர்கள்.

துருக்கிய இராச்சியத்திலே வெப்பம் குளிர்ச்சி இவ்விரண்டினுலும் நல்ல சௌக்கியம் உண்டு. நிலம் வளங்கொண்டதும், தேசம் சிறந்ததுமாயிருக்கின்றது. அங்கே எவ்வகையான தானியங்களும், பழம் தரும் மரங்களும், புஷ்பசாதிகளும் உண்டு. அவற்றுள் நெல், கோதுமை, அபினி, புகையிலை, அத்தி, ஒருவகை அல்லோன்மரம் ஆகிய இவைகளே முக்கியமானவைகளாம். சாயம்போடுவதற்கு அல்லோன்மரம் அதிக உபயோகமாயிருப்பதினுல், அது வியாபாரத்துக்காகப் பிற தேசங்களுக்குத் திரளாய்

அனுப்பப்படும்: அல்லாமலும் ஆட்டுமயிரும், பதமிட்ட தோலும் அதிகமாய் உண்டு. பட்டுப்பூச்சிகளுக்கு ஆதாரமாகக் கம்பளிகொண்டான்செடிகள் பெரிய தோட்டங்களிற் பயிரிடப்படும்.

துருக்கிய இராச்சியத்திலே சில பெரிய ஆறுகளும், அனேக மலைகளும் இருக்கின்றன: அவற்றுள் பால்க்கன் என்னும் தொடர்ச்சியான மலைகள் முக்கியமானவைகள்: அந்த மலைகளில் விதம் விதமான லோகங்கள் வெட்டியெடுக்கப்படுகிற சுரங்கங்கள் உண்டு. மாட்சிமையுள்ள நகரமாகிய கொன்ஸ்ற்றன்திநோபல் என்பது ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்கும் நடுவில் ஒரு இறங்கு துறையாயிருப்பதினாலும், அதின் கரை, பயணக்கப்பல்கள் அபாயமில்லாமல் ஒதுங்கி நிற்பதற்கு வசதியாயிருப்பதினாலும், அது எவ்வகையான வியாபாரங்களையும் நடத்துவதற்கு ஏற்றதாயிருக்கின்றது. அங்கே அதிக வியாபாரம் நடக்கின்றதென்பது மெய்தான்: ஆகிலும், வியாபாரம் விர்த்தியாகத்தக்க அளவிற்கு இன்னும் வந்து எட்டவில்லை. துருக்கிய இராச்சியத்தில் எங்கும் சகல விதமான வியாபாரவஸ்துக்களையும் எளிதில் உண்டாக்கக்கூடியதாயிருந்தும், ஜனங்கள் முயற்சியில்லாதவர்களாயிருப்பதினால், இந்தக் குறைச்சல் உண்டாயிற்று. வேளாண்மைத்தொழில் அசட்டைபண்ணப்படுகின்றது; நிலம் அதிகமாய்ப் பயிர்செய்யப்பட்டிருக்கவில்லை; சுரங்கப்பொருள்கள் வெட்டியெடுக்கப்படவில்லை; நீர் பாய்ச்சுவதற்கு அடுத்த கட்டடங்களாவது, கால்வாய்களாவது இல்லை; சாலைகள் அனேகம் இல்லை. குடிச்சனங்கள் குறைவு; அவர்கள் ஒரே இடத்திற் சேர்ந்திராமல், அங்கங்கே சிதறுண்டிருக்கிறார்கள். அங்கே சில பெரிய பட்டணங்கள் இருந்தும், அவைகளில் குடிகள் அதிகம் இல்லை. சென்ற இரண்டு

நூற்றாண்டுகளுக்குள்ளாக விசேஷமாய் அங்கிருக்கும் துருக்கிய ஜனங்களின் தொகை அதிகம் குறைந்துபோயிற்று. அங்கே துருக்கியர் தவிர, கிரேக்கர், யூதர், ஆர்மீனியர் என்னும் சாதியார்களும் இருக்கிறார்கள். துருக்கியருடைய புத்திக்குறைவினாலும், அசட்டையினாலும் அவர்களுக்குள்ளே அப்போதப்போது உண்டாகிற கொள்ளை வியாதியினால் அனேகர் இறந்துபோகிறார்கள்: ஆதலால், அங்குள்ள மறு சாதியாரான ஜனங்கள் இரண்டு பங்கும், அவர்களோ ஒரு பங்குமாய் இருக்கிறார்கள். அவர்கள் சோம்பலும், பேடித்தனமும், அறியாமையும் உடையவர்கள். வீதிகளிலுள்ள அழுக்கு, அசுத்தமான வாயு, வெப்பம், ஜனநெருக்கம் ஆகிய இந்தக் காரணங்களினாலேயே பலவித நோய்களும், விசேஷமாய் மேற்சொல்லிய கொள்ளைவியாதியும் உண்டாகின்றனவென்பதாய் அந்தத் துருக்கியர் அறிந்தும், தங்கள் பிரதான பட்டணங்களின் வீதிகளைத் தானும் பெருக்கிச் சுத்திசெய்யாதிருக்கிறார்கள்.

துருக்கியசாதியார் அனுசரிக்கும் மார்க்கம் மகமதுமார்க்கமாயிருப்பதினால், அவர்கள் இப்படிச் சோம்பரும், உணர்வில்லாதவர்களுமாயிருக்கிறார்களென்று சிலர் சொல்லுகிறார்கள். அந்த இராச்சியத்தில் இருக்கிற கிறிஸ்தவர்களும் யூதச்சனங்களுமே ஆண்மை, ஊக்கம், முயற்சி என்னும் குணங்களை உடையவர்கள்: அங்குள்ள வியாபாரம் எல்லாம் அவர்களால் நடத்தப்படுகின்றது. கொன்ஸ்ற்றன்திநோபல்நகரத்தின் துறையில் நிற்கிற கப்பல்கள் பெரும்பாலும் பிற தேசத்தாருடையவைகளாம். பொஸ்பரஸ் என்னும் சமுத்திரக்கால்வாயில் ஓடுகிற புகைக்கப்பல்களும் அங்கிளோசாதியாருடையவைகளே.

துருக்கிய தேசத்திலே நெசவுபண்ணப்படுகிற முக்கி

யமான வஸ்துக்கள் பட்டுப்புடைவைகளும், இரத்தினக்கம்பளங்களுமாம். அந்த இரண்டு சரக்குகளும் பிற தேசத்திற்குத் திரளாய் அனுப்பப்படும். துருக்கியதேசத்திற்செலவாகிற காப்பி, சர்க்கரை, பருத்திநூல், புடைவை காகிதம், நிலக்கரி, விதம் விதமான கூரிய இருப்பாயுதங்கள், வெட்டுமரம், வீட்டுத் தட்டுமுட்டு முதலான வஸ்துக்கள் யாவும் பிற தேசத்தினின்று வருகின்றன.

துருக்கியதேசத்திலே வாசமாயிருக்கும் குடிகளில், கிறிஸ்தவர்களும் யூதருமே விவேகத்திலும் உற்சாகத்திலும் சிறந்தவர்களாம்; ஆகிலும், துரைத்தன சம்பந்தமான உத்தியோகங்களும், அதிகாரமும் துருக்கிய சாதியார்களுக்கேயல்லாமல், மற்றெவர்களுக்கும் கொடுக்கப்படுவதில்லையென்று திட்டஞ்செய்யப்பட்டிருக்கின்றது. துருக்கியரும் மகமதீயரும் அல்லாத மற்றச் சனங்களுடைய உயிராவது, பொருளாவது அபாயமில்லாமற் காக்கப்படுவதற்குச் சில வருஷங்களுக்குமுன் நியாயப் பிரமாணங்களிலே யாதொரு வரையறை செய்யப்பட்டிருக்கவில்லை. சமய விஷயத்திலே கிறிஸ்தவர்களுக்கும் யூதருக்கும் பல கொடிய துன்பங்கள் நேரிட்டும், அதைக்குறித்து அரசாட்சியார் விசாரிக்கவில்லை. எந்த மகமதீயனாவது தன் சமயத்தைத் தள்ளி வேறு சமயத்தை அனுசரித்தால், அவனைக் கொன்றுபோடவேண்டுமென்று ஒருசட்டம் விதிக்கப்பட்டிருக்கின்றது. துருக்கியதேசத்தின் அரசனுக்குச் சுல்த்தான் என்று பெயர். அவர் ஏகாதிபதியும், கொடுங்கோல் அரசனுமாய் இருக்கிறார். தமக்கு இஷ்டமானவர்களை மந்திரிகளாகவும், வேறு துரைத்தன உத்தியோகஸ்தர்களாகவும் ஏற்படுத்தவும், முன் இருந்த உத்தியோகஸ்தரை முகாந்தரம் சொல்லாமல் தள்ளவும், வேண்டுமானால் அநியாயமாக எவர்களுடைய பிராணனையும் வாங்கிப்

போடவும் அரசனுக்கு அதிகாரம் உண்டு. காரியத்தின் சீர் இப்படி இருப்பதினால், அங்கே உத்தியோகஸ்தர் வகுப்பைச் சேர்ந்த பெரியோர்களுக்குள் பொய்யும், புரட்டும், கைக்கூலிவாங்கும் வழக்கமும் சாதாரணமாகத் தலைப்பட்டன. "துரைச் சித்தம் க்ஷணப் பித்தம்" என்பதற்கு ஏற்க, அரசன் அடிக்கு ஒரு நினைவு கொண்டு நடப்பதினால், "அரசன் எவ்வழி அவ்வழி குடிகளும்" என்றபடி, அங்குள்ள மந்திரிகளும் உத்தியோகஸ்தர்களும் தங்கள் அதிஷ்டவீனத்தினாலே உத்தியோகத்தினின்று தள்ளப்படுமுன், சமயம் பார்த்து, சனங்களை அடக்கி, ஒடுக்கி, அவர்கள் பொருளை அபகரித்து, இப்படி அநியாயமாகப் பணம் தேடுகிறார்கள். ஒழுக்கம், உண்மை முதலான குணங்களினால், ஒருவன் தன் உத்தியோகத்தைப் பறிகொடாமல் காத்துக் கொள்வேனென்று எண்ணுவதற்கு இடம் இல்லை. கீழ்மையான உத்தியோகங்களில் ஏற்பட்டிருக்கிற எளிய சனங்கள் முதல், அரசனாகிய சுல்த்தான்வரையிலுள்ள அனைவரும் அநியாயமாகவே நடக்கிறார்கள். இந்தப்படி அரசாட்சியில் நேரிட்டிருக்கிற ஒழுங்குத் தாழ்ச்சிகளினால் உண்டான நிர்ப்பந்தங்கள் நீங்காமல் என்றைக்கும் நிலைத்திருக்கின்றன. உயிர், பொருள் இரண்டும் தேசநியாயப்பிரமாணங்களினாலே சகாயம் பெறாதிருக்குமானால், குடிகளின் தொகை வரவரக் குறையும்; கைத்தொழில் முயற்சி சித்தியில்லாமற் சிதையும்; அநியாயமாகத் துன்பப்படுகிறவர்களுடைய குறைகளைக் கேட்டு, அவர்களுக்கு நியாயம் செய்யாத இராச்சியங்களில், அக்கிரமங்களும் கொடிய குற்றங்களும் அதிகமாய் நடக்கும்: எந்த இராச்சியத்தாராவது விவேகத்திலும், உண்மையிலும் சிறந்தவர்களான பெரியோரை விட்டு, குடிகளைப் பலாத்காரமாய் ஒடுக்கத் திராணியுள்ள திரவியவான்களைத் தங்களுக்கு அரசராகத் தெரிந்து ஏற்படுத்துவார்களானால், அங்குள்ள குடிகள் சோம்பரும், அவிவேகிக்

ளும், சோழிந்தவர்களும், அடிமைகளுக்கு ஒப்பானவர்களு மாவார்கள்: அவர்களுக்குள் நிர்ப்பந்தமும், அரசனை மதி யாமையும், குழப்பமும், கலகமும், அழிவும் மேலிட்டு நடக் கும்; பார்க்குமிடத்தில் அந்தப்படிக்கே துருக்கிய இராச் சியத்திற் சம்பவித்திருக்கிறது. விசேஷமாய் ஆசியாவிலே துருக்கிய அரசாட்சியைச் சேர்ந்த அனேக நகரங்களும், கி ராமங்களும், மாகாணங்களும் விசாரணையில்லாமற் பாழ டைந்து வெறுமையாயிருக்கின்றன. அங்கே குடியிருக்க மனுஷர் இல்லை. முன் அங்கிருந்த குடிகளில் கட்கத்தாற் சங்கரிக்கப்பட்டவர்கள் அனேகர்; தங்கள் கைப்பொருளை யெல்லாம் அநியாயமாகப் போக்கடித்து, அடாவரி கொடு த்து, ஆற்ருமல் ஓடிப்போனவர்கள் அனேகர்.

ஊண், உடை, நடை, பாவனைமுதலிய விஷயங்களில், துரு க்கியர் ஆசியாக்கண்டத்திலுள்ள ஜனங்களுக்குச் சமானரா யிருக்கிருர்கள். ஐரோப்பாதேசத்திலே நாற்காலி, பீடம், கத்தி, முள் முதலான உபகரணங்கள் இல்லாமல், கட்டிலி லும் இரத்தினக்கம்பளத்திலும் உட்காந்து, போசனத்தைக் கையினல் அள்ளி உண்ணும் வழக்கமுள்ள சாதியார் துருக் கியரோயொழிய வேறில்லை. விசேஷமாய்ப்பெண்களை நட த்துகிற விஷயத்தில், துருக்கியருக்கும் மற்ற ஐரோப்பிய சாதிகளுக்கும் அதிக பேதம் உண்டு. பொதுவாக ஆசியாக்க ண்டத்தில் நடக்கிற வழக்கத்தின்படியே, அவர்கள் தங்கள் ஸ்திரிகளை வீடுவாசலில் உல்லாசமாய் உலாவித்திரிய விடா மல், அடிமைகளைப் போல அடைத்துவைத்து, மிகவும் சிறு மைப்படுத்துவார்கள். இந்த வழக்கம் ஐரோப்பாக்கண்டத் திலுள்ள வேறு எந்தச் சாதியாருக்குள்ளும் கண்டதில்லை. அங்குள்ள ஸ்திரிகள் இப்படி யோக்கியத்தாழ்வாகவும், அ லட்சியமாகவும், நேசக்குறைச்சலாகவும் நடத்தப்படும் கா லமளவும், அவர்கள் புருஷரும் புத்திரரும் எவ்வளவாவது

திருந்தி, நல்லொழுக்கத்தினாற் சிறந்திருப்பது அருமை. துருக்கிய சாதியாருக்குள்ளே இலக்கண இலக்கியங்கள் ஒன்றும் இல்லை. பொதுவாகச் சொல்லில், அவர்கள் கல்வியில் எவ்வளவும் பயிற்சியில்லாதவர்கள். எழுத்துக்கூட்டி வாசிக்கத் தெரிந்த சிலரோ, கோரான் புஸ்தகம் ஒன்றுதவிர, வேறு நூல்களை வாசிக்கிறதில்லை. அவர்கள் சிற்பவேலை ஒன்றில்மாத்திரம் திருத்தம் அடைந்திருக்கிறார்கள்: ஆதலால், கொன்ஸ்ற்றன்திநோபல் நகரத்திலே கோரி முதலான பல கட்டடங்கள் சிங்காரமாகச் செய்யப்பட்டிருக்கின்றன.

இப்பொழுது அரசாளுகிற சுல்த்தான் அனேக சீர்த்திருத்தங்களைச் செய்திருக்கிறார். சுல்த்தானும், முதல் மந்திரியாகிய ருஸ்சிட் பாக்ஷாவும் தீர்க்க ஆலோசனை செய்து, முக்கியமான பல விஷயங்களிலே முன் இருந்த குறைகளை விலக்கி, அதிக விர்த்தி காணும்படி பண்ணியிருக்கிறார்கள். அந்த மந்திரி முன்பு அனேக வருஷகாலமாய் அங்கிளோதேசத்திலே ஸ்தானாபதியாகப் போயிருந்தவர்: அவர் அங்கிருந்த காலத்தில் அத்தேசத்தவர்களுக்குத் தேசநியாயப்பிரமாணத்தினாலும் சுயாதீனத்தினாலும் உண்டாயிருக்கிற பாக்கியத்தையும் சிலாக்கியங்களையும் பிரத்தியட்சமாய்க் கண்டவர்: பின்பு அவர் தமது தேசத்திற்குத் திரும்பினபொழுது, தாம் அங்கிளோதேசத்திலே பார்த்து அறிந்துவந்த மேலான சுக அனுபவங்கள் அங்கேயும் உண்டாவதற்கு உதவியான சில ஏற்பாடுகளைச் சித்தஞ்செய்ய விரும்பினார்; விரும்பி, அதற்கு அடுத்த சில பிரயத்தனங்களைச் செய்தபொழுது, துருக்கியசாதியார் சிறியோர், பெரியோர் யாவரும் ஒன்றாகத் திரண்டு, அவர் எடுத்த முயற்சிக்கு விரோதம்பண்ணினார்கள். ஆகிலும் சுல்த்தான் அவர் பட்சமாய் நின்றதினால், அவர் தமது விருப்பத்தின்

பிரகாரம் அனேக திருத்தங்களை ஏற்படுத்தி நிறைவேற்றினார்; அவற்றுள் அவரவர் இஷ்டத்தின்படியே எவ்வகை மதங்களையும் அனுசரிப்பதற்குக் குடிகளுக்கு இடங்கொடுத்தலும், துருக்கியர், கிறிஸ்தவர்களென்று எவ்வளவும் பேதஞ்செய்யாமல், இரு திறத்தாருக்கும் தர்ம நியாயமாகச் சகாயம்பண்ணுதலும், அங்குள்ள குடிகள் அனைவருக்கும் கல்விப்போதனை செய்யும்படி பாடசாலைகளை ஸ்தாபித்தலுமே அதிக பிரயோசனமுள்ள ஏற்பாடுகளாம். அந்தப் பாடசாலைகளில் அனேக பிள்ளைகள் ஒழுங்காகப் படித்துவருகிறார்கள். அவர்கள் விசேஷமாய் எங்கிலீஷ்பாஷையை மிகுந்த விருப்பத்தோடு படித்துவருகிறார்கள்.

துருக்கியதேசத்துப் பெண்கள் பூர்வத்தில் இருந்தபடி இப்பொழுது மூடமான நிலைமையில் இருக்கவில்லை. அவர்களிற் சிலர் கல்வி கற்கிறார்கள்; ஆதலால் குடும்பங்களிலே அவர்களுக்கு வரவரச் சற்றே கணிசம உண்டாகின்றது. பார்க்குமிடத்தில் அந்தப் பெண்கள் கனம்பெறத் தக்கவர்கள்தான். மேற்சொல்லிய திருத்தமான ஏற்பாடுகளினால் உண்டாகத்தக்க நன்மை அதிகம்.

கொஞ்சக் காலத்திற்குமுன்பு துருக்கியருக்கும், ரூஷியருக்கும் கொடிய யுத்தம் நேரிட்டது. அதில் அங்கிலோ பிராஞ்சிய துரைத்தனத்தார்கள் அந்தத் துருக்கியருக்குத் துணைநின்று, அவர்களுக்கு அநியாயம் செய்யத் தலைப்பட்ட சத்துருக்களை அடக்கினார்கள். பூர்வத்திலே தங்கள் சாதியாருக்கு உண்டான சமர்த்துக்கும் ஆண்மைக்கும் எவ்வளவாகிலும் பங்கம் வராதபடிக்கு, துருக்கியர் அந்தச் சமயத்திலே மிகுந்த உற்சாகமாய் நடந்தார்கள். எப்படியும், அவர்கள் சீர் இப்பொழுது அதிகம் தாழ்வு அடைந்திருக்கின்றது. குடிகளின் தொகை குறைந்துபோ

யிற்று. துரைத்தனத்தார் குடிகளுக்குச் செய்கிற நிஷ்ரேங்கள் அனேகம். இத்தனை கொடிய துரோகங்களையெல்லாம் சகித்துச் சகித்துத் தங்களால் ஆற்றாத சமயத்தில், குடிகளில் அனேகர் அரசனுக்கு விரோதமாய்க் கலகஞ்செய்தார்கள். ஆதலால், துருக்கிய துரைத்தனத்துக்குச் சுதேசிகள் முயற்சியால் எவ்வளவும் பலம் இல்லாமற் போயிற்று. போகவே, மந்திரியாகிய ருஸ்சிட் பாக்ஷா என்பவரும், சேனைத்தலைவராகிய ஓமர் பாக்ஷா என்பவரும் எத்தனை ஆண்மையும், புகழும், வீரமும் பெற்றிருந்துமென்ன! துருக்கியருக்கும், ருஷியருக்கும் போர் நெருங்கிக்கொண்டபொழுது, அங்கிளோ பிராஞ்சிய துரைத்தனத்தார்கள் தங்கள் வலிமையான இராணுவங்களையும் போர்க்கப்பல்களையும் அனுப்பி, உற்ற சமயத்தில் உயிர்த்துணையாக நின்று, அவர்களுக்கு உதவிசெய்யாமற் போனதுண்டானால், அவர்கள் ருஷியருக்குச் சிறிதாகிலும் வகை சொல்லமாட்டுவார்களா?

ஐரோப்பாக்கண்டத்திலுள்ள மற்றத் தென் சீமைகளைப் போலத் துருக்கிய இராச்சியமும், ௧௬-ம் நூற்றாண்டிலே மிகுந்த மாட்சிமையுள்ள ஸுலிமான் அரசன் ஆளுகைசெய்த காலத்தில், அதிகாரத்திலும், அரசாட்சியிலும், செல்வத்திலும் மகிமை அடைந்திருந்தது.

---

## பிரான்ஸ் தேசம்.

கிறிஸ்து அவதரிக்கச் சில வருஷங்களுக்குமுன் உரோமை இராச்சியத்தார் பிரான்ஸ் தேசத்தை வசப்படுத்தி, அரசாண்டபொழுது, அத்தேசத்திலே மூன்று பெருஞ்சாதியார்களும், பல சிறு கோத்திரத்தார்களும் குடியிருந்தார்கள். அவர்களுக்குள் முக்கியமான சாதியாருக்குச்

செல்த்தியர் என்று கிரேக்கர் பெயரிட்டார்கள்: ஆகிலும் சாதாரணமாய் வழங்கிய அவர்கள் சாதிப்பெயர் காலியர் என்பது. உரோமர் அந்தத் தேசத்திற்குக் காலியா, அல்லது கால் என்று பெயரிட்டார்கள். அதுமுதல் அனேக நூற்றாண்டுவரையில் அந்தப் பெயரே வழங்கிவந்தது.

பின்பு டானியூப் நதிக்கு வடக்கேயுள்ள தேசத்தினின்று படையெடுத்து, உரோமை இராச்சியத்தின் எல்லைக்குள் வெள்ளம் போலச் சென்ற மிலேச்ச சாதியார், கால் தேசத்தைத் தங்கள் அதிகாரத்திற் கட்டிக்கொண்டார்கள். அப்போது அங்கிருந்த வெவ்வேறு சாதியாருக்குள்ளே பிராங்கியர், அல்லது சுயாதீனர் என்பவர்கள், அதிக ஜன விர்த்தியும் திராணியும் உடையவர்களாயிருந்தார்கள். அவர்கள் நாளாவர்த்தியிற் கொஞ்சம் கொஞ்சமாய் அத்தேசத்தைக் கைவசமாக்கி, அப்புறம் ரு-ம்நூற்றாண்டில் கிலோவிஸ் என்னும் அரசன் அவர்களை ஆளுகை செய்த காலத்தில், தேசமுழுவதையும் சுயாதீனப்படுத்தினார்கள். பின்பு தங்கள் சாதிப் பெயரின்படியே அவர்கள் அத்தேசத்திற்குப் பிரான்ஸ் என்று பெயரிட்டார்கள். இந்நாள்வரைக்கும் அந்தப் பெயரே வழங்கிவருகின்றது. ஆதியிலே பிரான்ஸ் தேசத்தை அரசாண்ட இராசாக்களில் ஒருவனாகிய கிலோவிஸ் என்பன் ஒரு பராக்கிரமசாலி. அவன் காலத்திலேயே கிறிஸ்து மார்கம் பிரான்ஸ் தேசத்தில் போதிக்கப்பட்டு, வரவர எங்கும் பரவிற்று. அவனும் கிறிஸ்தவளாயிருந்த தனது இராக்கினி மூலமாய்க் கிறிஸ்துமார்க்க உபதேசங்களின் உண்மையைக் கண்டறிந்து, அந்தச் சமயத்தை அனுசரித்தான்.

பிற்பாடு பட்டத்திற்கு வந்த அரசரில் ஷார்லிமான் என்பவன் மிகவும் கீர்த்திபெற்றவனாயிருந்தான். அவன் பிரான்ஸ்தேசத்தையல்லாமல், ஜெர்மானி தேசத்தையும், இற்

றலிதேசத்தின் ஒரு பகுதியையும் ஜெயித்து அரசாண்டா ன். ௮௦௦-ம் ஆண்டில் அவன் மேற்குத்தேசத்தின் சக்கர வர்த்தியென்று பட்டம்பெற்று முடிசூட்டப்பட்டான். இ ராஜபட்டம் ௨௦௦ வருஷமளவும் அவனுடைய குடும்பத் தாருக்குள் நிலைப்பட்டிருந்தது. அப்புறம் கேபெத் என் பவனுடைய குடும்பத்திலுள்ள அரசர்கள் துரைத்தனஞ் செய்யத் தொடங்கி, சென்ற நூற்றாண்டுமுடியுமளவும் அ வர்களே அரசாண்டார்கள்.

மத்தியகாலத்திலே பூலோகத்திற் சம்பவித்த வர்த்தமா னங்கள் எல்லாவற்றுள்ளும் சிலுவையின் யுத்தம் என்பது முக்கியமானது. அது முதல்முதல் பிராஞ்சிய தேசத்தில் உண்டாயிற்று. முதல் யுத்தம் ௧௧-ம் நூற்றாண்டிலும், கடைசி யுத்தம் ௧௩-ம் நூற்றாண்டிலும் நடந்தன. வேதபூ மியாகிய பலஸ்தீனநாட்டைத் துருக்கிய சாதியார் கைவச ப்படுத்தியிருந்தார்கள். அது கிறிஸ்தவர்களுக்கு மிகுந்த மனமடிவாயிருந்தது. அவர்கள் மத அபிமானம் கொ ண்டு, தங்களுக்கு முக்கியமாயிருந்த அந்த ஸ்தலத்தைத் துருக்கியர் கையினின்று மீட்கும்படி, மேற்சொல்லிய சி லுவையின் யுத்தத்தைத் தொடங்கினார்கள்: ஆதலால், அ தற்குப் பரிசுத்த யுத்தம் என்றும் பெயருண்டாயிற்று. ஐ ரோப்பாவிலுள்ள, அங்கிலேயரும், பிரான்ஸ் முதலான தே சங்களில் இருந்த கிறிஸ்தவர்களும் அப்போதப்போது பெ ரிய சேனைகளாய்த் திரண்டு, தங்கள் அரசரோடும் பிரபு களோடும் கூடி, சத்துருக்களாகிய துருக்கியரை முறிய டிக்க நினைத்து, துணிந்த நெஞ்சராகப் புறப்பட்டுப்போ னார்கள். அப்படியே பகுதி பகுதியாய்ப் படையெடுத் துப்போன பட்டாளங்களில், ௧௨-ம் நூற்றாண்டிற் போ னவர்கள் மிகவும்பலத்த வீரவான்களாய் இருந்தார்கள். "சிங்கநெஞ்சன்" என்று மறு பெயர் பெற்ற அங்கிளோ அரசனாகிய ௧-ம் றிச்சார்ட் என்பவரும், பிராஞ்சிய

அரசனுகிய உ-ம் பிலிப் என்பவரும் சேனைத்தலைவர்க ளாய் ஏற்பட்டு, அவர்களை நடத்திச் சென்றார்கள்: அந்த யுத்தங்களினுல் ௩௦௦ வருஷகாலமளவும் உறுதியான காரியசித்தி ஒன்றும் காணவில்லை. கிறிஸ்தவர்கள் முற்றுகையிட்டு, அனேக பட்டணங்களைப் பிடித்துக்கொள்வதும், அவைகளைக் கட்டிக்கொள்ளத் திராணியில்லாமையினுலே, திரும்பவும் பறிகொடுப்பதும், ஒருகாலத்தில் உத்தண்டமாக யுத்தம்பண்ணி வெல்வதும், மறுபடி தோற்பதுமாயிருந்தார்கள். கடைசியில் அவர்கள் தொடங்கின காரியத்தை நிறைவேற்றக் கூடாதவர்களாய்ப் பலஸ்தீனுநாட்டைச் சத்துருக்கள் வசத்தில் இருக்க விட்டு, தங்கள்தங்கள் தேசங்களுக்குத் திரும்பினுர்கள. அது இந்நாள் வரைக்கும் அந்தத் துருக்கியருக்கே ஆதீனமாயிருக்கின்றது.

ஐரோப்பாவிலுள்ள துரைத்தனங்கள் எல்லாவற்றுள்ளும் பிராஞ்சிய துரைத்தனமானது, பூர்வகாலம் தொடங்கித் தலைமை பெற்றதாயிருந்தது. அங்கே ஆளுகைசெய்த அரசரில் அனெகர் மகிமையும் பிரதாபமுமுடையவர்களாய் இருந்தார்கள். அவர்களுக்குள் முதன்மையான கீர்த்திவந்தனுயிருந்த அரசன் கச-ம் லூவி என்பவர்: அவர் கஎ-ம், கஅ-ம் நூற்றுண்டுகளில் எ௩ வருஷமளவும் இராசரிகம் செய்தவர்; ஐரோப்பாவிலே அனேக யுத்தங்களைச் செய்து, வெல்வதும் தோற்பதுமாயிருந்தவர். ஆகிலும், கடைசியில் அவர் பட்சத்திலுள்ள சேனைத்தலைவர்கள் முறைக்குமுறை அங்கிளோ இராணுவங்களுக்குத் தோற்றுப் புறங்காட்டினதினுல், அவர் உண்டான சண்டையை அவ்வளவிலே நிறுத்தி, அங்கிளோ சாதியாரைச் சமாதானத்துக்கு வரும்படி கேட்கலாயிற்று. கிறிஸ்து மார்க்கத்தின் சீர்த்தேற்ற முயற்சியில்

பிராஞ்சியதேசத்தார் யாவரும் ஒத்தமொழியாய் ஒருபொழுதும் உடன்பட்டவர்களல்ல: ஆகிலும், அங்குள்ள பிரபுகளிலும் ஜனங்களிலும் அனேகர் சுவிசேஷமார்க்கத்தைத் தழுவி நடந்தார்கள். அவர்களுக்கு யூக்விநற்ஸ் என்கிற பெயர் உண்டாயிற்று. இந்தப்படி சுவிசேஷமார்க்கத்தின் முறைகளை அனுசரித்துக்கொண்ட எவர்களாவது, அந்த முறைகளைப் பகிரங்கமாய்த் தள்ளாதுபோனால், அவர்களைக் கொன்றுபோடவேண்டும், அதுதப்பினால், பிற தேசத்துக்கு அகற்றிவிடவேண்டும் என்பதாக மேற்படி லூவி அரசன் காலத்தில் ஒரு திட்டம் செய்யப்பட்டது. அந்தத் திட்டத்தினாலே தேசத்தில் உண்டான கெடுதிகள் அனேகம். கிறிஸ்தவர்களில் அனேகர் சுவிசேஷ சத்தியங்களை மறுத்துக் கடவுளுக்கு முன்பாகப் ஆத்துமதுரோகிகளாவதிலும், மேற்குறித்த சட்டத்தின்படி, புறத்தேசத்துக்குப் போய்விடுவதே உத்தமமென்று எண்ணி, தங்கள் தேசத்தினின்று போய்விட்டார்கள். அக்காலத்தில விவேகத்திலும், முயற்சியிலும், தேவபக்தியிலும் சிறந்தவர்களாயிருந்த எண்ணிறந்த ஜனங்கள் பிரான்ஸ் தேசத்திலிருந்து குடியெழும்பிப் போய்விட்டதினால், அதின் பெருமை அதிகமாய்க் குறைவுபட்டது. அந்தக் குறைவு இன்றளவும் நீங்காதிருக்கின்றது.

பிராஞ்சியசாதியார் போர்த்தொழிலில் மிகவும் உற்சாகமுள்ளவர்கள்: அன்னியதேசங்களைக் கைவசப்படுத்தி அரசாளுவதே அவர்களுக்கு இஷ்டம். அங்கிளோ முதலிய தேசங்களில் இருந்த சனங்களுடனே அவர்கள் வழக்கமாய் யுத்தஞ்செய்துவந்தார்கள். ௧௪-ம், ௧௫-ம் நூற்றுண்டுகளில் அங்கிளொ இராணுவங்கள் பிராஞ்சிய தேசத்திற் படையெடுத்துப்போய், பல விஸ்தாரமான மாகாணங்களை ஜெயித்தன. அப்பொழுது பிராஞ்சியர் பட்ட

அவதிக்கு அளவில்லை. அப்புறம் அங்கிலேயர், அத்தேசத்தை முழுவதும் அடக்கி அரசாளத் தலைப்பட்டார்கள்; தலைப்பட்டும், பிரான்ஸ் தேசத்தில் மிகுந்த வீரமும் ஆண்மையுமுள்ளவளாயிருந்த ஒருபெண், துணிகரமாய் எழுந்து, அத்தேசத்துக்கு நேரிட்ட பங்கத்தைக் காட்டி, இது கண்டும் இன்னும் உயிர்பிழைத்திருப்பதுபெருமையா? புகழா? என்று வறபுறுத்திப் பேசி, யாவரையும் கலகஞ்செய்யும்படி தூண்டிவிட்டாள். அப்பொழுது பிராஞ்சியர் மிகுந்த உரோசமும் முயற்சியும் கொண்டு, துணிந்து, அங்கிலேயருடனே யுத்தஞ்செய்து, அவர்களை ஓட்டிவிட்டார்கள். அப்புறம் பல முறை அவ்விரண்டு சாதிகளுக்கும் யுத்தம் நேரிட்டது. ஆகிலும், அதற்குப்பின் அங்கிலேயர் ஒருபொழுதும் அந்தத் தேசத்தைக் கட்டியாளும்படி துணியவில்லை.

௧௮-ம் நூற்றாண்டின் முடிவில் பிராஞ்சிய இராச்சியத்திலே மிகவும் பயங்கரமான கொடிய கலகம் ஒன்று சம்பவித்தது. யூதச்சனங்கள் சிதறுண்ட காலத்தின்பின் அதற்கு ஒப்பாக எந்தச் சாதியிலாவது கலகம் நடக்கக் கண்டதில்லை. அந்தக் கலகத்திற்குப் பிராஞ்சிய இராச்சிய பரிவர்த்தனம் என்று பெயர் வழங்கும். அக்காலத்தில் நெறிகெட்ட துஷ்டராகிய சில பேராசைக்காரர் சொல்லிக் கொடுத்த துர்ப்போதனையினால் காரியாகாரியங்களின் பக்குவம் தெரியாத நீசர்முதலாய் நற்குணமும், பரோபகாரமும் உடையவராயிருந்த தங்கள் அரசனாகிய ௧௬-ம் லூவியென்பவருக்கு விரோதமாய்க் கலகஞ்செய்து, அவரைச் சிங்காசனத்திலிருந்து விலக்கி, குடியரசாட்சியை ஏற்படுத்தினார்கள். பின்பு அவர்கள் அந்த அரசனைச் சிறைச்சாலையில் வைத்து, அவருக்கு வெகு பங்கமும் கொடுமையும் செய்து, பகிரங்கமாய்ச் சிரச்சேதம்பண்ணினார்

கள். சில நாள் சென்றதின்மேல், நல்ல சொரூபியும் மாட்சிமையுள்ளவளுமாயிருந்த அவருடைய பத்தினியையும் அந்தப்படி சிரச்சேதம்பண்ணினார்கள். அப்புறம் அந்தத் தேசத்தின் அரசாட்சி துஷ்டரும் இரத்தப்பிரியருமாகிய கொடிய பாதகர் வசத்தில் வந்தது.

அவர்கள் கனவிலாவது நினைப்பதற்கு அடாத பயங்கரமான நிஷ்டூரங்களையும், பழிகளையும் தாங்கள் செய்ததுந்தவிர, தங்கள் ஜனங்களும் இஷ்டப்பிரகாரம் அவைகளைச் செய்வதற்கு இடங்கொடுத்தார்கள். கடைசியில் அவர்களுக்கு வெவ்வேறு கொடிய விதங்களாய்த் தகுதியான மரண தண்டனை கிடைத்தது. அப்படி இருந்த காலத்தில், உலகமெங்கும் பெயர்படைத்த அதிவீரசூரனாகிய பொனெபார்ட் என்பவன் தோன்றினான். அவன் ௧எகூகூ-ம் ஆண்டில் பிரான்ஸ் தேசத்திற்கு முதல் மந்திரியாக நியமிக்கப்பட்டான்: அவன் இந்தப்படி துரைத்தன அதிகாரத்தைத் தன்வசமாக்கிக்கொண்டபின்பு, ௧அ௦௪-ம் ஆண்டில் அத்தேசத்திற்குச் சக்கரவர்த்தியாகப் பட்டாபிஷேகம் பெற்றான். அவன் தனக்கு முடிசூட்டும்படி சபைத்தலைவராகிய பாப்புவை உரோமாபுரியிலிருந்து வரவழைப்பித்தும், இராஜ அதிகாரத்தையும், முடியையும் தன் சுய முயற்சியாற் பெற்றுக்கொண்டதினால், தனக்குத் தானே முடிசூட்டிக்கொள்வது தகுதியென்று எண்ணி, அப்படிச் செய்தான். அவன் பத்து வருஷத்திற்குமேல் அரசாண்டான். அவன் அந்தக் காலத்திற்குள்ளாகக் கொஞ்சம் குறைய ஐரோப்பாதேசமுழுவதுக்கும் வெற்றிவேந்தனாகி, அங்கங்கே இருந்து ஆளுகைசெய்த அரசருடைய பட்டத்தை வாங்கியும், தனக்கு இஷ்டமான பெயர்களுக்குப் பட்டம் கொடுத்தும் வந்தான். அங்கிலோ துரைத்தனத்தார் மாத்திரம் அவனுக்குப் பயந்து ஒடுங்காமல், அவனுடனே நெரு

ங்கி எதிர்த்து நின்றார்கள். படையெடுத்துக்கொண்டு அங்கிளோகரைக்குப்போவதற்கு அவனால் ஒருபொழுதும் ஆகவில்லை. அங்கிலேயர் முதலாவது தேவ ஒத்தாசையினாலும், இரண்டாவது சமானம் சொல்வதற்கு அருமையான தங்கள் போர்க்கப்பல்களின் உதவியினாலும் அவனுடைய அதிகாரத்திற்கு அகப்படாமல், விலகிக்கொண்டார்கள். அங்கிலேயருடைய போர்க்கப்பல்கள் எப்பொழுதும் வெற்றியுள்ளவைகளாயிருந்தன. கடைசியாய் கஅ௦ரு-ம் ஆண்டில் அங்கிளோ துரைத்தனத்தாருக்கும், ஸ்பானிய பிராஞ்சிய துரைத்தனத்தார்களுக்கும் திராபல்கார் என்னும் இடத்தில் யுத்தம் நெருங்கினபோது, அங்கிளோ துரைத்தனத்தார் பட்சத்தில் மிகுந்த கீர்த்திப் பிரதாபமுடைய கப்பல் தளகர்த்தனாகிய லார்ட் நெல்ஸன் அவர்கள் தமது கப்பற்கூட்டங்களைக்கொண்டு, பிராஞ்சிய ஸ்பானிய போர்க்கப்பல்களைத் தவிடுபொடியாக அடித்து உடைத்து ஜெயமடைந்தார். ஸ்பானியருடைய போர்க்கப்பல்களுக்கு அப்பொழுது நேரிட்ட சேதம் இன்னும் நிவர்த்தியாகவில்லை: பிராஞ்சியரோ, அந்தச் சேதங்களை வரவர நிவர்த்தியாக்கி, இப்போ கொஞ்சக் காலமாய்த் தெளிவுபெற்றிருக்கிறார்கள். அப்புறம் ஸ்பானியர், தங்கள் தேசத்திற்குப் படையெடுத்துப்போன பிராஞ்சியரை, அங்கிளோ இராணுவங்களுடைய உதவியினால் ஓட்டிவிட்டார்கள். அதின்மேல் அங்கிளோ, ருஷிய, ஆஸ்த்திரிய, புருஷிய துரைத்தனத்தார்கள் ஒன்றாகச் சேர்ந்து, நபோலியனுடன் எதிர்த்து, யுத்தஞ்செய்து, அவனைக் கீழ்ப்படுத்தினார்கள். அவன் அவர்கள் கையில் அகப்பட்டு, ஆபிரிக்கா தேசத்திற்கு மேற்கே சமுத்திரத்திலுள்ள ஸேன்ட் ஹெலினாதீவிற்கு அனுப்பப்பட்டான். இப்படியே அவன் அந்தத் தீவிற் காவல் பண்ணப்பட்டிருந்து, கஅஉக-ம் ஆண்டு மரணமடைந்தான்.

நபோலியன் என்பவன் பட்டம் இழந்தபின்பு, முன் கொலைபாதகர் கையால் மடிந்த அரசனுடைய சகோதரன் தன் உரிமைப்பிரகாரம் அரசாளும்படி முடிசூட்டப்பட்டான். அவனுக்குப்பின் அவன் சகோதரன் பட்டாபிஷேகம் பெற்றான். அவன் இராச்சியபாரம் பண்ணுங்காலத்தில், கஅ௩0-ம்ஆண்டு பிரான்ஸதேசத்திலே மறுபடியும் ஒரு கலகம் உண்டாயிற்று; அந்தக் கலகத்தினிமித்தம் அவன் தன் அரசாட்சியை விட்டு, பரதேசம்போகப் பாத்தியப்பட்டான். அதின்மேல் தேசநியாயப்பிரமாணம் ஒன்றைப் புதிதாகச் சித்தஞ்செய்து, அதின்படி தவறாமல் நடப்பேனென்று, இராஜ குடும்பத்திலுள்ள வேறு ஒருவன் வாக்குக்கொடுத்தபொழுது, அவனையேஅரசனாக ஏற்படுத்தினார்கள்; அவன் பெயர் லூவி பிலிப்பு என்பது: அவன் பட்டம்பெற்றபின்பு, அரசாட்சி முழுமையும் தன் வசமாயிருந்தது கண்டு, தான் முன் எழுதிக்கொடுத்த உடம்படிக்கையை மதியாமல், பிராஞ்சிய சாதியாரை மிகவும் கொடுமையாய் அரசாண்டாலொழிய, அவர்களை அடக்குவது சங்கடமென்று எண்ணி, அப்படிச் செய்தான். அவன் கஅ வருஷகாலம் இராச்சியபாரம்பண்ணினான். பிற்பாடு கஅசஅ-ம் ஆண்டில் மறுபடியும் கலகம் உண்டாயிற்று; அப்பொழுது அந்த அரசன் பட்டம் இழந்து, அடைக்கலம் தேடி, அங்கிளோதேசத்திற்கு ஓடி, அங்கே சேர்ந்து, மரணமடைந்தான்.

பின்பு கொஞ்சக் காலமளவும் பிராஞ்சியதேசத்தார் அரசன் இல்லாதவர்களாயிருந்தார்கள். அங்கே அப்போதப்போது வெவ்வேறு விதமான துரைத்தன ஒழுங்குகள் நடந்தன. அப்புறம் கஅ௫க-ம் ஆண்டில் மேற்சொல்லிய நபோலியனுக்குத் தம்பி மகனாகிய லூவி நபோலியன் என்பவர் துரைத்தன அதிகாரத்தைக் கைக்கொண்டு, பிராஞ்

சியருக்குச் சக்கரவர்த்தியாய் ஆளுகைசெய்துவருகிறார். அவர் ஆதியிலே பிராணதண்டமான அநியாயங்களும், சதி சர்ப்பனைகளும் செய்தார்: இப்பொழுதோ, சற்றே செம்மையாக விவேகத்துடன் அரசாளுகிறார்: எப்படியும் அவருடைய அரசாட்சி பிடிவாதமும் கொடுமையுமுள்ளதாயிருக்கின்றது. முன் போல யாதொரு கலகமுமில்லாமல், பிராஞ்சிய சாதியார் இப்படி ஒழுங்காக எதுவரைக்கும் நடந்துவருவார்களோ, நபோலிய சக்கரவர்த்தியவர்கள் எக்காலமளவும் சிம்மாசனத்தில் வீற்றிருந்து ஆளுகைசெய்வாரோ, இந்த விசாரணைகளைக் குறித்து நாம் இப்பொழுது ஏதொன்றும் சொல்வது புத்தியல்ல.

பொதுவாய்ப் பிராஞ்சியசாதியார் ஆண்மையும், ஊக்கமும், உற்சாகமும், மிகுந்த கல்வித்தேர்ச்சியுமுள்ளவர்கள்; ஆனாலும், அவர்களில் அனேகர் உண்மை, சன்மார்க்கம் முதலிய குணங்களை மதித்து நடக்கிறதில்லை; அவர்கள் பேராசைக்காரர், சுயநயஅபிமானிகள், கோபிகள்; விடாமுயற்சி அவர்களுக்கு இயற்கையான குணம் அல்ல. யுத்தத்தினால் வரும் கீர்த்தி மாத்திரமே உண்மையான கீர்த்தியென்று எண்ணி, அதை நாடியும், அவர்கள் தேசாபிமானிகள் அல்ல; சுயாதீனமாவது இன்னதென்று அவர்கள் அறியார்கள்; இராஜ அதிகாரமில்லாமல் யாவரும் அவரவர் இஷ்டத்தின்படி நடப்பதே சுயாதீனமென்று தப்பாய் நினைக்கிறார்கள். அவர்கள் சுயாதீனராயிருக்கிறோமென்று சொல்லி, மிகுந்த துஷ்டராகிய கொடுங்கோல்மன்னரும் ஒருபொழுதும் செய்யத் துணியாத கொடிய பாதகங்களையெல்லாம் கூசாமற் செய்தார்கள். பிரான்ஸ்தேசத்தார் மெய்த்தேவபத்தியை அதிகமாய் மெச்சுகிறதில்லை; இதுதான் அவர்களுக்கு ஒரு பெரிய குறைவு - அவர்கள் தேசத்திலே சாதாரணமாய் நிலைப்பட்டிருக்கிற மார்க்கம் கிறிஸ்துமார்க்க

மாம். அதில் அனேக தப்புக்களும் விபரீதங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பெரும்பாலும் அங்குள்ள ஸ்திரிகளே மார்க்கத்தில் கொஞ்சத்திற்கொஞ்சம் பக்தியுள்ளவர்களாம்; ஆடவர்களோ, மார்க்க காரியங்களைக்குறித்துச் சற்றுவது நினைக்கிறதில்லை: அவர்களில் அனேகர் அவிசுவாசிகள்.

பிராஞ்சிய அரசாட்சி இப்படிப்பட்டதென்று சொல்வது கூடாது: அனேக வித ஆளுகைகள் அப்போதப்போது பிரான்ஸ்தேசத்திலே தலைப்பட்டிருந்தும், சுயாதீனமும் விவேகமுமான ஆளுகை மாத்திரம் அங்கே ஒருபொழுதும் காணப்படவில்லை. மேற்சொல்லிய இராச்சியபரிவர்த்தனம் உண்டாகிறவரையில், அங்கே ஏகாதிபத்தியம் நடந்தது: அதற்கு உதவியாகப் பிரபுகளும், குருக்கள்மாரும், ஜனப்பிரதிநிதிகளும் சேர்ந்த ஆலோசனைச்சபையொன்று ஏற்பட்டிருந்தது; அந்தச் சபைக்கு ஸ்டேட்ஸ் ஜெனறல் என்று பெயராம்; அது பிரிட்டிஷ் பார்லிமென்டைப்போல நிலைமையானதல்ல; அதைச் சேர்ந்தவர்கள் அப்போதப்போது அரசனுக்கு இஷ்டமானவேளையில் சபை கூடுவார்கள்; பிரபுகள் காலத்திற்குக் காலம் அரசருக்கு விரோதமாய் எழுந்து, அவர்களுடைய அதிகாரத்தைக் குறைப்பதும், ஆண்மையும் திறமுமுள்ள அரசர் அவர்களை அடக்கித் தங்கள் விருப்பத்தின்படி அதிகாரஞ்செய்வதும் உண்டு. பிரபுகளுக்கும், வாரக்குடிகளுக்கும் இடையில் வேறு வகுப்பான ஜனங்கள் இல்லை. அந்த வாரக்குடிகள் நீசரைப்போல நடத்தப்பட்டார்கள். அவர்களுக்குள்ளே அறிவுத்தேர்ச்சிக்கு அடுத்த ஸ்தாபனங்கள் ஒன்றும் இல்லை. இராச்சியத்திலே விதிக்கப்பட்டிருந்த அடாவரிகளையெல்லாம் அவர்களே கொடுக்கப் பாத்தியப்பட்டார்கள். அதுதான் அத்தேசத்தில் உண்டான பயங்கரமுள்ள கலக

த்தின் காரணமாயிருந்தது: ஆனபடியால், இப்படி அனியாயமாய் நடத்தப்பட்ட அவிவேகிகளான ஏழைச்சனங்கள் தங்கள் எசமான்களுக்கும் அரசனுக்கும் விரோதமாய் எழுந்து, அவர்கள் தங்களுக்குச் செய்த கொடிய துன்பங்களுக்காக அதிக மூர்க்கத்துடனே பழிவாங்கினார்கள். அத்தனை அவதிகள் நேரிட்டிருந்த காலத்திலே, பிரபுகள் அரசனைக் கைவிட்டு, தாங்கள் உயிர்பிழைக்கும்படியாக அன்னிய தேசங்களுக்கு ஓடினார்கள். அப்பொழுது இராஜதுரோகிகளான ஜனங்கள் அந்தப் பிரபுகள் குடியெழும்பின வீடுகளுக்குள்ளே புகுந்து, அங்கங்கிருந்த பொருள் பண்டங்களையெல்லாம் அபகரித்து, அவர்கள் நிலங்களைத் தங்கள் வசமாக்கி, எதிர்ப்பட்ட பிரபுகளுக்குப் பல நிஷ்டூரங்கள் செய்தார்கள். அந்தக் கலகம் நடந்த காலத்திலே அவரவருக்குரிய குலாசாரங்களுக்கும் பட்டங்களுக்கும் உண்டான தாரதம்மியமெல்லாம் ஒழிந்துபோயிற்று. ஆனதினால் நபோலிய சக்கரவர்த்தி புதிதான பட்டங்களை ஏற்படுத்தினான். அவன் இராச்சியபாரத்தினின்று நீக்கப்பட்டதின்மேல், முன் பிற தேசங்களுக்கு ஓடிப்போன பிரபுகளில் அனேகர் திரும்பிவந்தார்கள்: ஆகிலும், கொள்ளை கொடுத்த நிலங்களையும் உடைமைகளையும் திருப்பிக்கொண்டவர்கள் மிகவும் சிலர்.

நபோலிய சக்கரவர்த்தி நடத்தின இராணுவ சம்பந்தமான ஏகாதிபத்தியம் ஒழிந்தபின்பு, பிரான்ஸ்தேசத்தில் பல வகையான அரசாட்சிமுறைகள் நடந்தன; அவைகளில் ஒன்றாவது நிலைப்பட்டிருக்கவில்லை. இராணுவங்களின் உதவியால் நடத்தப்படும் ஏகாதிபத்தியம் ஒன்றே எவ்வளவேனும் நிலைபெற்றிருந்தது. இதுதான் இப்பொழுது பிராஞ்சிய இராச்சியத்தின் ஸ்திதி. அங்கே அரசனுக்கு ஆலோசனைத்துணைவராய் மந்திரிகள் ஏற்பட்டிருப்பதும், மந்திர

ஆலோசனைச்சபை கூடுவதும் ஒரு வேஷமேதவிர, காரியத்தளவில் ஒன்றுமில்லை. லூவி நபோலிய சக்கரவர்த்தி ஆஸ்த்திரிய சக்கரவர்த்தியைப் போல இஷ்டப்பிரகாரம் ஆளுகைசெய்கிறார். அவர் தமது இராணுவங்களையும் போர்க்கப்பல்களையும் மிகுந்த கருத்தாய் விசாரித்துத் திருத்தியிருக்கிறார். கொஞ்சக் காலத்திற்குமுன் அங்கிளோ பிராஞ்சியருக்கும், ரூஷியருக்கும் நடந்த யுத்தத்திலே, பிராஞ்சிய இராணுவங்கள் காட்டின வீரத்தன்மையும், அவர்கள் செய்த ஆச்சரியமான செய்கைகளுமே அதற்குப் போதிய திஷ்டாந்தங்களாம். நபோலிய சக்கரவர்த்தி தமது குடிச்சனங்கள் எவ்வகை மதங்களையும் அனுசரிக்கும்படி இடங்கொடுத்திருக்கிறார்: ஆகிலும், வேறு விஷயங்களிலோ, அப்படியல்ல. ஒருவரும் தங்களுக்கு இஷ்டமான நூல்களை எழுதவும், பகிரங்கஞ்செய்யவும் உத்தரவில்லை. உள்ளூர் வர்த்தகம், நெசவு முதலிய கைத்தொழில், கல்வி இவையாவும் விர்த்தியாகும்படி அவர் உதவிபண்ணுகிறார்; வர்த்தக முயற்சியை அதிகப்படுத்த வகைபார்க்கிறார்.

பிரான்ஸ்தேசம் நல்ல நிலவளமுடையது; அங்கே வெப்பம் குளிர்ச்சியால் உண்டாகின்ற சவுக்கியம் மிகுதி; தேசத்தின் பாங்கு உத்தமம். வடக்குப் பகுதிகளில் மாரிகாலம் அதிக நீடித்ததல்ல; அப்போது குளிர் மிகுதி; ஆகிலும், அதினால் கெடுதி இல்லை. பொதுவாகப் பார்க்குமிடத்தில், அத்தேசத்தின் அதிகமான பகுதியில் வெப்பமும் குளிர்ச்சியும் சமமாயிருக்கும்; நிலம் கொழுப்பும் செழிப்புமுடையது. பயிரிடுவதற்கும், ஆடுமாடு மேய்வதற்கும் பக்குவமுள்ளது. உள் நாடு எங்கும் சமமான ஆற்றுப் போக்கு நிலமாயிருக்கின்றது. அங்கே ரோன், கெரொன்னி, லூவர், ஸீன் முதலிய நதிகள் ஓடுவதினால், நீர்வளத்திற்குத் தாழ்ச்சியில்லை. பிரான்ஸ்தேசத்தின் கரையிலும் எல்லை

களிலும் சிறு மலைகள் நெருங்கி, உள்நாட்டைப் பார்க்கி லும் சிறப்பாகத் தோன்றுவதினால், அத்தேசம் "சிறந்த சட்டம் போடப்பட்ட அவலட்சணமான படத்துக்கு" சமானமாயிருக்கிறது. அங்கே கனதூரமளவும் மரம் அடர்ந்து சிறந்திருக்கின்ற வனங்கள் அனேகம். பொதுவாகத் தேசத்திலெங்கும் பெரிய மரங்கள் நிற்கின்றன: நிலக்கரி இல்லை; அதை வர்த்தகர் பிற தேசத்திலிருந்து கொண்டுவருவார்கள்: ஆதலால், மேற்சொல்லிய மரம் செடிகள் விறகுக்கும், வேறு அனேக செலவுகளுக்கும் உபயோகப்படும்.

பிரான்ஸ்தேசத்திலுள்ள விளைவுகள் தானியமும் கனிவர்க்கங்களுமாம்; நெசவு பட்டுப்புடைவை; கைத்தொழிலால் ஆனவஸ்துக்கள் திராட்சபானமும், சாராயம் முதலான மதுவகைகளும், பன்னீர் முதலிய கந்தவஸ்துக்களுமே. திராட்சபானம் உண்டாக்கும் திறமையில் பிராஞ்சியருக்கு ஒப்பானவர்கள் இல்லை. அங்கிருந்து பல வகையான திராட்சபானங்களும், சாராயமுமே விசேஷமாய்ப் பிற தேசங்களுக்கு ஏற்றுமதியாகின்ற வியாபாரவஸ்துக்களாம். பிரான்ஸ்தேசம் வேளாண்மை முயற்சியில் விசேஷித்திருப்பதுபோல, நெசவு முதலான கைத்தொழில் முயற்சியில் அத்தனை விசேஷமுள்ளதல்ல. ஆகிலும் அங்குள்ள பட்டுப்புடைவைகள், சரிகைகள், மெல்லிழைப்புடைவைகள் இவைகளையெல்லாம் ஐரோப்பாதேசத்தார் அனைவரும் மிகவும் மெச்சி எடுத்துக்கொள்வார்கள்.

பிரான்ஸ்தேசக் கரையிலே துறைமுகமுள்ள பிரதான பட்டணங்கள் இரண்டு; அவை மேல்கரையில் போர்டோ என்பதும், தென்கரையில் மார்ஸெல் என்பதுமே: அந்தப் பட்டணங்களில் வர்த்தகம் அதிகமாய் நடக்கின்றது. ஹாவர், கெலேயிஸ் என்னும் நகரங்களும் முக்கியமான

அறைகளை அடுத்திருக்கிறவைகளாம். பிரான்ஸ்தேசம் வியாபாரத்திலே அத்தனை விசேஷமுடையதல்ல. அங்கே பெரியவைகளும் சிறியவைகளுமான பட்டணங்கள் பல உண்டு. அத்தேசத்தின் இராஜதானி பரீஸ் என்பது; அது ஒரு சிறந்த நகரம்; அது சிங்காரமான கட்டடங்களும், சிறப்புள்ள வர்த்தகசாலைகளும், ஒழுங்கான வீதிகளும், குளிர்ச்சியான நந்தாவனங்களும் மிகுந்திருக்கப்பெற்றது. அந்த இராச்சியத்திலுள்ள கல்வி, குலம், திரவியம் இம்மூன்றுக்கும் அதுவே இருப்பிடமாம். பிராஞ்சிய சாதியார் அதிக உல்லாசமான நடையும், கூடிக் குலாவிக் கொண்டாடுவதற்கான விருப்பமுமுள்ளவர்கள். அவர்களுக்கு எவ்வகையான விநோதங்களிலும் இஷ்டம். அங்கிளோசாதியாரைப் போல் அங்கங்கே அவரவர் குடும்பங்களில் இருந்து சுகித்து வாழுவதைப் பார்கிலும், திரளாய்க் கூடுவதும், வேடிக்கை விநோதம்பண்ணுவதுமே அவர்களுக்கு இன்பமாம்: ஆதலால், உலகத்திலுள்ள அலங்காரமான பட்டணங்களில் ஸேன்ட் பீற்றர்புர்க் நகரத்துக்கு இரண்டாம் தரமானது பரீஸ் நகரமாம். அங்குள்ள மற்றும் முக்கியமான பட்டணங்கள் லியோன், வெலென்ஷியென்னி, ஆர்லியன்ஸ், றீமஸ், ரூஎன், துலான் முதலியவைகளே. லீயோன் பட்டணம் பட்டுப்புடைவையிலும், வெலென்ஷியென்னி பட்டணம் சரிகையிலும் பெயர் பெற்றவைகளாம்.

இப்பொழுது பிராஞ்சிய துரைத்தனத்தைச் சார்ந்த பிற தேசங்கள் அனேகமல்ல—ஆபிரிக்காதேசத்தின் கீழ்கரைக்கு நேரோ போர்பன்திவும், இந்தியாவிலே இரண்டு மூன்று சிறு பட்டணங்களும், ஆபிரிக்காவின் வடபுறத்தில் கொஞ்ச நாளுக்குமுன் ஜெயித்துக்கொள்ளப்பட்ட அல்ஜீரியா என்னும் தேசமும், தென் அமெரிக்காவிலுள்ள நா

டுகளில் ஒன்றும், மேற்கு இந்தியதீவுகளில் இரண்டு மூன்றுமே இப்பொழுது பிராஞ்சியருக்கு ஆதினமாயிருக்கின்ற பிறதேசத் துரைத்தனங்களாம். முன்பு அவர்களுக்கு இன்னும் அனேக துரைத்தனங்கள் இருந்தன. அவைகளை அங்கிலேயர் அப்போதப்போது உண்டான யுத்தங்களில் அவர்கள் கையினின்று பிடித்துக்கொண்டார்கள்.

பிரான்ஸ்தேசத்திலே போக்கு வரவு செய்வதற்கு உபயோகமாய் உண்டாக்கப்பட்டிருக்கின்ற திறமான எத்தனங்களை வெல்ல, அங்கிளோதேசம் ஒன்றுதவிர, வேறு எதுவும் இல்லை. தேசத்தில் அங்கங்கே வெகு நேர்த்தியான சாலைகளும், கால்வாய்களும், இருப்புப்பாதைகளும் இருக்கின்றன. மத்திய தரையான கடலினின்று போர்டூ நகரத்திற்கு ஒரு பெரிதான கால்வாய் வெட்டப்பட்டிருக்கின்றது; வடகரையிலுள்ள கெலேயிஸ் நகரத்தினின்று பரீஸ், லீயோன் என்னும் பட்டணங்களுக்கு இடையே மார்ஸேல் நகரமட்டும் ஒரே தொடர்ச்சியான இருப்புப்பாதை கொஞ்சக் காலத்திற்குமுன் செப்பனிடப்பட்டது; அதன்வழியாக அங்கிளோதபால் நமக்கு வருகின்றது.

கவிசெய்யும் திறம் ஒன்றுதவிர, மற்ற எல்லாக் கல்விகளிலும் பிராஞ்சியசாதியார் அங்கிளோ ஜெர்மானிய சாதியார்களுக்கு நிகரானவர்களாம். சாஸ்திரம், சரித்திரம், வைதிகம், கட்டுக்கதை முதலிய விஷயங்களைக் குறித்து எழுதப்பட்ட அனேக திறமானநூல்கள் அவர்களுக்குள் உண்டு. ஆகிலும் மனோகற்பிதமாய் எழுதப்பட்ட நூல்களிற் பெரும்பாலும் சன்மார்க்கவழுவும், அவபக்தியுமான கற்பனைகள் அடங்கியிருக்கின்றன. அங்கிளோ ஜெர்மானிய தேசங்களில் இருக்கின்றதுபோல, பிராஞ்சிய தேசத்திலும் அனேக ஸ்திரிகள் நேர்த்தியான நூல்களை எழு

திக் கீர்த்தியடைந்திருக்கிறார்கள். சித்திரம் எழுதும் வித்தையில் அத்தனை கெட்டித்தனமுள்ளவர்கள் அங்கில்லை. சங்கீத வித்துவான்களும் அனேகர் இல்லை; ஆனாலும், அந்தந்தச் சிறந்த நகரங்களிற் செய்யப்பட்டிருக்கின்ற கட்டடங்களில் அதிக சிற்பநூல் தேர்ச்சியும் சமர்த்தும் தெரியவருகின்றன. அங்குள்ள தேவாலயங்களின் சிறந்த வேலைப்பாடுகளைப் பார்க்கிற சிற்பநூல் வித்துவான்கள் யாவரும் அவைகளை மெச்சி வியந்துகொள்ளுகிறார்கள்.

---

## பிரித்தானியாதேசம்.

ஆதியிலே பிரித்தானியாதேசத்தைக்குறித்துத் தங்கள் சரித்திரப்புஸ்தகத்தில் எழுதிய சாதியார் பினீஷியர் என்பவர்கள். அவர்கள் பூர்வகாலத்திலே மிகவும் கீர்த்திபெற்றிருந்தவர்கள். முதல் முதல் அவர்களே கப்பல்களைச் செப்பனிட்டு, பிற தேசங்களுக்குப் போய், வியாபாரம் பண்ணினார்களென்று தெரியவருகின்றது. அவர்கள் கிறிஸ்து அவதரிக்கமுன் ௮00-ம் வருஷத்தில் அத்லந்திக் சமுத்திரத்திலே சில தீவுகளைக் கண்டதாகவும், அங்கே தகரச்சுரங்கம் இருந்ததாகவும் எழுதியிருக்கிறார்கள். அந்தத் தீவுகள் சிலிதீவுகளும், கோர்ன்வல் தேசத்தின் ஒரு பகுதியுமாய் இருக்கிறதென்று சரித்திர நூலாசிரியர்கள் உத்தேசிக்கிறது உண்டு. பின்பு பிரித்தானியாதேசத்தின் சரித்திரத்தை எழுதினவர்கள் உரோமசாதியார்; அவர்கள் சாதியில் கீர்த்திபெற்ற சேனைத்தலைவன் ஒருவன், கிறிஸ்து அவதரிக்க ௫௫ வருஷத்துக்குமுன், மிகுதியான இராணுவத்துடனே படையெடுத்துப் புறப்பட்டு, அங்கிலோபிராஞ்சியதேசங்களுக்கு இடையிலுள்ள சமுத்திரக் கால்வாயைத் தாண்டி, அக்கரை சேர்ந்தான்; சேர்ந்தபொழுது,

அங்கிருந்த குடிகள் மிகுந்த ஆண்மையோடும் மூர்க்கத்தோடும் அவர்களை எதிர்த்து, நெடுங்காலமளவும் சண்டை பண்ணினார்கள். கடைசியில் அந்த உரோமசாதியார் அவர்களை மேற்கொண்டு, அந்தத் தேசத்தின் தெற்குப் புறத்திலுள்ள அங்கிளோதீவை முழுவதும் கட்டிக்கொண்டார்கள்.

அவர்கள் பிரித்தானியதீவிற்குப் போனபொழுது, அங்கிருந்த குடிகள் சீர்திருத்தமில்லாதவர்களாய், சிறு குடிசைகளில் வாசம்பண்ணி, மிருகங்களின் தோலை ஆடையாகத் தரித்திருந்தார்கள். கல்வியும், நெசவு முதலிய கைத்தொழில் வித்தைகளும் அவர்களுக்குள் அபிவிர்த்தியாயிருக்கவில்லை. அவர்கள் அனுசரித்த மார்க்கம் மிகவும் கொடிதும் சீர்கேடுமானது. அதற்கு டிறூவிடியமார்க்கம் என்று பெயர். பிற்பாடு நிலத்தைப் பண்படுத்திப் பயிரிடவும், நேர்த்தியான வீடுகளைக் கட்டவும், நெசவுத்தொழில் முதலிய கைவேலைகளைச் செய்யவும், வீட்டு வேலைகளுக்கும் வேளாண்மை முயற்சிக்கும் உபயோகமான மிருகங்களை வளர்க்கவும், பயிரிடுவதற்கு உதவியான கருவிகளை உருவாக்கவும் உரோமசாதியார் பிரித்தானியருக்கு வகைசொல்லிக்கொடுத்தார்கள்; அதுவன்றி, அவர்களுச்குக் கல்வியையும் போதித்தார்கள்: இந்தப்படி அங்கிளோதேசத்தை அரசாண்ட உரோமசாதியார் அங்கிருந்த குடிகள் நாகரிகத்தில் விருத்தியாகும்படி உதவிபண்ணினார்கள். அங்கே நூதனமாக அனேக பட்டணங்கள் கட்டப்பட்டன; நேர்த்தியான வீடுகள் சமைக்கப்பட்டன; செவ்வையான சாலைகள் செப்பனிடப்பட்டன; கால்வாய்கள் வெட்டப்பட்டன; பாலங்கள் கட்டப்பட்டன. அந்த உரோமர் அங்கிளோதேசத்தை அரசாளத் தொடங்கி ச00 வருஷம் சென்றதின்மேல், தங்கள் இராஜதானியாகிய உரோமை நகரத்திலே சத்துருக்கள் போய்க் குழப்பம் செய்யத்

தலைப்பட்டதினால், அவர்கள் அங்கிளோதேசத்தை விட்டு, போகும்படி நேரிட்டது. அப்பொழுது அங்கிலேயர் தங்கள் உபகாரிகளாகிய உரோமராலே கைவிடப்பட்டதை நினைத்து, மிகவும் மனத்துன்பம் அடைந்தார்கள். அவர்கள் உரோமர் கையிற் பெற்ற சிலாக்கியங்கள் அனேகம் உண்டு; அவையெல்லாவற்றுள்ளும் சத்தியவேதம் ஒன்றே முக்கியமான ஒரு நன்மையாம். உரோமைத்துரைத்தனத்தார் தங்கள் தேசத்தினின்று அதிக சாதுரிய சாமர்த்தியமுள்ள ஒரு குருவானவரை அங்கிளோதேசத்திற்கு அழைப்பித்தார்கள். அவர் அங்குள்ள குடிகளுக்கு மெய்த்தேவனையும், அவருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவையும், அவரை வழிபட்டு, அவருக்கு அன்பராகும் வகையையும் குறித்து விவரமாகப் போதித்தார். பூர்வத்தில் அவர்களுக்குள்ளே சாதாரணமாயிருந்த கொடிய வீண்பத்திகள் எல்லாம் கொஞ்சக் காலத்திற்குள் நாசமாய்ப்போயின; போகவே கிறிஸ்துமார்க்கம் தேசத்தில் எங்கும் பரவிற்று.

மேற்சொல்லியபடி உரோமைத் துரைத்தனத்தார் அங்கிளோதேசத்தை விட்டுப் போனதின்மேல், வால்த்திக் கடற்கரைக்குச் சமீபமான தேசப்பகுதியில் வாசமாயிருந்த வேறு ஒரு சாதியார் அங்கே படையெடுத்துப்போய், அத்தேசத்தை ஜெயித்து, அதின் தெற்குப் பகுதியிற் குடியேறி அரசாண்டார்கள். அவர்கள் ஸக்ஸோனியர் என்றும் அங்கிலேயர் என்றும் இரண்டு வகுப்பானவர்களாயிருந்தார்கள். அவர்களில் அங்கிலேயர் என்பவர்கள் அதிக திராணியும் சனத்திரட்சியுமுள்ளவர்களாயிருந்ததினால், தங்கள் சாதிப்பெயருக்கு இணங்க அத்தேசத்திற்கு அங்கிளோதேசம் என்று பெயரிட்டார்கள். அந்தப் பெயரோ அதற்கு இந்நாள்வரைக்கும் வழங்கிவருகின்றது.

பின்பு அங்கிளோ ஸக்ஸோனியசாதியார் அத்தேசத்தின்

சனங்களைப் பரிச்சேதமாகச் சங்கரிக்கத் தலைப்பட்டார்கள்; அவர்களுடைய கைக்குத் தப்பினவர்கள் மேற்குப் பகுதியிலுள்ள உவேல்ஸ் என்னும் மலைநாடுகளுக்கு ஓடி, அங்கே சமாதானமாகச் சஞ்சரித்தார்கள்: இப்பொழுது அங்கே வாசமாயிருக்கிற குடிச்சனங்களே ஆதியில் இருந்த பிரித்தானியருடைய சந்ததிகளாம்.

அங்கிளோதேசம் ஸக்ஸோனிய துரைத்தனத்தின் தொடக்கத்திலே பல தேசப்பகுதிகளாகவும், இராச்சியங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. அப்புறம் சில காலம்சென்றபின், ௮௦௦-ம் ஆண்டில், எட்கர் என்னும் அரசன் அவைகளை ஒன்றாகச் சேர்த்து, அங்கிளோதேசமுழுவதையும் ஒரு குடைக்கீழ் அரசாண்டான். ஸக்ஸோனிய அரசருடைய துரைத்தனம் அங்கிளோதேசத்திலே ௧௧-ம் நூற்றாண்டின் பாதிமட்டும் நடந்தது. இடையிலே தானிய சாதியார் சற்றே தொந்தரவு பண்ணினார்கள். ஸக்ஸோனிய அரசர் அதிக சாந்தமுள்ளவர்களும், பரோபகாரிகளுமாயிருந்தார்கள். அவர்கள் ஒருபொழுதும் ஏகாதிபதிகளாய் அதிகாரம் செலுத்தவில்லை; தேச நியாயப்பிரமாணத்தின்படி அரசாண்டார்கள். ஸக்ஸோனிய சாதியார் அங்கிளோதேசத்திலே குடியேறியபின்பு, சற்குணத்திலும் விவேகத்திலும் சிறந்தவர்களான குருக்கள்மார் கிறிஸ்துவேத உபதேசங்களை அவர்களுக்குப் போதித்துவந்ததினால், அவர்கள் எல்லாரும் கிறிஸ்தவர்களானார்கள்.

௧௧-ம் நூற்றாண்டின் நடுவில் வேறு ஒரு சாதியார் பிரான்ஸ்தேசத்திலிருந்து அங்கிளோதேசத்திற்குப் படையெடுத்துப் போனார்கள். அவர்களை நடத்திப்போன சேனைத்தலைவர் வெற்றிவேந்தனென்று மறுநாமம் பெற்ற உவில்யம் என்பவராம். அவருக்கும் ஸக்சோனிய துரைத்தனத்தாருக்கும் பயங்கரமான யுத்தம் நேரிட்டது: அந்த யுத்தத்திலே, அவர் கடைசியாய் அரசாண்ட ஸக்ஸோனிய

அரசனை ஜெயித்து, சங்கரித்து, தேசத்தை முழுவதும் கட்டிக்கொண்டார். மேற்சொல்லிய சாதியார் பூர்வத்திலே நார்வேதேசத்திலிருந்து பிரான்ஸ்தேசத்தின் வடபாகத்திலுள்ள நார்மன்டி மாகாணத்திற்குப் போய், அங்கே சஞ்சரித்தவர்கள். ஆதலால், அவர்களுக்கு நார்மானியர் என்று பெயர் வழங்கிற்று. அவர்களும் கிறிஸ்து மார்க்கத்தை அனுசரித்து, நாகரிகத்தில் விர்த்தியடைந்தவர்கள்தான். வரவர அவர்களும், ஸக்ஸோனிய சாதியாரும் சாதி வேற்றுமை தோன்றுதிருக்கத்தக்கதாக ஒன்றுய்க் கலந்துபோனதினுல், இரு திறத்தாரும் அங்கிளோ சாதியார் என்னும் பொதுப்பெயரால் அறியப்பட்டார்கள்.

தொடக்கத்திலே நார்மானிய அரசர், தங்கள் விருத்திக்கும் குடிச்சனங்களுடைய நன்மைக்கும் அடாத விதமாய் முற்றுன அதிகாரம் பண்ணி, கொடுங்கோல் செலுத்தினுர்கள்: ஆகிலும், தேச நியாயப்பிரமாணங்களின்படி துரைத்தனம் பண்ணுவதினுல் உண்டாகத்தக்க சிலாக்கியங்களைத் தங்கள் அனுபோகத்தினுல் அறிந்தவர்களாகிய ஸக்ஸோனிய சாதியார், நியாய சட்டங்களை நூதனமாகத் திட்டஞ்செய்து கொடுக்கவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்க,அரசர்கள் வரவர அவர்களுடைய கேள்விக்கு இணங்கி, அந்தப் பிரகாரம் செய்தார்கள். கடைசியில் அங்கிளோ தேசத்தின் அரசாட்சியினுல் சனங்களுக்குச் சுயாதீனமும், நன்மையும், அறிவுத் தேர்ச்சியும், கணிசமும் உண்டாயின; அந்தக் கிரமமே இந்நாள்வரைக்கும் நடந்துவருகின்றது.

நார்மானியசாதியார் அங்கிளோதேசத்தை அரசாளத் தொடங்கிய நாள்முதலாக, இராஜ குடும்பத்திலுள்ளவர்கள், முக்கியமாய்ச் சத்தியவேதத்திலுள்ள சட்டங்களையே மூலாதாரமாகக் கொண்டு, தகுதியான தேச நியாயப்பிரமாணங்களை ஏற்படுத்தி, உரிமை தவருமல், வமிசபா

ரம்பரையாய் அரசாண்டார்கள். அங்குள்ள குடிகளுக்குள் அப்போதப்போது சண்டைகளும் கலகங்களும் உண்டாயின: அன்றியும், அடிக்கடி அங்கிளோசாதியாருக்கும் அன்னிய தேசத்தார்களுக்கும் யுத்தங்கள் நேரிட்டன: விசேஷமாய் அவர்களுக்கும் பிராஞ்சியருக்கும் உண்டான யுத்தங்களில், பெரும்பாலும் அவர்களே ஜெயமடைந்தார்கள். இந்தப்படி அவர்கள் நாளாவர்த்தியில் அதிகாரத்திலே விர்த்தியடைந்து, கீர்த்திபெற்றார்கள்.

௧௬-ம் நூற்றாண்டுமுதல், அங்கிளோதேசத்தார் ஐரோப்பாவிலுள்ள தலைமையான இராச்சியத்தார்களுக்குச் சமமானவர்களாய் இருந்தார்கள். இப்பொழுது அவர்களைவெல்லத்தக்கவர்களாவது, அவர்களுக்கு நிகரானவர்களாவது எங்கும் இல்லை. அந்தக் காலம் தொடங்கி, அவர்கள் வெவ்வேறுதேசங்களைக் கண்டு, அவைகளைத் தங்கள் வசப்படுத்தி, அங்கங்கே குடியேறி, விவேகத்தினாலும் வலிமையினாலும் சிறந்தவர்களாகி, அரசாண்டுவருகிறார்கள். அநியாயமாய்ப் படையெடுத்துப்போய் அன்னிய தேசங்களைக் கட்டிக்கொள்வது அவர்கள் ஒழுக்கமல்ல. அவர்கள் பல தேசத்தாருடனே வர்த்தக சம்பந்தமான உடம்படிக்கைபண்ணி, எங்கும்போய் வியாபாரம் செய்து வருவதினாலே, கீர்த்தியும் செல்வமும் பெற்று வாழுகிறார்கள். முற்காலத்திலே, உலாந்தா, வெனிஸ் என்னும் தேசங்களும், அதிக மாட்சிமை பொருந்திய தீரு, கார்தேஜ் என்னும் பட்டணங்களும் தத்துவத்திலும், வர்த்தகவிஷயத்திலும் மிகுந்த கீர்த்திபெற்றவைகளாயிருந்தன: ஆகிலும், அவைகளில் ஒன்றுவது மேற்குறித்த இரண்டு விஷயங்களிலும் அங்கிளோதேசம் இப்பொழுது இருக்கிற நிலமையில் ஒருபொழுதும் இருந்ததில்லை.

௧௪௯௨-ம் வருஷத்திலே கொலம்பஸ் என்பவன் தென் அமெரிக்காதேசத்தைக் கண்டபின்பு, அங்கிளோதேசத்

தார் வட அமெரிக்காவைக் கண்டார்கள். அப்புறம் நூறு வருஷத்தின்மேல், அவர்கள் அங்குள்ள பல நாடுகளி லே குடியேறி, வட அமெரிக்காவின் மிகுதியான பகு திகளைக் கையாட்சிகொண்டார்கள்: கஎஎச-ம் வரு ஷத்திலோ, அவர்களுடைய துரைத்தனத்தைச் சேர்ந்த குடிச்சனங்களில் அனேகர் கலகஞ்செய்து, சில வருஷ காலமாய் அவர்களுடன் யுத்தம்பண்ணிச் சுயாதீனம்பெ ற்றுக்கொண்டதின்மேல், தங்களுக்குள்ளே குடியரசை ஏற்படுத்தி, தங்கள் தேசத்திற்கு ஐக்கதேசமென்று பெ யரிட்டார்கள். கஅடுகூ-ம் வருஷத்திலே அங்கிளோ து ரைத்தனத்தாருக்கு ஆதீனமாய் வந்த கானடா மாகாண மும், அமெரிக்கிய கரையை அடுத்திருக்கிற நியூபிரன்ஸ் விக் மாகாணமும் இந்நாள்மட்டும் அவர்கள் ஆளுகைக்கு ள்ளாகவே இருக்கின்றன. மேலும் நொவெஸ்கோஷே, நுவெளன்ட்லன்ட், பிரின்ஸ் எட்வார்ட் ஐயில் என்னும் பெ ருந்தீவுகளும், பெர்மூடதீவுகளும், கஊ மேற்கு இந்தியதீவு களும் அவர்கள் அதிகாரத்திற்குள் இருக்கின்றன. ஜெ மேயிக்கா, அன்திக்குவா, டொர்மினீக்கா என்பவைகள் மேற்கு இந்திய தீவுகளில் முக்கியமானவைகளாம்.

இத்தன்மையாய் அங்கிலேயர் மேற்குத் தேசங்களில் மாத்திரமல்ல, கிழக்குத் தேசங்களிலும் தங்கள் துரைத் தனத்தை விருத்தியாக்கினார்கள். போர்ட்யுகல்தேசத்தார் ஆபிரிக்காவின் தென் முனையாகிய கேப் அவ் குட் ஹோப் பைச் சுற்றியோடும் சமுத்திரப் பாதையைக் கண்டபின்பு, கஅகூகூ-ம் வருஷத்தில் அங்கிளோ வர்த்தகர் பொன், வெள்ளி, இரத்தினமுதலாகிய செல்வப் பொருள்களில் எவ்வளவும் குறைவில்லாதிருந்த இந்தியாதேசத்திற்கு வ ந்து, அதின் கரையிலுள்ள கல்கத்தா, சென்னப்பட்டணம், மசூலிபட்டணம், பம்பாய் முதலிய இடங்களிலே தங்கி,

அங்கங்கே சிறுச் சிறு வர்த்தகசாலைகளை ஸ்தாபித்தார்கள். அவர்கள் அதுமுதல் ஒரு நூற்றாண்டளவும் இத்தேசத்தாருடனே விரோதம்பண்ணிக்கொள்ளாமல், சமாதானமாகத் தங்கள் வர்த்தகமுயற்சியில் ஏற்பட்டிருந்தவர்களேதவிர, இங்கே தாங்கள் துரைத்தனம்பண்ணவேண்டுமென்று கருத்துக் கொண்டவர்களல்ல. ஆகிலும், இத்தேசத்திலுள்ள அரசரிற் சிலர் மிகுந்த கபடமார்க்கமாய் அவர்களுக்கு நிஷ்டூரம் செய்ய வகைதேடினதினால், அவர்கள் தங்கள் பிராணனையும் பொருளையும் தப்பித்துக்கொள்வதற்காக, ஆயுதம் எடுத்து யுத்தம் செய்யும்படி நேரிட்டது. அந்த நாள்முதல் ஒன்றின்பின் ஒன்றாய் அனேக யுத்தங்களும் சச்சரவுகளும் நடந்தன. அவைகளிலெல்லாம் அங்கிலேயர் தாமே வெற்றியடைந்தார்கள். இந்தியாவிலுள்ள பல சாதிகளும் இராச்சியங்களும் ஒன்றின்பின் ஒன்றாய் அவர்களுடைய அதிகாரத்துக்கு உட்பட்டன. அங்கங்குள்ளவர்களிற் சிலர் யுத்தம் செய்து தோற்றவர்களும், சிலர் உடம்படிக்கை எழுதிக்கொடுத்தவர்களுமாயிருந்தார்கள். இப்பொழுது இலங்காதீவு, கன்னியாகுமரிமுதல், இமையமலைவரைக்கும் அங்கிலேயருடைய கொடியே பறக்கின்றது. கொஞ்சம் குறைய இந்தியா முழுவதையும் அவர்களே அரசாண்டுவருகிறார்கள்.

மேலும் தென் சமுத்திரத்திலுள்ள ஆஸ்ற்றிறேலியா தீவையும் அவர்களே முதல்முதல் கண்டு ஆதீனமாக்கியிருக்கிறார்கள். அவர்களில் அனேகர் அங்கே குடியேறியிருக்கிறார்கள். அந்தத் தீவிலே பொன் அதிகமாய் விளைகின்றது. நுசிலன்ட் என்னும் தீவுகளும் அங்கிலோதுரைத்தனத்தைச் சார்ந்திருக்கின்றன. மேற்சொல்லிய பெரிய தேசப்பகுதிகளல்லாமல், வேறு அனேக முக்கியமான சிறிய தேசங்களும் அவர்களுக்கு உண்டு—ஆபிரிக்காவி

லே கேப் அவ் குட் ஹோப்பும், சீரிலீயோனும்; இந்து சமுத்திரத்திலே மோரிஷ்தீவு; மத்தியதரையான கடலில் அதின் முகத்தில் இருக்கின்ற ஜிபிரால்த்தர் நகரமும், ஐயோனியதீவுகளும், மோல்த்தாதீவும்; அங்கிளோ சமுத்திரக்கால்வாயில் நாலு ஐந்து தீவுகள் — அவற்றுள் ஜேர்ஸி, கேர்ன்ஸி, இவ்விரண்டும் முக்கியமானவைகள்; சீனதேசத்திலே ஹொங்கோங் என்பது; அராபிய கரையில் ஆதேன் என்னும் இடம்.

அங்கிளோ இராச்சியத்துடன் ஐர்லன்ட், உவேல்ஸ் என்னும் தேசங்கள் ஒன்றாகச் சேர்ந்திருப்பதினால், அது சில வேளை மேற்படி இரண்டு தேசங்களும் சேர்ந்த பெரிய பிரித்தானிய இராச்சியமென்னப்படும். உவேல்ஸ் தேசம் கங-ம் நூற்றாண்டிலே செயிக்கப்பட்டு, அங்கிளோ தேசத்துடனே சேர்த்துக்கொள்ளப்பட்டது. பிரித்தானியாவின் வட பாகமாகிய ஸ்கொத்லன்ட் என்பது அனேக நூற்றாண்டுகள்வரையில் அங்கிளோதேசத்துடன் ஓயாமல் விரோதமாயிருந்தது: ஆதலால், அந்த இரண்டு தேசங்களுக்கும் அடிக்கடி சண்டை உண்டாயிற்று: அந்தச் சண்டைகளினால் ஸ்கொத்லன்டியருக்கு நேரிட்ட கஸ்திகள் அனேகம். கரு-ம் நூற்றாண்டிலே ஸ்கொத்லன்டிய அரசனொருவர் அங்கிளோ இராசகுமாரத்தியை விவாகஞ்செய்தார். அப்புறம், ஒரு நூறு வருஷமளவு சென்றபின், அவ்விருவருக்கும் பேரப்பிள்ளையாயிருந்த (அங்கிளோ இராச்சியத்தின் முதலாவது) ஜேம்ஸ் என்னும் அரசன் தமது உரிமைப்படியே அங்கிளோ இராச்சியத்திற்கு அரசனாக முடிசூட்டப்பட்டார். இவ்வண்ணமாய் அந்த இரண்டு சாதியார்களும் ஓரே அரசனுடைய ஆளுகைக்குள்ளானார்கள். க௭0எ-ம் ஆண்டு அவர்கள் சம்பந்த உடம்படிக்கையொன்று செய்து, இருதிறத்தார்களும் இதுவ

ணைக்கும் ஒரே இராச்சியத்தில் இணைக்கப்பட்டிருக்கிறார்கள். ௧௨-ம் நூற்றாண்டுமுதலாய் அங்கிளோ இராச்சியத்திற்குச் சம்பந்தப்பட்டிருந்த தேசமாகிய ஐர்லன்ட் என்பதும், ௧௮௦௧-ம் ஆண்டிலே உடம்படிக்கையினால் அத்துடன் சேர்த்துக்கொள்ளப்பட்டது. மேற்சொல்லிய தேசப்பகுதிகள் ஒன்றாகச் சேர்ந்து ஒரே அரசனும், ஒரே மந்திராலோசனைச் சபையும் மனம்பொருந்தி ஆளுகை செய்யப்பெற்றதினால், முன்பு உண்டான விரோதங்களும், யுத்தங்களும் ஒழிந்துபோயின. அங்கிளோ இராச்சியத்திற்கு வரவர வல்லமையும், மாட்சிமையும் உண்டாயின.

மேற்சொல்லிய மூன்று தேசங்களின் இயற்கையும், அங்கங்கே வாசமாயிருந்த குடிகளின் குணமும் வெகு பேதப்பட்டிருந்ததினால், அவைகள் ஒரே இராச்சியமாகச் சேர்ந்தபின்பு, குடிச்சனங்களுக்கு உண்டான பொதுநன்மை அதிகமாயிற்று. பிரித்தானிய தேசத்தார் வெவ்வேறு குணாதிசயங்களிலே சிறந்திருக்கிறார்கள்; அங்குள்ள ஸக்ஸோனியர் உறுதி, விடாமுயற்சி, காரியநிருவாகம், சுயாதீன அபிமானம் முதலிய குணங்களிற் சிறந்தவர்கள்; நார்மானியர் வீரமும் நாகரிகமுமுள்ளவர்கள்; செல்த்தியர் விவேகம், உற்சாகம், இராஜவணக்கம், முயற்சி என்னும் குணங்களால் மேன்மைபெற்றவர்கள். பொதுவாகப் பார்க்குமிடத்தில் வீரமும், ஆண்மையும், தேசாபிமானமும், யாவரிடத்திலும் உண்டு. இப்பொழுது அங்குள்ள கீழ்மையான குடிகளுக்குள் சாதரணமாய் வழங்கிவருகிற தீமை மதுபானமாம். பொதுவாய் எவர்களும் உட்பட்டிருகின்ற குற்றம் அளவுக்கு மிஞ்சிய பொருளாசையாம். உலகத்தில் இப்பொழுது அங்ளோசாதியார் தாமே முதன்மை பெற்றவர்கள்: அவர்கள் ஒப்பில்லாத செல்வமும், சிறப்பும் பெற்று வாழுகிறார்கள். வர்த்தகம், நெசவுமுதலிய கைத்தொழில்கள், க

ல்வி, திருந்திய சன்மார்க்கம், உசிதமான நடை, உடை, பார்வை, உபயோகமும் அலங்காரமுமான சகல குணதிசய விருத்தி, சுயாதீனம், முக்கியமாய்ச் சமய அனுசரணை முதலிய இந்த விஷயங்களில், அங்கிளோ சாதியாருக்குச் சமானமுள்ளவர்கள் எங்கும் இல்லை. யுத்தம்பண்ணும் திறத்திலே அவர்கள் ஒருவருக்கும் மடங்கார்கள். அவர்கள் போர்க்கப்பல்கள் எந்தச் சமுத்திரத்திலும் கடலிலும் முதன்மை பெற்றிருக்கின்றன. அதிவீரசூரனாகிய நபோலியனுக்கு ஐரோப்பிய துரைத்தனங்கள் அனைத்தும் அஞ்சி ஒடுங்கி அடிபணிந்து நிற்க, அங்கிளோ துரைத்தனம் ஒன்றே, அவனை எவ்வளவும் இலட்சியம்பண்ணாமல், அவனுடன் எதிர்த்து, உவாற்றர்லூ என்னும் இடத்தில் நெருங்கி யுத்தஞ்செய்தது; அந்த யுத்தத்திலே உத்தம மாட்சிமை பெற்ற உவேலிங்டன் என்னும் சேனைத்தலைவர் நபோலியனை ஜெயித்துச் சிறைப்படுத்தினார். அவன் சிறைப்பட்டதினால், ஐரோப்பாதேசத்தாருக்குச் சுயாதீனமும் சமாதானமும் உண்டாயின.

பிரித்தானிய இராச்சியத்தார் கரு-ம்-நூற்றாண்டுமுதல், பாப்புவின் அதிகாரத்தை புறக்கணித்து, சுத்த சுவிசேஷமார்க்கத்தை உறுதியாய் அனுசரித்துக்கொண்டுவருகிறார்கள். கிறிஸ்துவேத சத்தியங்கள் தேசத்திலெங்கும் பரவியிருக்கின்றன. அங்குள்ள குருக்கள்மார் தங்கள் சனங்களுக்கு மிகவும் பக்தியாய் வேத உபதேசம்பண்ணி வருகிறார்கள். ஜனங்கள் அவர்களை உபசரித்து மரியாதைபண்ணி நடக்கிறார்கள்.

பிரித்தானிய இராச்சியத்திலே ஜனங்களுக்கு உபயோகமாய் ஏற்படுத்தப்பட்ட பல தர்மசாலைகள் உண்டு. மேலும் கல்விப் பயற்சியினாலும், சத்தியமார்க்க அனுசரணையினாலும் உண்டாகத்தக்க மேலான சிலாக்கியங்களை அவர்கள் தங்கள் அனுபோகத்தினாற் கண்டறிந்து, அந்த

நன்மைகள் மனிதர் எல்லாருக்கும் உண்டாகவேண்டுமென்று விரும்பி, அவர்களுக்கு வேத உபதேசம்பண்ணும்படியாக, அங்கங்கே குருக்கள்மாரை அனுப்புவதற்கு வெவ்வேறு சங்கங்களை ஏற்படுத்தினார்கள். அவர்கள் அனுசரித்து வருகிற மார்க்கம் சிறந்த சத்தியமார்க்கம் என்பதற்கு மேற்சொல்லிய தர்ம ஸ்தாபனங்களும், சங்கங்களுமே தகுதியான சாட்சிகளாம். அந்த ஸ்தாபனங்கள், சங்கங்கள் எல்லாம் துரைத்தனத்தாருடைய செலவில் அல்ல, குடிச்சனங்கள் தங்கள் இஷ்டப்பிரகாரம் கொடுக்கும் பணத்தினால் ஆதரிக்கப்படுகின்றன. அங்கிருக்கிற ஏழைகளுக்குக் கல்விப்போதனை செய்வதற்காக, துரைத்தனத்தார் தங்கள் செலவிலே வெவ்வேறு பாடசாலைகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இடம், பொருள், ஏவல் முதலான விஷயங்களிற் குறைவில்லாத செல்வருடைய பிள்ளைகளுக்கு உபயோகமாய் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற பாடசாலைகளும், பெரிய வித்தியாசாலைகளும் அவரவர் கொடுக்கிற சம்பளப்பணத்தால் ஆதரிக்கப்படும். மேலும் அங்கே மிகவும் திறமான மூன்று பெரிய சர்வகலாசாலைகளும் உண்டு; அவைகளில் இரண்டு அங்கிளோதேசத்திலும், ஒன்று ஐர்லன்ட்தேசத்திலும் இருக்கின்றன. அரசனும் குடிகளும் அப்போதப்போது உபயமாய்க் கொடுத்த நிலங்களின் விளைவைக்கொண்டு அந்தச் சாலைகள் ஆதரிக்கப்படுகின்றன.

அத்தேசத்தாருடைய முக்கியமான ஒரு இலட்சணம் சலியா முயற்சியாம். குடிச்சனங்கள் அவரவரோ தனித்தும், பலர் ஒன்றாகச் சேர்ந்தும் பணமுதல் கட்டி, கப்பல் செப்பனிடும் துறைகள், கால்வாய்கள், இருப்புப்பாதைகள், (பிரித்தானிய இராச்சியத்திலுள்ள பிரதான பட்டணங்களில் அனேக இருப்புப்பாதைகள் ஒன்றோடொன்று பொருந்தும்படி ஏற்படுத்தப்பட்டிருப்பதினால், அங்கங்குப்

பயணம் போவதற்குத் தூரம் இவ்வளவென்றல்ல, காலம் இவ்வளவென்று குறிக்கப்படும்) புகைக்கப்பல்கள், அங்குள்ள சகல பட்டணத்தார்களுக்கும் போதுமான அளவு தண்ணீரை அங்கங்கே கொண்டு செலுத்துவதற்குத் தகுதியான யந்திரங்கள், வீடுகளிலும் வீதிகளிலும் விளக்கு ஏற்றுவதற்கு ஆவி, இவை முதலான எத்தனங்கள் அனைத்தையும் தங்கள் முயற்சியினால் ஏற்படுத்தியிருக்கிறார்கள்: பிரித்தானிய இராச்சியத்தின் குடிகள் பெற்றிருக்கிற சுயாதீனமும் செல்வமும் பல காரணங்களால் விருத்தியாகின்றன; அவற்றுள் மேற்சொல்லிய முயற்சியும் ஒன்றாம்.

எந்தத் தேசத்தாரைப் பார்க்கிலும், பிரித்தானிய இராச்சியத்தார் ஒருவருக்கொருவர் வெகு தாரதம்மியமுள்ளவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் பிரபுகள், துரைமக்கள், காணியாட்சிக்காரர், வர்த்தகர், வேலைக்காரர் என்று ஐந்து வகுப்பானவர்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். இவ்வளவு தாரதம்மியம் உண்டாயிருந்தும், அவர்கள் ஒருவருக்கொருவர் அதிக பட்சமாய் நடந்துகொள்வார்கள். அங்கிலோதேசம் ஜனம் அதிகரித்த தேசமாயிருப்பதினால், அங்குள்ள குடிகளில் அனேகர் ஜீவனம்பண்ண வகையில்லாத ஏழைகளாயிருக்கிறார்கள்: ஆதலால், அவர்களுக்கு நன்மையாக அனேக தரும சகாயங்கள் நடந்துவருகின்றன.

அங்குள்ள ஆளுகை ஏகாதிபத்தியமுமல்ல, குடியரசுமல்ல; ஒரு அரசனும், அவருக்கு ஆலோசனைத்துணைவரான மந்திரிகளும், மகாபிரபுகள், ஜனப்பிரதிநிதிகள சேர்ந்த சபையாரும் ஏற்படுத்துகிற சட்டங்களே தேசத்தின் பிரமாணங்களாம். பெரியோர் சிறியோர் எவர்களும் அந்தச் சட்டங்களுக்கு அமைந்து நடக்கவேண்டும். எவன் பேரிலாவது குற்றம் சுமத்தப்பட்டால், சபை கூடி, அவன் குற்றத்தை நன்றாக விசாரித்து, பூரணமான சாட்சி

கண்டாலொழிய, அவனுக்கு அபராதம் குறிப்பதும், சிறைச்சாலையில் இருக்கும்படி தீர்ப்புச் செய்வதும் இல்லை. அங்கே பார்லிமென்ட் என்னும் தேசசபையொன்று ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. அந்தச் சபையின் உத்தரவில்லாமல் வரிப்பணம் வாங்கக்கூடாது. அது மேற்சபை, கீழ்ச்சபையென்று இரண்டு வகுப்பாய் இருக்கின்றது. மேற்சபையிலே தலைமையான பிரபுகளும், சபைத்தலைவராகிய அத்தியட்சரும் சேர்ந்து, ஆயுள் பரியந்தம் அதை விட்டு நீங்காதிருப்பார்கள்; கீழ்ச்சபையிலே சாதாரண ஜனங்களால் அப்போதப்போது தெரிந்து ஏற்படுத்தப்படுகிற பிரதிநிதிகள் சேர்ந்திருப்பார்கள். அந்தப் பிரதிநிதிகள் கல்விமான்களும் செல்வருமாயிருக்கவேண்டும். எவர்களும் தங்கள் இஷ்டத்தின்படி எந்த விஷயத்தையும் அச்சிட்டுப் பிரசித்தஞ்செய்யலாம். எந்தச் சமயங்களையும், கொள்கைகளையும் அனுசரிக்கலாம். அவனவன் தன் உள்ளத்தின் கருத்தைப் பயமில்லாமற் பேசுவான். நியாயப்பிரமாணத்தை மீறுவது ஒன்றுதவிர, வேறு என்ன செய்தாலும், பேசினாலும், அதற்கு இராஜதண்டனை வருமென்று ஒருவரும் பயப்படவேண்டியதில்லை. அங்கிளோ தேசத்தாரைப் போலத் தேச நியாயப்பிரமாணங்களுக்குக் கீழ்ப்படிந்து அவைகளைப் போற்றி நடக்கிறவர்களுமில்லை; அவர்களைப் போல் அத்தனை சுயாதீனமும், ஒழுங்கும், இராஜவணக்கமும், குலாசாரமுமுள்ளவர்களுமில்லை.

அங்கிளோ தேசத்தாருக்குள்ளே சாதாரணமாய் வழங்குகிற விநோதங்கள் யுத்தாப்பியாசம், படகு ஓட்டுதல், பலவகைப் பந்து விளையாட்டு முதலியவைகளாம். அங்குள்ள யோக்கியர்கள் அதிக ஐக்கசம்பந்தமாய்க் கூடி, உல்லாசமாய் விநோதம்பண்ணி, விருந்து கொண்டாடுவார்கள். அங்கிளோ அரசர்கள் முக்கியமாய் வாசம்பண்ணு

கிற ஸ்தலம் இராஜதானியாகிய லன்டன் பட்டணமாம்: அங்கே மனரம்மியத்துக்கும், நாகரிகத்துக்கும் ஏற்றவைகளையெல்லாம் திரவியத்தினுலே சம்பாதிக்கக் கூடியதாயிருக்கின்றது. சகல வித்தைகளிலும், கைத்தொழில் முயற்சிகளிலும், சங்கீத பரீட்சையிலும் சமர்த்துள்ள பெயர்கள், அங்கங்கிருந்து குறித்த காலங்களில் இராஜதானிக்குப் போய், தங்கள் சாமர்த்தியங்களைக் காட்டி, அவரவர் விவேகத்தின் தாரதம்மியப்படியே வெகுமதி பெற்றுப் போவார்கள். பிரித்தானிய இராச்சியத்தார் வீடுவாசலுக்குரிய அனுபோகங்களில் மிகவும் விருப்பமுடையவர்கள். குடும்ப ஒழுக்கமும், அலங்காரமும் அங்கிருக்கிற தலைமையான ஜனங்களாகிய பிரபுகள் வீடுகளிலும், நடுத் தரமானவர்களாகிய துரைமக்கள் வீடுகளிலும் பூரணமாய்க் காணப்படும். விசேஷமாய் நாட்டுப் புறங்களில் வாசமாயிருக்கிற உயர்ந்த நிலைமையிலுள்ள துரைசானிகள் சிறந்த ஒழுக்கமுடையவர்கள். அங்கிளோ இராக்கினியாகிய விக்தோரியாவையே ஸ்திரிகளுக்குரிய சகல குணதிசயங்களும், சுகிர்த இலட்சணங்களும் ஒன்ருகச் சேர்ந்த திஷ்டாந்தமாய்க் காணலாம்.

சாஸ்திரம், சரித்திரம், தத்துவநூல் முதலிய கல்விகளில் அங்கிளோதேசத்தார்கள் அதிக வல்லவர்களென்பதாய் உலகமெங்கும் கீர்த்தி பெற்றிருக்கிருர்கள். கவி பாடும் திறத்தில் அங்குள்ள வித்துவான்களை வெல்லத்தக்க நிபுணர் இற்றவிதேசத்திலும் இல்லை. சிற்பநூல், சங்கீத வித்தை இரண்டிலும் அவர்கள் வேறு சில சாதியார்களுக்குச் சமானரல்ல: ஆகிலும், அங்கே சித்திரவேலையிலும், கொத்துவேலையிலும் முதன்மையான சாமர்த்தியமுடைய சிலர் இப்பொழுதும் இருக்கிருர்கள், முன்னும் இருந்தார்கள்.

எப்படியிருந்தும், நெசவு முதலிய கைத்தொழில்களிலே

தான் அங்கிலோதேசம் அதிகமாய்ப் பெயர்பெற்றது. அங்கே திருத்தமான யந்திரங்கள் மூலமாய்ப் பல சாதாரண அலுவல்கள் நடத்தப்படுகின்றன. அப்படி மறு தேசங்களில் இல்லை. கூர்மையான ஆயுதங்கள், பலவகை மட்பாண்டங்கள், பளிங்கு, யந்திரம், பதமிட்ட தோல், ஆட்டுமயிர்ப்புடைவை, பருத்திநூற்புடைவை, பீர், போர்ட்டர் என்னும் பானவகைகள் ஆகிய இவைகளைச் செய்யும் திறத்தில், அவர்களுக்கு எந்தச் சாதியாராவது ஒப்பானவர்களல்ல. நார்ப்பட்டு, இந்திரவர்ணச்சித்திரப்பட்டாடை, இரத்தினக்கம்பளம் முதலான நெசவுப்பொருள்களில் விசேஷித்தது ஐர்லன்ட்தேசம்; சிறந்த சால்வைகளாற் பெயர்பெற்றது ஸ்கொத்லன்ட்தேசம்; ஆகிலும் பிரித்தானிய இராச்சியத்திலே விசேஷித்திருக்கின்ற வஸ்துக்களையெல்லாம் தனித்தனி இங்கே சொல்வதற்கு இடம் போதாது-வேளாண்மை முயற்சி விருத்தியடைகின்றது; ஆடுமாடுகள் கருத்தாய்ப் பராமரிக்கப்படுகின்றன. அங்குள்ள காணியாட்சிக்காரர் அதிக செல்வாக்குடையவர்கள். வெப்பம் குளிர்ச்சி இரண்டும் சமமாயிருக்கும். வெப்பமாவது, குளிர்ச்சியாவது ஒருபொழுதும் அளவுக்கு மிஞ்சுகிறதில்லை: ஆகிலும், மாரிகாலத்திலே சற்று அதிக குளிர் உண்டு; அப்பொழுது, மடுக்களிலும், சிற்ருறுகளிலுமுள்ள தண்ணீர் கற்போல உறைந்துபோவதினுல், அக்காலத்தில் அங்குள்ளவர்களுக்கு விநோதம் காலில் உருளை தொடுத்துக் கட்டிப்பனிமேற் சறுக்கி விளையாடுவது. தெற்கு நாடுகளிற் கோடைகாலத்திலே வெப்பமும் சற்று அதிகந்தான். அப்போது கீழ்த் தரமான திராட்சக் குலைகள் பருவத்துக்குமுன் வெயிலிற் பழுத்துப் பழுதாய்ப்போவது வழக்கமாயிருப்பதினுல், தோட்டக்காரரும் பணக்காரரும் வெப்பம் உட்செல்லாதபடிக்குப் கண்ணுடிவீடு கட்டி, அதற்குள்ளே வகைவகையான புஷ்பச்செடிகளையும், பழம் தரும் மரங்களையும் வைத்து

வளர்ப்பார்கள். வடக்கே இருக்கின்ற ஸ்கொத்லண்ட் தேசத்தில் மலைகள் செறிந்திருக்கின்றன. அங்கே குளிர் அதிகம்; நிலம் வளப்பத்திற் குறைவுள்ளது: ஆகிலும், அங்குள்ள குடிகள் பயிரிடுகிற தொழிலில் மிகவும் கைவந்தவர்களாயிருப்பதினால், அவர்கள் நிலத்தின் கூறாய் உண்டான அந்தந்தக் கெடுதல்களை உபாயமாய் விலக்கி, அதை நன்றாகப் பண்படுத்திப் பயிரிடுகிறார்கள். எப்படியும் விஸ்தாரமான பூமி செடிபற்றி உபயோகமற்றுக் கிடக்கின்றது. ஐர்லன்ட்தேசத்திலே வெப்பம் குளிர்ச்சியால் உண்டாகிற சுவாத்தியமும் நிலவளமும் பல பேதமாயிருக்கும்; அங்கே மழை அடுத்தடுத்துப் பெய்து நிலத்தில் அதிக நீர் ஏறுவதினால், அது எப்பொழுதும் ஈரப்பிடிப்புள்ளதாயிருக்கும். வடக்கு மேற்கு இரண்டு புறங்களிலும் குளிர் அதிகம்; ஆகிலும் தெற்குப் பூமி வளமும் செழிப்புமுள்ளதாயிருக்கின்றது. அங்கிளோதேசத்தில் உண்டாகின்ற முக்கியமான பயிர்வகை, மரவகை, தானியவகைகள்—கோதுமை முதலியன, ஹொப், மதுரமான பழம் தரும் மரங்கள், கீரைகள், வெட்டுமரங்கள் இவைகளே: மிருகங்கள்—ஆடுமாடுகளும் குதிரைகளுமாம். அங்கே பல சாதியான குதிரைகள் விர்த்தியாகின்றன; அவைகள் ரூபத்திலும் உபயோகத்திலும் அராபிய குதிரைகளுக்கு இரண்டாம் தரமானவைகளாயிருக்கின்றன. பாற்கட்டி, பலவகைப் பன்றியிறைச்சி, பழங்கள், கறிபதார்த்தங்கள் முதலான வேறு அனேக வஸ்துக்களும் உண்டு. ஐர்லன்ட்தேசத்தில் வாற்கோதுமை முதலிய பல சாதியான கோதுமைகள், சோளம், சணல், ஆட்டுரோமம், மாடுகள், பன்றிகள், ஆடுகள், பன்றியிறைச்சிவற்றல், வெண்ணெய், ஓத் என்னும் தானியத்தின் மா, பல மதுரமான கனிகள் இவையெல்லாம் உண்டு. ஸ்கொத்லன்ட்தேசத்தில், ஆடு

மாடு, மான், முயல், நரி, முதலான மிருகங்களும், பல வகையான பட்சிகளும், மச்சங்களும், கோதுமை முதலிய தானியங்களும், ஒத்மாவும், மதுபானவகைகளும் உண்டு.

பிரித்தானியதேசத்திலே துஷ்டமிருகங்களாவது, விஷசெந்துக்களாவது கிடையாது. மேற்குறித்த தேசங்களின் இயற்கையான காட்சி பல பேதமுள்ளதாய் மிகவும் சிறப்புப் பொருந்தியிருக்கின்றது. ஸ்கொத்லன்ட், உவேல்ஸ், அங்கிளோதேசத்தின் வட பகுதி, இம்மூன்றும் மலைசெறிந்த இடங்களாம். அங்குள்ள மலைகள் அத்தனை உயர்ந்தவைகளல்ல. அவைகளுக்குள் உயர்ந்த மலையாகிய வென்நெவிஸ் ருOOO அடி உயரத்திற்குப் பதிவாயிருக்கும். அங்குள்ள ஆறுகளும் மடுக்களும் தேசத்திற்கு அலங்காரமாயிருக்கின்றன. அங்கிளோதேசத்திலுள்ள நடு நாடுகளும், தென் நாடுகளும் அதிக செழிப்பும் சிறப்புமுள்ளவைகளாம்; அங்கிருக்கிற குடிகள் மிகவும் பணிக்காய்ப் பயிரிடுவார்கள். அங்கே பிரபுகளும் சீமான்களும் அப்போதப்போது சௌக்கியத்திற்காகப் போய்த் தங்குவதற்குச் சிங்காரமான தோப்புகளும், அலங்காரமான மண்டபங்களும் அனேகம் உண்டு. அந்தத் தோப்புகளில் பசுமையான புல் நிலங்களும், விதம்விதமான புஷ்பச்செடிகளும், பழம் தரும் மரங்களும், உயரமான ஓக்ஸ், எல்ம்ஸ், பீச்சு முதலிய காட்டுமரங்கள் நிரைநிரையாய் வைக்கப்பட்ட பகுதிகளும் உண்டு. பெரியோர்களும் பிரபுகளும் நாட்டுப்புறத்திலுள்ள தங்கள் மாளிகைகளுக்குப் போய், அங்கே அநேக மாதகாலம் தங்கி, அங்கிருக்கிற இயற்கையான சர்வ அலங்காரங்களையும் கண்டு கொண்டாடுவார்கள். அவர்கள் தங்கள் பட்டணவாசங்களில் இருந்து வேடிக்கை விநோதம்பண்ணும் சமயங்களில் எப்

படியோ, அப்படியே அங்கேயும் தங்களைச் சார்ந்த ஜனங்களுக்கு உபகாரம் செய்வார்கள்.

அங்கிளோதேசத்தின் நிலப்பரப்பின் அளவை மறு தேசங்களுடன் ஒத்துப்பார்க்குமிடத்தில், அங்குள்ள பட்டணங்கள் மற்ற எந்தத் தேசத்திலுள்ளவைகளைப் பார்க்கிலும் அனேகமாயிருக்கின்றன. அத்தேசத்தின் இராஜதானி லன்டன் என்பது. அது விஸ்தாரத்திலும் ஐஸ்வரியத்திலும் உலகத்திலுள்ள பட்டணங்களுக்குள்ளெல்லாம் தலைமையானது. மான்செஸ்ற்றர், பெர்மிங்ஹாம், ஷெப்பீல்ட், லீட்ஸ் முதலான பட்டணங்களில், பல விதக் கைத்தொழில் முயற்சிகள் நடந்துவருகின்றன. லிவர்பூல், பிறிஸ்ற்றல், ஹுல், போர்ட்ஸ்மத், பிளிமத், ஸவுதாம்ப்டன் என்பவைகளும்; ஐர்லன்ட்தேசத்திலே பெல்பாஸ்த், டப்லின், கார்க் என்பவைகளும் ; ஸ்கொத்லன்ட்தேசத்திலே கிலாஸ்கோ, லீத் என்பவைகளும்; உவேல்ஸ்தேசத்திலே ஸுவான்ஸியா, ஹொல்லிஹெட்முதலானவைகளுமே துறையடுத்த முக்கியமான பட்டணங்களாம். அங்கெல்லாம் கப்பல் செப்பனிடுவதற்கு விஸ்தாரமான வேலைத்துறைமுகங்கள் உண்டு. அந்தத் துறைகளில் ஏற்றுமதி இறக்குமதிபண்ணுகிற வியாபாரச் சரக்குகள் அனேகம்; அப்படி உலகத்தில் எங்கும் இல்லை. பிரித்தானிய இராச்சியத்திலே பெரிய ஆறுகள் இல்லை. இருக்கிறவைகளுக்குள் தெம்ஸ், ஸெவர்ன், மெர்ஸி, ஹம்பர், போர்த், டே, கிலைட், ஷானன், லிவி என்பவைகளே முக்கியமான ஆறுகளாம்.

எத்தேசத்தவர்களும் அங்கிளோ தேசத்தை மிகவும் மெச்சி மதிக்கிறார்கள். சர்வதேசத்தார்களும் கைத்தொழில் முயற்சியால் செய்த விதம் விதமான பண்டங்களை க௮௫௧-ம் ஆண்டு அங்கிலேயர் ஒன்றாகச் சேர்த்து, ௮௦௦௦௦

பெயர் வரையில் வசதியாய் இருக்கப் போதிய விஸ்தாரமான கண்ணாடி மண்டபம் ஒன்றைப் பணிக்காய்க் கட்டி, அதில் அந்தப் பண்டங்களை வகைவகையாய் வைத்துக் காட்டினார்கள். அதைப் பார்க்கும்படி பல தேசங்களிலுமிருந்து திரளாகப் போய்க் கூடின ஜனங்கள், அந்த நூதனக் காட்சியைக் கண்டு, மனமகிழ்ந்து, மண்டபத்தின் பணிக்கை வியந்து புகழ்ந்தார்கள். அப்புறம் அங்கிலேயர் அந்த வஸ்துக்களைக் கிரயப்படுத்தி, கண்ணாடியைத் தட்டு தட்டாய்க் களற்றிப் பத்திரப் படுத்திவைத்தார்கள். கொஞ்சக்காலம் சென்றபின், பட்டணத்திற்குச் சமீபமான ஒரு இடத்திலே முன்னிலும் அதிக உறுதியான வேறு ஒரு கண்ணாடி மண்டபம் கட்டப்பட்டது: அதில் இயற்கையும் செயற்கையுமான பல நூதன பண்டங்களைச் சேர்த்து ஒழுங்காய் வைத்துக் காட்டிவருகிறார்கள். அந்த விசேஷக் காட்சிகளைப் பார்த்தவர்களெல்லாரும் அங்கிளோ சாதியாருடைய செல்வத்தையும், விவேகத்தையும், சீர்த்தேற்றத்தையும், விடாமுயற்ச்சியையும் குறித்துப் பாராட்டி வருகிறார்கள்.

கொஞ்சக் காலத்திற்குமுன்பு துருக்கியருக்கும் ருஷியருக்கும் யுத்தம் நேரிட்டபொழுது, அங்கிளோ பிராஞ்சிய சாதியார் துருக்கியருக்குச் சகாயம் செய்ய உடன்பட்டு, அவர்கள் சத்துருக்களாகிய ருஷியருடனே மிகுந்த வீரதீரமாக யுத்தம்செய்து, தங்கள் வல்லமையைக் காண்பித்தார்கள்.

---

BRIEF AND FAMILIAR

# SKETCHES

OF THE

DIFFERENT COUNTRIES OF THE WORLD

BOOK 1—EUROPE.

MADRAS:

PRINTED AT THE PUBLIC INSTRUCTION PRESS.

1857.

